உ
கடவுள் துணை.

# குவலயாநந்தம்.

எட்டயபுரம் ஸம்ஸ்தானாதிபதியாகிய
மஹாராஜ ராஜபூஜித மஹாராஜராஜஸ்ரீ
இராஜ ஜகத்வீர
ராமகுமார எட்டப்பமஹாராஜா ஐயனவர்கள்
வேண்டுகோளின்படி
ஷை ஸம்ஸ்தானம் ஸம்ஸ்கிருதவித்வான்
சங்கரநாராயண சாஸ்திரிகளவர்கள்
செய்த மொழிபெயர்ப்பும்
ஷை ஸம்ஸ்தானம் தமிழ் வித்வான்
முகவூர் - மீனாக்ஷிசுந்தரக் கவிராயரவர்கள்
சுலோகங்களின் மொழிபெயர்ப்புக்கிசைத்த செய்யுட்களும்
சென்னை பச்சையப்பன் காலேஜ் ஸம்ஸ்கிருதபண்டிதர்
திருமலை ஈச்சம்பாடி சதாவதானம்
ஸ்ரீநிவாஸாசாரியரவர்களாலும்
தமிழ் உபாத்தியாயர் ஆனூர்
சிங்காரவேலு முதலியாரவர்களாலும்
பார்வையிடப்பட்டு
ஷை ஸம்ஸ்தானாதிபதியாகிய
மஹாராஜ ராஜபூஜித மஹாராஜராஜஸ்ரீ
இராஜ ஜகத்வீரராம வேங்கடேசுவர
எட்டப்ப மஹாராஜா ஐயனவர்களின்
கனிஷ்டபிதாவும் யுவராஜாவுமாகிய
மஹாராஜ ராஜபூஜித மஹாராஜராஜஸ்ரீ
வேங்கடேசுவர எட்டுப்பாண்டியனவர்களால்

சென்னை
செங்கல்வராயநாயகரது ஆர்பனேஜ் அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டன.
1895.

# அலங்காரங்களின் பெயர்.

குமரன் துணை.

# சாத்துகவிகள்.

---

## கடிகை - சுப்பிரமணியப்புலவரவர்களியற்றிய

இருபத்தெண்சீரடி யாசிரியவிருத்தம்.

பூமேவுமிளசைச்சமஸ்தானமதிலரசு
    புரியுமனுமுறையின்விதியான்
புரியுமெண்மட்டுவாரெண்வகையுறுபயினிலகம்
    பூரித்துமருவுநிதியான்
புவிமதிக்குந்திருமாரெட்டமகுடாதரன்
    பூடணமொளிச்சொரூபியான்
புகழுறுமவனாவேங்கடேசுரெட்டமனெனும்
    புலவர்குருநிகருமதியான்
மேவுநகர்கடிதிகுமரன்மேனுள்ளமைய
    வெற்பிறுறைமுனிவர்கேட்க
விரும்பியுரையெண்முதலிலக்கணந்திருவிமே
    வியவணிபொருளாமுன்னோர்
வியந்தியற்கவியாலமைத்தனர்கள்வடநூலின்
    மிகுபேதமதனிலுயர
மேவாததாலநன்பேதமிதின்மேலவே
    விளம்புதியெனப்புகலவே
நாமேவுவடகலையினெல்லையுறுசுருதியின்
    சொல்லையுமுணர்ந்தநேமன்
தொமுகுலம்விளங்குசநகரசாஸ்திரியெனவே
    துலங்கந்தரி இயநாமன்
றுண்ணிவாயிலக்கணவிலக்கியஞ்சந்திரிகை
    தோன்றுவடநூலின்வழியாந்

துதிமருவுதமிழின்மொழிபெயர்த்துதவவிரு
சுவையுமதனொடுமருவ
வாமேவுமவ்வழியதாத்தமிழ்வழங்கெல்லை
யதினுறப்பலகவிகளா
லறிஞர்சபைகேட்கவும்வேண்டியயனடையவு
மணிநூலையிளசைமூதூ
ரதனிலவ்வளையனுளேவலகாரணமாக
வமைகுவலயாநந்தமா
வணிகொண்முகவூரன்மீனாட்சிசுந்தரகவிரு
னன்புறப பாடினனரோ.

பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பரம்பரனுக்கினியான்முன்வடநூலாந்
தாய்வயிற்றுற்பவித்தவைந்து
பாவையர்கட்கிளையாளாப்பார்ப்பவர்கட
கலங்காரப்பாவையாகி
வரம்புகடவாதுறைபோரமங்கைதனை
முன்புபலர்வழுக்கடர
வளர்கவியானுசிலபணியிட்டவைவிடுத்தா
ரியாருமவள்வருணபேத
நிரம்பவுணர்வதற்கரிதாநின்றனள்சங்
கரசாஸ்திரிநியதியாச்செய்
நிகழுமொழிபெயர்ப்பாலப்பேதம்யா
வருமறியநிதமீசன்முள்
சிரம்பரவுமுகவூர்வாழ்மீனாட்சி
சுந்தரமால்திரும்பச்செய்யுட்
டிகழணிபூட்டிளசைநகாகருமாரெட்டேந்
திரற்குமணஞ்செய்வித்தானே.

---

# எட்டீசுரக்குருக்கள் அவர்களியற்றிய

## நேரிசையாசிரியப்பா.

சீர்திகழ்கயிலையனுசெழுங்கிரியதனி
லோர்திகழுமையவளினியகண்களிப்பத்
தினந்தினம்பிரமனுதியரடிபரவுந்
தனந்தனுவெனாநடித்தருள்செயும்பரமன்
மந்தமாருதந்திகழ்மலயமாமுனிவும்
கந்தநாளுரைத்தவருந்தமிழ்ப்பரவும்
எல்லையுமுறையையிலக்கணத்தணிமைப்
பலவகையியலாய்ப்பகர்ந்தனர்பலரும்
அவற்றுடபேதமற்றறிந்திடலரிதால்
நவிற்றுமப்பேதநாடவெளிதா
விளங்கிடும்வடநூல்விதிப்படிமேன்மை
வளர்ந்திடுந்தமிழ்நூல்வழுத்துகவெனவே
அமராதம்முலகினுமதிவளங்கெழீஇக்
கமலவாவிகளுங்காமர்பூஞ்சோலையும
மாடமாளிகைகளும்மாமணிசசிகரமுங
கூடகோபுரமுங்குலவுறுமிளசையில
அரியணைமீதிலவிர்மதிக்குடைகீழ்த்
தரியலர்குழுமித்தாழ்ந்துபரவப
பொன்னிறமருவிப்புனைதவிராழி
மன்னுமாதவனெனமகிழ்ந்தினிதிருந்தே
கார்த்திகேயனங்கழுகுமாமலைவாழ்
மூர்த்திதாளிணைமலர்முடியினிற்சூடிக்
கிளர்ந்திடுஞ்செல்வமுங்கீர்த்தியுந்தழைய
வளர்ந்துமன்னுயிர்கண்மகிழ்வுறீஇம்லக
மண்டலமுழுதுமனுநெறிகாககும்
எண்டிசைபுகழ்குமாரெட்டமதயாநிதி
அன்னவன்பின்னுவவதரித்திராகவன்

# சாத்துகவிகள்.

பின்னவாக்கிணையாப்பிறங்கிடுபுனிதன்
சங்கமுத்தமிழ்ப்பயிர்தழைவுறவளர்க்கும்
எங்கண்மால்வேங்கடேசரெட்டேந்திரன்
பணித்தருள்வண்ணம்பரவியவடநூற்
கணிபெருங்கடற்கரைகடந்தமுதறிவினன்
சங்கரநாராயணசாஸ்திரியெனு
மங்களவேதியன்வடநூலுரைவழி
யுவமையாதியாயுறுமணியிலக்கணம்
நவிலிலக்கியமொடுநாடுசந்திரிகையைத்
தெற்றெனத்தமிழிற்செய்புவழங்கக
குற்றமகலக்குறிப்பிறழாது
பல்கலைவாணரும்பயின்றகமகிழ
நலகவித்துறைமுதனவில்பலசெய்யுளாற்
குவலயாநந்தமாங்குவலயாநந்தம்
நவரசமுடனேநலங்கெழீஇக்குலவப்
பாடியிவ்விளசையம்பதிவேத்தவையின்
நாடொறும்புகழ்தன்கரங்கேற்றினன்
முகவூரொன்றுமூதூர்தன்னில
ஸ்ரீசமகிர்வாகவெறுதினம்வாழும்
தாண்டவராய்முத்தமிழண்ணா
பண்டசுந்தரமெய்ந்நாவலனே.



# முகவுரை.

உலகத்தில் வழங்குங் கல்விகளனைத்து மிலக்கண வமைதியின் வழங்கலழகுடைத்து. அவற்றுட் செந்தமிழ்கிலக்கணம் எழுத்துசசொற்பொருள் யாப்பணியெனைவகைத்து. அவ்வைந்தனுளிறுதியிற கூறிய அணி யிலக்கணம், “மாடச்குச்சித்திரமும் மாநகர்க்குககோபுரமும் ஆடமைத்தோணல்லாக் கணியுமபோல்” இயற்கையின் விளங்குஞ் சொற்பொருளியைந்த யாப்பிற்குப் பன்னூலாராய்ச்சியுடையார் மனமகிழ்விக்கத்தக்க பலசதுரப்பாட்டா னணிபெறச செய்வதுபற்றி யணியிலக்கணமெனக் காரணக்குறிபெற்றது.

இவ்வணி யிலக்கணம் வடநூற்கடலுண்மிக விரிவாகவும் பற்பல சாதுரியமாகவும் தண்டியாசிரியர் முதலிய சான்றோரா லியற்றப்பட்டிருக்கின்றது. அஃதம்முறையானே கவிசொலவிரும்பிய கவிகட்குச சொன்னெறி சான்ற நன்னெறித்து. அத்தண்டியலங்காரத்தினைத் தமிழ் நூலாசிரியரும் மொழிபெயர்த்து வழங்குவாராயினர். அவ்வணி சொல்லணியெனவும் பொருளணியெனவு மிருவகையாகவிருக்கின்றது.

அவற்றுள் பொருளணியை வடநூலிற் சிறந்த மகாகவியாகிய காளிதாஸர் உவமையணிமுதல ஏதுவணியீறாக நூறணிகள்விளங்க இலக்கண விலக்கியமமைந்த சுலோ

கங்களாக வியற்றிச் சந்திராலோகமெனப் பெயரிட்டனர். அந்நூலுக்குப், பெயர்பெற்ற மகாவித்வான் அப்பையதீக்ஷித ருரையிட்டு ஆங்காங்குற்ற பல சுலோகங்களை யுதாரணங்களாகக் காட்டியும், அவற்றிற் கின்றியமையா வலங்காரங்களை வாக்கியரூபமாகத் தெரிவித்தும், நூற்றுக்குமேலூற்ற இரஸவதலங்காரமுதல் ஏகவாசகாநுப்பிரவேச ஸங்கராலங்காரமீறாக இருபதணிகளைச் சேர்த்தும், குவலயாநந்த மெனப்பெயருள்ள வேறோர் நூலாக முடித்தனர். அங்ஙனேயே யணிநூல்களினு மெளிதினுணர்ந்து அம்முறை கவிகூற மிகச்சாதனமாக விருக்கின்றது.

இவ்வகைச் சிறப்புற்ற வக்குவலயாநந்தத்தின் பொருட்களைப் பல்காலாய்ந்து வொல்காப்புகழுற்றவர்களும் "தாமின்புறுவ துலகின்புறக்கண்டு காமுறுவர்கற்றறிந்தார்" என்றபடி யப்பொருள்களைச் செந்தமிழ் நாவலருங் கூட்டுணை விருப்புற்றவர்களும் திருநெல்வேலி ஜில்லாவைச்சார்ந்த எட்டயபுரம் ஸம்ஸ்தானாதிபதிகளுமாகிய மஹாராஜ ராஜபூஜித மஹாராஜராஜஸ்ரீ இராஜ ஜகத்வீர ராமகுமார எட்டப்பமஹாராஜா ஐயனவர்கள் தங்கள் ஸம்ஸ்தான ஸபையிற் பண்டிதசிகாமணிகளாக விளங்கி வல்லீபரிணய சம்புபிரபந்தத்தை யியற்றிக் கவிகேஸரியென்ற பெயர்பெற்ற பிரம்மஸ்ரீ ஸ்வாமிதீக்ஷிதரவர்களின் மாணாக்கருந் தங்கள் ஸம்ஸ்தான ஸம்ஸ்கிருத பண்டிதருமாகிய சங்கரநாராயண சாஸ்திரிகளைக்கொண்டு சென்ற 1889 ஆண்டிற் றெளிவுறத் தமிழின் மொழிபெயர்ப்பித்துந் தங்கள் ஸம்ஸ்தானந் தமிழ்வித்வான் முகவூர் - மீனாக்ஷிசுந்தரக கவிராயரவர்களாற் சுலோகங்களின் மொழிபெயர்ப்

புகளைச செய்யுட்களாகவமைப்பித்தும் அவ்விதம் முற்று ப்பெற்றவணிநூலைத் தங்கள் சபையிலுள்ள வடநூற் றென்னூற் புலவர்களுடன் குழுமிபபயின்று வந்தனர்.

இத் தென்னூற் குவலயாநந்தத்தைக குவலயமெங்கும் விளங்கச செய்ய விருப்புற்றவர்களும், விற்பன்னர்களும், கற்பனைக்கடல்களு மிரஸிக சிகாமணிகளும் மேற்படி ஸம்ஸ்தாநாதிபதிகளாகிய மஹாராஜ ராஜபூஜித மஹாராஜராஜஸ்ரீ இராஜ ஜகத்வீரராம வேங்கடேசுவர எட்டப்பமஹாராஜாஐயனவர்களின் கனிஷ்டபிதாக்களும் யுவராஜா அவர்களுமாகிய மஹாராஜ ராஜபூஜித மஹாராஜராஜஸ்ரீ வேஙகடேசுவர எட்டுப்பாண்டியனவர்கள் இப்பொருளணிநூலைச சென்னை பசசையப்பன் காலீஜ் என்னுங்கலாசாலை ஸமஸ்கிருதபண்டிதரவர்களாகிய திருமலை ஈச்சம்பாடி சதாவதானம் ஸ்ரீமத் உ. வே. ஸ்ரீநிவாஸாசாரியாரவர்களாலுந் தமிழ உபாத்தியாயர் ம-ா-ா-ஸ்ரீ ஆனூர் சிங்காரவேலு முதலியாரவர்களாலும் பரிசோதிப்பித்து 1895-ஆண்டிற் சென்னை செங்கலவராய நாயகரது ஆரபனேஜ் அசசுக்கூடத்தி லசசிடுவித்தனர்.

இந்நூல் எட்டயபுரம் ஸம்ஸ்தானத்தினின்று வெளிப்பட்டமை தோன்ற மேற்படி ஸம்ஸ்தானம் மஹாராஜா அவர்களை யொவ்வொரு கட்டளைக்கலித்துறைகடோறு முன்னிலையாக வைத்திருக்கின்றது.

சிலேஷை முதலிய சிற்சிலவிடங்களிற் செய்யுட்களமைதலுக்கேற்பச் சுலோகப்பொருள்கள் சில பேதப்பட்டிருக்கின்றன.

மேற்கூறிய மஹாராஜா அவர்களாதரணையிலுள்ள சுப்பிரமணியஸ்தலமாகிய கழுகுமலையையும், விஷ்ணு ஸ்தலமாகிய சாத்தூரையு மாங்காங்கு குறிப்பித்திருக்கிறது.

இந்நூல் புதிய மொழிபெயர்ப்பாகவும் முதற்பதிப்பாகவுமிருத்தலா லேதேனும் வழுஉக்களுளவாயின் அவற்றைச் சீர்திருத்திச் செயற்பால முறையைத் தெரிவிக்கி னிரண்டாம்பதிப்பிற் றிருத்தியச்சிடுவதுட னப்பண்டிதர்களுக்கு நன்றியும் பாராட்டப்படும்.



குமரன்துணை.

# குவலயாநந்தம்.

## தேவிவணக்கம்.

கட்டளைக்கலித்துறை.

பொன்னா ருலகத் தரிவையர் வாசனைப் பூங்குழலின்
மன்னு மதுரப் புதுத்தே னருந்திசை வண்டினங்கூறு
தென்னாக நின்றமெ யம்பிகை பாதச் செழுங்கமல
மென்னாளு மேதுணை யான்பொ ரும்பாவிறை வேறுத்தே.

நூல்.

### க-வது உவமையணி.

(உபமாலங்காரம்.)

செய்யுள்.

இருபொரு ளொக்குந் தருமொப் புமைவெளி யிட்டிலங்க
வருவ துவமை யணியாம் புகழுயர் வானதியில
மருவின தோதிமம் போலென் னிலகிய மவந்ததுசிரந்
திருவள ரொட்ட புரம்வாழ் குமாரொட்ட சிதரனே. (க)

எங்ஙனம், உவமானோபமேயங்களின் ஒப்புமை காவ்ய ரஸத்தில பண்பட்டாரிதயத்தை மகிழ்விக்கத்தக்க படி வெளிப்படையாக விளங்குகின்றதோ அது உவமை யணியாம். இதற்கு புகழென்பதுமுதல் உதாரணம். ஓதிமம்-உவமானம். புகழ்-உவமேயம். போலென்றது

சொல உவமையுருபு. வானதியின் மருவுதல்-பொதுத் தன்மை. இந்நான்கும் விரிந்தமையால் விரியுவமையணி. இதனை வடநூலார் பூர்ணோபமாலங்காரமென்பர்.

வெண்பா.

இந்துவிடத் தைசசிவன்போ லேகுணங்குற் றத்தினைநோ
னந்தெளிவா னேன்கிரக ணம்புரிந்து—முந்தினைதைச்
சேகரங்கொண் டேவிளஙகச செய்துகடை யுற்றதையம்
மாகளத்து ளேயடககு வான,

(குவலயாநந்தம்) இதில் சிவன் உவமானம். தெளிவானேன் உவமேயம். போல் உவமையுருபு. இந்துவையும் விடத்தையும்போன்ற, குணத்தையுங் குற்றத்தையுங் கிரகணம்புரிதல் பொதுத்தன்மை. இவைகளி லுவமானமாகிய சிவனிடத்தில, இந்து விடஙகளின் கிரகணம்புரிதலாவது செய்கையாம். அவற்றுளு மிந்துவைச் சேகரங்கொண டேவிளக்கலென்பது, முடியிலிருத்திப பிரகாசிக்கச செய் தலாம். விடத்தைக் களததுளடககலென்பது, கண்டத் தினுள ளிருத்துதலாம். உவமேயமாகிய தெளிவானே னிடத்தில், குணங்குற்றங்களின் கிரகணம் புரிதல் உணர்ச்சியாம். அவற்றுள்ளுங் குணத்தை முடிகொண்டே விளக்கலென்பது, சிரக்கம்பத்தாற் கொண்டாடி விளங்கச் செய்தலாம். குற்றத்தைக் களத்துளடக்குத லென்பது, கண்டத்தி னின்றும் வெளிவிடாமையாம். இவ்வகை உவமான உவமேயங்களுக்கு ஒரு தன்மையாயினும் பொதுவாக விணங்காவிடினும், விம்பப்பிரதிவிம்ப பாவத் தினுல் இந்து விடமென்பவற்றிற்கும் குணங் குற்ற மென் பவறறிறகும அபேதமெனக்கொள்வதானும், செய்கை யுணாசசி யென்பவற்றிற்குக் கிரகணம் புரிதலென்னுஞ் சொலலொற்றுமை யிருப்பதானும், முடியிலிருத்திப் பிர காசிககச செய்தல் சிரககம்பத்தாற் கொண்டாடி விளங்

கச்செய்த லென்பனைவகளுக்குச் சேகரங்கொண்டே விள க்கலென்னுஞ் சொல்லொற்றுமை யிருப்பதானும், களத்தி னுள்ளிருத்துதல் கண்டத்தினின்றும் வெளிவிடாமை யென்பவற்றிற்குக், களத்துளே யடக்கு வானென்னுஞ் சொல்லொற்றுமை யிருப்பதானு, மிது அபேதாத்தி யவசாய சாதாரண தாமமேயாம் (அதாவது இயற்கையில் வெவ்வேறாய் விளங்கினும், கவியின் கொள்கையால் அபேதமாய்க் கிரகிக்கப்படும் தன்மைகள்) எனக்கொள்க. விம்பப் பிரதிவிம்ப பாவமாவது எற்றேல், உவமை யணிக்கு ஆதாரமாயுள்ள தன்மை உவமான உவமேயங் களுக்குப் பொதுவானதொன்றிராமல், உவமானத்தில் வேறும் உவமேயத்தில வேறுமாயிருக்கினும், அந்தத் தன்மைகளுக்கு ஒன்றோடொன்றுள்ள வொற்றுமையால் அபேதத்தைக்கொண்டு மேற்சொன்ன தன்மைகளை வெவ் வேறாகப் பிரயோகிப்பதாம். இங்கு, விருப்புறச்செய்வ தும வெறுப்புறச் செய்வதுமாகிய பொதுத்தன்மை களால முறையே இந்து குணம் என்பனைவகளையும், விடம் குற்றம் என்பனைவகளையும், அபேதமாகவெண்ணி இவை காரணமாகச் சிவனுக்குந் தெளிவாளனுக்கும ஒப்புமை கூறியதென்க.

---

## தொகையுவமையணி.

(லுப்தோபமாலங்காரம்.)

செய்யுள்.

வாயும் பொதுமை யுவமை யுருபுவ மானமுவ
மேயமொன் றுமபல வுங்குறைந் தாற்றொகை மேவுவமை
சேய மதிநிக ராமுகி மின்பொ னிறத்துமெய்ய
ளேயுங் கயற்கண்ணி யென்ன வுதாரண மெட்டமனே. (உ)

(கு-ம்.) பொதுத்தன்மை முதலிய நான்கனுளொன் றேனும் பலவேனும் மறைந்துவரிற் றொகையுவமையணி

யாம். இதனைவடநூலார் லுப்தோபமாலங்காரமென்பர். இதற்கு "மதிநிகராமுகி" யென்பதுமுதல் உதாரணம். மதிநிகராமுகி யென்பது பொதுத்தன்மைத் தொகை. அஃது "காந்தியாலமதிநிகராமுகி" யென விரிக்கப் பெறுவதா லிங்ஙனங் காந்தியெனும் பொதுத்தன்மையுமைப்போனது குறிபபாற் பிறந்தது. "மின்பொன்னிறத்து மெய்யள்" என்பது "உவமையுருபிலதுவமைத் தொகையே" என்னுஞ் சூத்திரததான் உவமை யுருபுத்தொகை. அது மின்போலும் பொன்னிறத்து மெய்யளென விரிக்கப் பெறுவதாலிங்ஙனம் போலுமென்னுருசொல் தொகுக்கப் பட்டது. "கயற்கண்ணி" யென்பது பொதுமை யுவமை யுருபுத்தொகை. அது கயல்போற் பிறழுங் கண்ணி யென விரிக்கப் பெறுவதா லிங்ஙனம் மேற் காட்டியச் சூத்திரத்தா லுவமையுருபும், உமைப்போனது குறிப்பாற் பொதுத் தன்மையும் பெறப்பட்டனவெனக் கொள்க.

---

## உ-வது இயைபின்மையணி.

(அநந்வயாலங்காரம்.)

செய்யுள்.

உவமான மாயு முவமேய மாயு மொருபொருளே
எவண்மே வலாயின தோவது வேயியை பின்மையணி
இவண்மா மதிமதி போற்காந்தி மானென் றிலக்கியந்தேர்
தவமே விளைசைக் குமாரெட்ட னுமென் றயாநிதியே. ௲

எங்ஙனம், ஒரேபொருள் உவமானமாகவு முவமேய மாகவும் வர்ணிக்கப்படுகிறதோ, அது இயைபின்மை யணி யாம். இதனை வடநூலா ரநந்வயாலஙகார மென்பர்.

---

(சந்திரிகை.) உவமையணி யுரைத்த துணையானே, யது காரணமாகத் தோன்றிய வணிகளுக்குட்பொருந்திய

வர்ணிக்கப்படுமதற்கு அதனோடு ஒப்புமைத்தொடர்பி ன்மையா லிப்பெயர்பெற்றதாமென்க. தொடர்பிலாப் பொருளை வருணிப்பது ஒப்பான வேறு பொருளில்லை யென்பதை விளக்குதற் பொருட்டாமென்க. மதி மதி

---

யொப்புமையுள்ள புகழ்பொருளொப்புமை யணியைக் கூறாது, ஒப்புமை பொருந்தாத வியைபின்மையணியை முற்படக் கூறிய தென்னையெனின்? மூன்றாவ தொப் புமைப் பொருளொன்றில்லை யென்னு மணியினு, மிரண் டாவதொப்புமைப் பொருளொன்றில்லை யென்னவருந் சிறப்புப்பற்றியென்க. ஒரோபொருளுவமானமாகவு முவ மேயமாகவும் வருத லியைபின்மையணியென்றால்,

உமைபோலப் புத்தி புத்தியும்போ லொழுக்கம்
மருவொழுக்கம்போற் புகழாமால்.

என்னும் ரசனோவமை யணியிலும், புத்தி யென்னு மோர் பொருளுக் குவமானத் தன்மையு முவமேயத் தன்மையு மிருத்தலானிதுவு மியைபின்மையணி யாமே யெனின், அற்றன்று-இயைபின்மையணி, ஒருபொருளுக் கொருபொருளால் நிரூபணஞ் செய்யப்படு முவமானத் தன்மை யுவமேயத் தன்மைகளால் விளங்குகிறது. ரச னோவமையணியிற் புத்தி யென்னும் பொருளுக்கு உமை யென்னும் பொருளா லுவமேயத்தன்மையு, மொழுக்க மென்னும் பொருளா லுவமானத் தன்மையுங் கிடைத் தவென்க. ஒரு பொருளுக் கொரோபொருளா லுவமானத் தன்மையு முவமேயத்தன்மையும் நிரூபணஞ்செய்வ தியைபின்மையணி யென்றால், "அந்தரம்போ லம்புதமு மம்புதம்போலந்தரமும்" என்னும் புகழ்பொருளொப்ப ணியில், அந்தரமாகிய வொருபொருளுக்கு அம்புதமாகிய வொரோபொருளால் நிரூபணஞ்செய்யப்படு முவமானத் தன்மையு முவமேயத்தன்மையு மிருத்தலால், இதுவு

போற் காந்திமானுமெனிற் சந்திரனுக்கு வேறு ஒப்பான பொருளில்லையெனப் பெற்றதென்க.

செய்யுள்.

(கு-ம்) பூமி மேல்வெளி யும்வெளி போன்றது
பூமி சூழ்கட லுங்கடல் போன்றது
ராம ராவண ரானவர் போருமே
ராம ராவணப் போர்நிக ரானதே.

முன்காட்டிய வுதாரணத்திற் காந்தி யென்னும் பொதுத்தன்மை விரிந்தது. இவ்வுதாரணத்திற் காட்டிய வெளி முதலியவைகளில் விசாலம முதலிய பொதுத் தன்மைக டொக்குவந்தன. இதுவே யிவற்றுள் பேத மென்க.

---

## ௩-வது புகழ்பொருளொப்பணி.

(உபமேயோபமாலங்காரம்.)

செய்யுள்.

இருபொரு ளுக்குவ மானேவ மேயத் தியல்புதனைப்
பரியாய மாக்கிற் புகழ்பொரு ளொப்பணி பாரதற்குப்
பொருள்போலறநிறை யும்மறம்போலப் பொருணிறையுந்
தரைமீதென் றேத லுதாரணந் தென்னிள சைத்தலனே.

---

மியைபின்மையணியாமே யெனின், இயைபின்மையணி யில் ஒருபொருளேயெனச் சொல்லிய பிரிநிலை யேகா ரத்தால், ஒருபொருளுக்கு அப்பொருளாலே ஒப்புமை நிரூபிக்கப்படுமெனவும், புகழ்பொருளொப்பணி அவ் வாறு வாராதெனவுங்கொள்க.

இரண்டு பொருள்களுக் குவமானுவமேயத் தன்மைகளை யெதிர்படமாறிக்கூறல் புகழ்பொருளொப்பணியாம். இதனை வடநூலார் உவமேயோபமாலங்காரமென்பர். மூன்றுவ தொப்பதொன்றில்லை யென்பதை விளக்குதல் பயனும். பொருளறங்களுக்கு ளொன்றோடு மற்றொன்றுக் கொப்புமையுரைத்தபோதே, அதற்கு மற்

---

(ச-கை.) இவ்வணியில் இரண்டு பொருள்களுக்கு இரண்டு வாகியங்களாற்றனித்தனியுவமானத் தன்மையும் உவமேயத் தன்மையும் கூறப்பட்டன. அவற்றுள் முதலில்வந்த வாக்கியத்தில் பொருள் உவமானம். அறம் உவமேயம். இதறகெதிர்படவந்த விரண்டாவது வாக்கியத்தில் அறம் உவமானம். பொருள் உவமேயமென்க. இவ்வணிக கியையின்மையணியோடு வேற்றுமை தோன்ற விருபொருளுக்கெனவும்; தாறபரியத்தாலிருபொருள்களுக் குவமானத் தன்மையு முவமேயத் தன்மையும் விளங்கும்,

வான்மீனு மாம்பலும் வகையொப்ப வாழ்வனபார்
தேன்மீனெப்பாம்விழித் தேமொழியே.

என்னும் உபயவிச்ராந்த சாதிருசியோவமாலங்காரத்தோடு (அதாவது மதியும் முகமும் ஒப்பென்பதுபோல் உவமையுருபு உவமான உவமேயங்க ளிரண்டனுள் ஒன்றைப்பற்றுது இரண்டற்கும் பொதுவாயிருப்பது) வேற்றுமைதோன்ற வாக்கியபேதமென்னும் பொருள்படுமாறு பரியாயமாக்கிலெனவும்; கூறியதாமென்க. அற்றேல் (செ-ள்.) "உளைபோலப்புத்தி புத்தியும்போலொழுக்க மருவொழுக்கம்போற் புகழாமால்" என்னும் ரசனுவமையிற், புத்தி ஒழுக்கமென்னு மிரண்டு பொருள்களுக் குவமானத்தன்மையு முவமேயத்தன்மையு மிருப்பதாலிதுவும்புகழ்பொருளொப்பணியின்பாறபடுமேயெனின்,

ஹென்றுடனுப்புமையானது தாற்பரியத்தாற் கிடைக்கினு, மதை வாசகத்தாற்பகர்தன் மூன்ருவதொப்புப் பொருளில்லையெனப் பெறுமாறு காண்க.

செய்யுள்.

(கு-ம்.) அந்தரம்போ லம்புதமு மம்புதம்போ லந்தரமுஞ்
சந்திரன்போ லஞ்சமுமஞ் சம்போலச்—சந்திரனும்
வெள்ளாம்பல்போன்மீனுமீன்போல்வெள்ளாம்பலுமுண்
டெள்ளாம்பல் முத்துடையா யோர்.

முன்னையுதாரணத்தில் நிறையுமென்ற பொதுத்தன்மை விரிந்தது. இவ்வுதாரணங்களிற் களங்கமின்மை முதலிய பொதுத்தன்மைகள் தொக்கு வந்தனவாம். தலைவனிடம் பொருளறங்களினிறைவையும், சரற்காலத்திலாகாயம் நீர்முதலியவையின் களங்கமின்மை முதலியவைகளையுந், தறகாலத்தில் வர்ணிக்கவேண்டுமாதலாலிவ்விரண்டுதாரணங்களினும் வர்ணிக்கவேண்டு மிரண்டு பொருள்களுக்கே யுவமானுவமேயத்தன்மையைக் கூறலாயிற்று. இவ்வாறன்றியும் வர்ணியாவர்ணியங்களுக்குமிவ்வணி வருமெனக் கொள்க. அஃதுவருமாறு.

---

அற்றன்று; இரண்டு பொருள்களுக்கென்ற துணையானே ஒன்றுக்கொன் றுவமானுவமேயத்தன்மை யிருக்கவேண்டுமெனக் கிடைத்ததாலென்க. இவ்வாறென்றுக்கொன்றெனக் கொள்ளாக்காற், பரியாயமாக்கிலென்பதே யிதையின்மையணியை விலக்கிவிடுமாதலா லிரண்டு பொருள்களுக்கெனச் சொற்றது, வாளாகூறியதேயா மென்க. இன்னுமிவ்வணியை, உவமை யெதிர்நிலையணியென்ருவது, இரண்டுவமையணி யென்ருவது, கூறுவாமெனினிவ்வணியிற் பரியாயமாக்குஞ் சிறப்பிருத்தலால் அவ்வாறு கூறலாகாதெனக்கொள்க.

செய்யுள்.

கலைகம்போ லிக்கரியிக் கரிபோலக் கல்லகநாரு
சொல்லருமுன் னதமாகித் துலங்குமலை யருவியொப்பத்
தொல்லுலகி லமர்புரியித் தும்பிமதப் பெருக்குமிதன்
வல்லமதப் பெருக்கொப்ப மலையருவி யும்மிகுமே.

இக்கவியில் உன்னதமும் மிகுதலும் பொதுத் தன்மை. இக்கரி, இத்தும்பி, எனவந்த சுட்டுகள், தற்காலத்து வருணிக்கவேண்டும்பொருள்தந்தாவளமென்பதைத் தந்தவென்க.

---

## ௪-வது எதிர்நிலையணி.

(பிரதீபாலங்காரம்.)

செய்யுள்.

வழங்குவ மானத்தி னுக்குவ மேயத்தன் மைவிளம்பில்
ஒழுங்குறு நாம மெதிர்நிலை கண்போ லுளதுகஞ்சம்
எழுஞ்சசி யானனம் போலுள தென்ப திலககியங்காண்
டொழும்பலவேந்தரைக் காக்குங் குமாரெட்ட சுந்தரனே.

பிரசித்தமான வுவமானத்திற்கு எதிராக வுவமேயத் தன்மை கூறுதல எதிர்நிலையணியாம். இதனை வடநூலார் பிரதீபாலங்கார மென்பர்.

---

(௪-கை.) உவமானேவமேயத்தன்மை யுரைப்போனது குறிப்பாய் விளங்குதலால், முகமுதலியவைகளுக்கும் உவமானத்தன்மை பொருந்துமாதலான் ஈண்டு முவமையணியேயாகலாமென்ற சங்கையை நிவர்த்திக்கும் பொருட்டு, வழங்குவமானத்திற் கெதிராக வுவமேயத் தன்மை கூறுதலென்றதென்க. அஃதாவது, இயல்பாகவே யுவமேயத்தினும் சிறப்புற்ற வுவமானத்திற்குக் குறைவுதோன்ற உவமேயத் தன்மையும், உவமேயத்

செய்யுள்.

கனகமலை முலையாயும் விழியொப் பான
காந்தியுறு குவளையய முழுகிற் றன்று
நனமருவு கதிரையநு சரித்த சோம
னவமுகிலான் மறைந்தனனுன் னடையை நாணு
மனுசரித்த நடைகொளனம் போன துன்னைப்
பானவையான் மயல்சிறிதாற் றுவமென் றாலு
மினியகட வுளுக்கதுவும் பொறுக்க வில்லை
யெதுவேனுஞ் சொல்லுவையா னென்செய் வேனே.

இவ்வுதாரணத்திற் காந்திமுதலிய பொதுத்தன்மை கள் விரிந்தன.

---

## இரண்டாமெதிர்நிலையணி.

செய்யுள்.

உவமான மாமுவ மேயத்தி னுற்புக ழும்பொருளுக்
கவமான மோதி யிரண்டா மெதிர்நிலை யாமுகமே
யிவர்காந் தியாலுனைப் போன்மதி யுண்டெனக் கேன்கருவ
நவில்வாயென் றோத லிலக்கிய மெட்ட நகர்க்கரசே. (௧)

---

திற்குச் சிறப்புத்தோன்ற உவமானத்தன்மையும் கூறுத லாம். (மூன்றாவதைந்தாவ தெதிர்நிலையணிகட் கொத் திருக்கும்பொருட் டிங்ஙனம் இவ்வாறு விரித்ததெனக் கொள்க.)

(ச-கை.) உவமானத்தினும் உவமேயத்திற்கு மேன் மைதோன்றுகின்ற வியதிரேகாலங்காரத்துக்கு மிவ்வணிக் கும் பேதமியாதேல், அவ்வணியில் உவமான உவமேயங் களின் ஒற்றுமைக்குரிய குணதர்மம்வேறும் சிறப்பிற் குரிய குணதர்மம் வேறுமாகும். இவ்வணியில் ஒற்று மைக்குரிய குணதர்மத்தானே சிறப்பென்றுமுணர்க.

(கு-ம்.) உவமேயம் உவமானமாகிச் சிறப்புற்றும், உலகவழக்கில் உவமானமாக வேற்பட்டிருக்கும் ஒரு பொருளை உவமேயமாகச்செய்கிற வளவினுஞ்சகியா நிலையிலிருப்புழியதற்குப் பிரசித்த உவமானமாகிய உவமேயத்தால் இழிவு கூறுதல் இரண்டா மெதிர்நிலையணியாம். முதலாவதெதிர்நிலையணியினு மிதிற் குறைவுதோன்றக் கூறும் விசேடமே பேதமெனக்கொள்க.

செய்யுள்.

கண்ணினு லெனதி கருவங் கொள்கிறு
யெண்ணிய திகைதொறு மிலஞ்சி நீதிலிம்
வண்ணமாங் குவளையும் வதியுங் கோகிலப்
பண்ணமை யமுதெனப் பகரும் பாவையே.

(கு-ம்.) முந்திய வுதாரணத்திற் காந்தியென்னும் பொதுத்தன்மை விரிந்தது. இதிற் பொதுத்தன்மை தொக்கது என்க.

---

## மூன்றுமெதிர்நிலையணி.

செய்யுள்.

புகழுவ மேயத்தி னுலுவ மானப் பொருட்குநிந்தை
பகருவ மேலது மூன்று மெதிர்நிலை பாசகர
நிகழுனக் கேனுக் கிரதீதாற் செருக்குனை நோர்ந்தமின்னார்
மிகவுள னென்ப திலக்கியஞ் சந்திர வெற்புளனே. (எ)

(கு-ம்.) நிகரிலாச் சிறப்புற்றமையா லோரிடத்தினுந் தானுவமானமாதலை ஏற்றுக்கொள்ளாத வுவமானப் பொருளுக்குப் புகழப்படுமுவமேயப் பொருளுளதாகக் கூறியமாத்திரத்தினுல் இகழ்ச்சி தோன்றுவது இரண்டா மெதிர்நிலையணிக்கு மாறுபடவரு மூன்றுமெதிர்நிலையணியாமென்க.

செய்யுள்.

கயமான கடன்மீது வருநீல மகவாயி கலுமாலமே
பயமீய வருவாரு ளொருநா ளுனதமான பரனேயென
நியமாக வளர்மா கருவமேவி மதிமேலு னிகராகவே
சுயமானகுணவீனர்சொலுவாசகமனேகதொகைமேவுமே.

---

## நான்காமெதிர்நிலையணி.

செய்யுள்.

புனைவுளி யோடுவ மானத்தி னுக்கொப் புமையிலெனி
லனைவரு நான்கா மெதிர்நிலை யாமென்ப ரம்புயநின்
வனைமுகம் போல்மின் னுளதெனில் வீணவ வாதமலர்ப்
பொனையனை யென்ன லுதாரண மெட்ட புரத்தரசே. (அ)

(கு-ம்.) பிரசித்த உவமானத்தினைத் தன்னினுஞ் சிறந்த வர்ணியத்திற்கு வுவமேயமாகக் கூறுதன்மாத்திரையும் பொருந்தாதென்கை நான்காமெதிர்நிலையணியாம். இது முன்னையமூன்றினுஞ் சிறப்புற்றது. இங்ஙனம் வீணவவாத மென்றமையால் ஒப்புமையிலலை யெனக்கிடைத்தது.

வெண்பா.

பங்கயவி லோசனத்திர் பாரிடையான் சொல்வதுகே
ளுங்கலையோ னும்முகத்துக் கொப்பாகத்—தங்குமறு
வெள்ளளவு மில்லாரா லென்றுமியம் பப்படுவான்
றள்ளுதலில்லாநிச் சயம்.

---

(ச-கை.) இவர்முகத்தைப், பார்த்தற்கமையாதவே றுலகத்திலிருக்கின்றவர்களதற்கு மதியை யொப்பாகச் சொல்லினு மெதிரிலிரண்டையும் பார்க்கும் பாருலகத்தா ரொப்பாகக் கூறுவது பொய்யாதலா லவர்களை யுமி வெள்ளளவு மில்லாதாரென்றார். அதனால் மதியொப்பு மைப்பொருளன்றென்பது பெற்றாம்.

## ஐந்தாமெதிர்நிலையணி.

செய்யுள்.

பயனின்மை யையுவ மானத்தி னுக்குப் பகர்நிலைந்தா
கியசொ லெதிர்நிலை பெண்முகங் காணக் கிடைத்தவர்க்கே
யியன்மதி யாற்பய னென்மரை யாற்பய னென்னெனவோ
தியதிங் குதாரணந் தேரெட் டயபுர சீதரனே. (௬)

(கு-ம்.) உவமானத்தாற் கிடைக்கும்பயனுவமேயத்தாற் கிடைப்பதா லுவமானத்தாற் பயனின்றென் றிகழ்ச்சி தோன்றக்கூற லைந்தாமெதிர்நிலையணியாம்.

செய்யுள்.

பொருசி லைகொடை நளன்பிர தாபமும் புகழும்
பெருக லாலிவர் மிகையெனப் பிரமனுங் கெண்ண
மருவு போதெலாம் விலக்குருண் டலகுறி வாள்சே
ரிருக திர்க்குமூர் கோளெனுங் கைதவத் திடுவான்.

(கு-ம்.) தண்டியாசிரியர் முதலியோர் இயைபின்மையணி, புகழ்பொருளொப்பணி, யெதிர்நிலையணி, யென்ற

---

(ச-கை.) இங்ஙனம் நான்காவது ஐந்தாவ தெதிர்நிலையணிகளி லொப்புமையில்லையென்றே யுரைப்பதால் முன்னைய மூன்றுமே உவமையணியின்பாற் படுமென்பதே தண்டியாசிரியர் கருத்தாம். அதனையு மாராயுங்கா லுவமையணியின் முக்கியமாகப் பொதுத்தன்மையாற் சிறப்புத் தோன்றுதலாலும், எதிர்நிலையணியிற் பொதுத்தன்மையாதாரமாக வுவமானவிகழ்ச்சியாற் சிறப்புத்தோன்றுதலாலும், அம்மூன்றெதிர்நிலையணியு முவமையணியி லடங்காவென்க. இயைபின்மையணியினும் புகழ்பொருளொப்பணியினு மிரண்டாவது மூன்றுவ

மூன்றும், உவமையணியின்பிரிவுகளாகவேயிருத்தலானவ் வணியின்பாற் படுமெனவும், வாமனுசாரியர் முதலியோர் ஐந்தாமெதிர்நிலையணியை, புவமானத்தை வீணென்று சொல்லு மெதிர்மறை யணியின்பாற் படுமெனவுஞ், சொல்லுப.

---

தொப்புமைப் பொருளில்லையென்பதைக் காட்டுஞ்சிறப் பிருத்தலானவை பொதுத்தன்மையான் மாத்திரம் சிறப் புத்தோன்று முவமையணியி லடங்காவென்க. இவ்வா றன்றி யொப்புமை தோன்றுதலாலே இயைபின்மையணி முதலிய மூன்றணிகளு முவமையணியின்பாற் படுமே யன்றி வேறன்றெனத் தண்டியாசிரியர் முதலியோருரைத் தாராலெனின் (செய்யுள்)

சத்தியொடுலாவண்யந்தகககம்பிரமுங்கொண்
டத்திக் கொப்பா யுடன்மிக்காம்.

என்னும் வேற்றுமை யணியையு முவமையணி யிலடக்காது வேறுபிரித்துக் கூறியது குற்றமன்றே வென்பார்க்கு வேற்றுமையணியிற் பொதுத்தன்மை யிருக் கினு மதனேடிரண்டிலொன்றுக்குச் சிறப்பிருத்தலால் வேறுபிரித்தோதினரெனி லிவ்வணிகளுக்கு மவ்வாறே யொவ்வொரு பேதமுண்மையால் வேறுபிரித்துக் கூறினு ரென்க. இவ்வைந்தாமெதிர்நிலையணியில் உவமானத் திற்குப் பயனின்றென்பதாகிய விகழ்ச்சியிருப்பமையால், ஐந்தாமெதிர்நிலையணியை யெதிர்மறையணி யென்று வாமனுசாரியர் முதலியோர் கூறுவது பொருந்தாத தேயாம்.

---

## ரு-வது உருவகவணி.

(ரூபகாலங்காரம்.)

செய்யுள்.

ஒற்றுமை யாலதன் செய்கையி னுலுவ மேயமதிற்
பற்றுவ மானத்தை யாரோபித் தாலிரு பான்மையுட
னுற்றி டுருவகந் தான்மிகை யுங்குறை யும்மிரண்டு
மற்றதுஞ் சேர்ந்திட வாறுரு மென்ப ரறிஞர்களே. (க0)

ஒற்றுமையுருவகத்துக்குதாரணம்.

சிந்தைக் கிசைவெட் டடீகேள் நிறைமதி சேர்ந்துசிவ
னிந்தப் புவியின் றனிக்கு மெனலு மிவனுதற்கண்
சந்தித் திடாத சிவனென லும்பொருந் தார்புரந்தீ
யுந்தப் புரியிவன் முன்றே னெனலுமு தாரணமே.

அதன் செய்கை யுருவகத்துக்குதாரணம்.

மறுவார் மதிக்குயர் வாயிவ் வதன மதிவிளங்கப்
பெறுமே யெனலுமிக் கற்புமின் வாரிப் பிறப்பின்மறுப்
பொறியே யெனலு மிவண்முக சோமனிற் புந்திமகிழ்
வுறலாலச் சோமனி னென்னே யெனலு முதாரணமே.

(கு-ம்.) உவமேயமாகிய முகமுதலியவைகளி னுவமானமாகிய தாமரை முதலியவைகளை யாரோபித்து (அதாவது துணிமுதலியவற்றிற்குச் சாயமுதலியவற்றால் தன்னிறம்போகச் சாயப்பொருள்களினிறம் உண்டாகவுருவதுபோல் உவமேயத்திற்கு உவமானத்தின் குணங்கள் முழுதுமேற்றுவதனு லுவமானமுவமேய மிரண்டையு மொன்றாக) சிறப்புத்தோன்றக் கூறல் உருவகவணியாம். இதனை வடநூலார் ரூபகாலங்காரமென்பர். இஃது உவமேயத்திலுவமானத்தினொற்றுமையை (அபேதம்) ஆரோபித்தலாலும் சிலவிடங்களில் ஒற்றுமையின்றி யதன்செய்

கையை (தத்தர்மம்) ஆரோபித்தலாலும் ஒற்றுமையுரு வகம் (அபேதரூபகம்) எனவும், அதன் செய்கையுருவகம் (தாத்ரூப்யரூபகம்) எனவும், இரண்டு வகையாம். அவ் விரண்டினையும் உவமானத்தின் மிகை - குறை - இரண்டு மின்மை, ஆகிய மூவகையால் உறழ அறுவகையாம். அவ ற்றுளொற்றுமையுருவக மூன்றினுக்கும் "சிந்தைக்கினை" யென்னுங் கவியில முறையே யுதாரணங்களும், அதன் செய்கையுருவக மூன்றினுக்கும் "மறுவார்மதிக்கு" என் னுங்கவியில் நிரலே யுதாரணங்களும், கூறப்பட்டன. "நிறைமதிசேர்ந்திச் சிவனிந்தப் புவியின்றளிக்கும்" என் னுமிடத்தில் நிறைமதிபொருந்தி யுலகத்தைக் காக்கின்று னென்றமையால், முன் சிவனாகவிருக்கும்போது குறை மதிபொருந்திக் காத்ததினுமிப்போது நிறைந்த புத்தி பொருந்திக் காக்கின்றுனெனவச் சிலேடையால் மிகுதி தோன்றுதலால், மிகையொற்றுமையுருவகம். "இவனுதற் கண்சந்தித்திடாதசிவ"னென்னுமிடத்தில் நுதற்கண்சந்தி த்திடாதவென்றமையான், சிவற்கு முந்தியநிலைமையினு மிந்நிலைமையினு தற்கணில்லாக் குறைவு தோன்றுவதாற் குறையொற்றுமை யுருவகம். "பொருந்தார்புரந் தீயுந்தப் புரியிவன்முன்னேன்" என்னுமிடத்திற் பகைவரூரிலக்கினி யைச்செலுத்தியவ னென்றமையால், அச்செய்கையுள்ள வப்பிறப்பினு மிப்பிறப்பின் மிகையுங் குறைவுந் தோன்று மையா லிரண்டுமி லொற்றுமையுருவகம். "மறுவார் மதி க்குயர்வாயிவ்வதனமதிவிளங்கப் பெறுமே" யென்னுமி டத்தில், மறுவார மதி இவ்வதனமதி யென்றமையால் ஒற் றுமையின்மையும், பிரசித்தமதியினும் வதனமதிக்குக் கள ங்கமின்மையாகியவுயர்வு தோன்றுதலு மிருத்தலால் மி கையதன்செய்கையுருவகம். "இக்கற்புமின் வாரிப்பிறப் பின் மறுபொறியே." என்னுமிடத்தில் வேறுபொறியெ ன்றமையா லொற்றுமை யின்மையும், வாரிப்பிறப்பில் பொறியென்றமையால் பிரசித்த திருமகளினு மித்திரும

களுக்குக குறைவு தோன்றுதலு மிருத்தலாற் குறையதன் செய்கையுருவகம். "இவள் முகசோமனிற் புந்திமகிழ்வுறலாலச் சோமனினென்னே" என்னுமிடத்தில இவண்முக சோமனச் சோமனென்றமையா லொற்றுமை தோன்றுமையானும், பிரசித்த சோமனிலு முகசோமனுக்கு மிகை குறை கூறுமையானும், இரண்டுமிலதன் செய்கையுருவகம் என்க.

செய்யுள்.

நிவந்திடுநீ வருங்காலிவ் வாரியென்றோ
நடுங்குவது நிருப முன்சே
துவும்வகுத்திட் டவனெனவுங் கடைதல்புரிந்
தவனெனவுந் தோன்றிற் றேபார
எவணுறுகண் டத்திலுமே நினக்குவச
மாகாதா ரின்மை தன்னைக்
கவினுறுசெந் திருவினையிப போதகலா
திருப்பதனைக் கண்டுந் தானே.

(கு-ம்.) இங்ஙனம் சேதுவகுத்தல, கடைதலென்னுஞ்செயல்களை நீ செய்தவனென்று, அச்செயல்களைச் செய்ததிருமாலுடன், புகழ்ப்படு மரசனுக்கு ஒற்றுமை கூறி, சேதுவகுத்தற்கேதுவாகிய வேறு கண்டங்களிற பகையுள்ளமையும், தனம்புரிதற்கு ஏதுவாகிய இலக்குமி யில்லாமையுங் கொண்டிருந்த திருமாலவதாரத்தினும், இவ்வவதாரத்தில் எக்கண்டங்களிலும் பகைவரிலலாமையும், இலக்குமி பிரியாமையுமாகிய மேன்மை கூறியதனுன் மிகையொற்றுமையுருவகமெனப்படும்.

செய்யுள்.

பாகமறை யோன்மின்னூர் பானுநிதிப் பானுமிரண்
டாகப் பிராந்தி யமைத்தனனம்—மோகத்தில்
மிக்கவெறுப் புற்றவன்பூ மிக்க ணரவுருக்கொள்
தக்கமுத லாம்பரா தன்.

இங்ஙனம் "தக்கமுதலாம் பரநாதன்" என்றமையால் விருப்பமில்லாதானுக்குப் பிரசித்த சிவபெருமானொடு ஒற்றுமையும், நரவுருவென்றமையால் தேவவடிவமில்லை யென்னுங்குறைவுந், தோன்றுதலாற் குறையொற்றுமை யுருவகம்.

நேரிசையொத்தாழிசைக்கலிப்பா.

மதியொளியாற்பிரகாசமாவிளங்குமணற்குன்று
வதிசரயுமணலிடைக்குமாரசித்தரிருவருக்கு
முதிர்தருக்கவிளையாட்டுவெகுநேரமூண்டதுவே.

இது தரவு.

அன்னவரிலேயொருவன்கைடவனுகியவசுரன்
முன்னியவெம்போரினிடைமுன்மடிந்தானென்றுரைத்தான்
மற்றொருவன்பாதகத்தின்வடிவெடுத்தகஞ்சனென்போன்
செற்றிடுவெம்போரிடைமுன்றீர்ந்தனனென்றேயுரைத்தான்
அதனுண்மையாதினதையந்தநீயுரைத்திடுவாய்
முதலிலிவர்களிலெவனுன்னுலிறந்துமுடிந்தவனே.

இவை மூன்றுந் தாழிசை.

அதனுல்

இது தனிச்சொல்.

ஐயுறவெனக்குமகன்றிடவேண்டும்
பொய்யுறலில்லாப்புகழைச்
செய்யுறுமிருநிதிச்செல்வத்தோனே.

இது சுரிதகம்.

இங்ஙனம், அந்தநீயென்று கைடவனையுங் கஞ்சனை யுங் கொன்ற திருமாலுடனொற்றுமையைக் காட்டி, யவ் வரசனைநோக்கிக் கைடவன் கஞ்ச னிவர்களினிறப்பின் முன் பின்னைக்கேட்டமையா லவ்வொற்றுமை யுறுதிப்

பட்டதாலும், திருமாலவதாரத்தினு மிவ்வவதாரத்தில் மிகை குறை தோற்ருமையாலு, மிரண்டுமிலொற்றுமை யுருவக மென்க.

செய்யுள்.

அரிய கனமு டாமதியே யாவி யகன்று தமயந்தி
பெரிய மனநம் மிடத்துவரப் பெறுமென் றிருந்தா யோமரணத்
துரிய மனஞ்சந் திரனிடத்தி லுறுமென் மறையை நளமுகசந்
திரனுக் காக்கி மதப்புலவன் றெளிவா யெனக்குத் தெரிக்கின்ருன்.

தமயந்தி செய்யுஞ் சந்திரோபாலம்பத்தில், மரண காலத்தில் மனஞ் சந்திரனிடத்திற் செல்லுமென்ற சுருதியின் ருற்பரியத்தைப் பிரசித்த சந்திரனிடம், மறுதது நள முக சந்திரனுக்காக்கிச் சொல்வதிற், பிரசித்த சந்திர னிலும் நளமுகசந்திரனுக்குச் சுருதியின் தாற்பரியத் துக்கு விடயமாகுமேன்மை யிருப்பதான் மிகையதன் செய்கையுருவகம்.

செய்யுள்.

நாயகவி யாசஞெரு நான்முகமில் வேறுவிதி
தூயவிரு பாணிகொடு மாய்மவுலி—ஆயகனல்
மீறியிடு பாலவிழி மேவுதலி லாதசிவ
னீறுமரு வாதமறை யீர்.

இங்ஙனம் வேறுவிதியென்று விசேடங் கொடுத் தமையாலிந்த மூன்றிடத்துமதன் செய்கைமாத்திரமாரோ பிக்கப்பட்டது. இவற்றுள் நான்குமுக முதலியவைக ளில்லாக்குறை தோன்றினமையாற் குறையதன் செய்கை யுருவகம். இதை வாமஞசாரிய ரொருகுணம் குறைந்து மற்றைக் குணமுழுது மொததிருக்குமிடம், விசேஷோக் தியலங்காரம் என்று தாஞ்சொல்லிய விலக்கணப்படியதற் குதாரணங் காட்டினரொன்க.

செய்யுள்.

கமலமலர்க் கவினைமறுக் காதுளதோ
களிப்புவிழி கட்கி யாதோ
கமலைமக னுக்குயர்வு காணுமந்தக்
கணத்திலளிக் காதோ பெண்ணே
கமநின்முகக் கலைநிதியம் வேறுமொரு
கலைநிதியென் ககனந் தோன்றும்
கமழ்சுதையாக் கண்ணதெனக் கருவமுண்டேற்
கனிவாயிற் கனியு மிங்கே.

இங்ஙனம் வேறுமொருகலைநிதியென்றமையாற், பிரசித்த கலைநிதியினும் வதனகலைநிதிக்கு வேற்றுமைகாட்டி வதனகலைநிதிக்குப் பிரசித்த கலைநிதியினது செய்கையைக் கூறியதனாலும், மிகை குறை தோன்றாமையா னிரண்டுமில்ல தன் செய்கை யுருவகமென்க.

---

(ரு-கை.) இவ்வாறு, உருவகவணி யறுவகையாக வந்தமையன்றியும், சாவயவம் - நிரவயவம் - பரம்பரிதம் - என்று மூவகையுமாம். அவற்றுள் சமஸ்தவஸ்துவிஷயமெனவும், ஏகதேசவிவர்த்தி யெனவும் சாவயவ உருவக மிரண்டுவிதமாம். நிரவயவ உருவகமும், கேவலமெனவும், மாலாவெனவு மிரண்டுவிதமாம. பாம்பரித உருவகம், கேவலசிலுஷ்டமெனவும், மாலா சிலுஷ்டமெனவும், கேவலஅசிலுஷ்டமெனவும் மாலாஅசிலுஷ்டமெனவும் நான்குவிதமாம. அவை வருமாறு.

செய்யுள்.

சந்திரிகைப் பூதியின்வெண் ணிறம்படைத்து
முடுவெலும்பு தரித்துந் தோற்று
விந்தைசெயல் விரும்பியுந்நீ வொன்றிலிருந்
தொன்றினுக்கு மேவிர செல்வாள்

(ச-கை.)

இந்தவிராத் திரியெனுங்கா பாலிகையோர்
சந்திரனே யெனுங் கபாலச
சந்தமணிச் சிமிழின்மறு வெனுங்கைதவச
சித்துமையுந் தரித்துத் தானே.

இக்கவியிற் பிரதானவிராத்திரியின்கண், காபாலிகை மாதை யாரோபித்த திருப்பதாலும், அதன் அவயவமாக விருக்கும் நிலவு முதலியவைகளில் காபாலிகையி னவயவ மாயுள்ள விபூதி முதலியவைகளை யாரோபித்திருப்ப தாலுமிது, சாவயவரூபகத்தில் சமஸ்தவஸ்து விஷயம் என்க.

செய்யுள்.

வண்டரளம் போற்குடச மாமலாபோ லாம்புயனிரந்
தண்டிவலை வானடந சாலையிடைக—கண்டதொரு
மின்னாலின்புட் பாஞ்சலியின் மிக்கவிளக் கம்புரியும
அன்னதுபா ரன்னநடை யாய்.

இக்கவியிற் பிரதானமான வாக்கியத்தாற், செய்யப் படு நடநசாலையி னாரோபத்திற்கவயவமான மின்னலிற் பெண்ணை யாரோபித்தல் சொல்லப்படாமல, கருத்தா லேற்படுவதாலும், ஏகதேசமான வாகாயத்தில் வசனாத் தால ஆரோபமிருத்தலாலும், இது ஏகதேசவிவர்த்திருப கம் என்க.

செய்யுள்.

பிணையென விசையிற் சடமசை வறச்செய்
பெற்றியாற் கேட்டிருக் கினுமே
துணைவியி னிடநா யகன்வர லாற்றைச
சொல்சசொலிக் கேட்கவை நிடலா

(௪-தை.)

அணிமனத் தென்றும் விளங்கலாற் புதுமை
யாமயற் கொடியினை யனங்கன்
இணையிலா மகள்பா லம்புதான் விடுத்தே
யிறையவா வளர்த்திடு வானே.

இங்ஙனமயற்கொடி யென்றமையாற், கேவலநிரவய வந் தோன்றிற்று.

செய்யுள்.

மனத்தையனு வகலாத மாதுசூடா மணிவனப்பி
னதியாயு மகிமை சேர்வெள
வனத்திலுவப் பாகியும் விநோத மாக
வருவசனங் களுக்குவித்தை யாயுமின்பந்
தனகிருப்பா கியும்பிரகா சத்தின் மேன்மை
தருசெயகை யாகியும்வே தங்களாய்த்தோன்
கனப்படைப்பின் வடிவாயு மிருந்து மேயங்
கசன்கணையா கவுமெளியேன் கண்ணுற்றளே.

இக்கவியில் மாலாநிரவயவந் தோன்றிற்று.

செய்யுள்.

எந்தவுல கத்தினுமே யிங்கிதமாங் காந்தியுற
வந்திடுநீ யேகிளைக்கு வாய்த்தமுத்துச்—சந்தமணி
யென்றுநினைச சொல்லாதா ரெங்குமிலை வேற்கரத்துக்
கந்தனென வுந்திகழ்வா கா.

இங்ஙனஞ் சிலேடையாகிற கிளையென்னும் பதத் தாற் சுற்றத்தில் வேணுவை யாரோபித்தலானும், அரச னிடத்தில் முத்துமணியி னாரோபமிருத்தலானும், இது கேவலசிலுஷ்டபாரம்பரிதம். மற்றைய வுதாரணமனைத்து மிவ்வாறு கண்டுகொள்க.

---

## கூ-வது திரிபணி.

(பரிணாமாலங்காரம்.)

செய்யுள்.

செப்புவ மான முவமேய மாகத் திரிந்துதொழி
லைப்பய னுக்கொ ளவந்தாற் றிரிபணி யாகுமதிங்
கப்பெறு கண்ணி தெளிவாம் விழிப்பங் கயத்திற்கண்டாள
இப்பொழுதென்ப திலக்கியந்தேர்தென் னிளைசைமன்னே.

எங்ஙனம் ஆரோபிக்கப்படு முவமானம் ப்ரகிருதகாரியத்திற்குபயோகமாக நிவந்தனை செய்யப்படடு, இயல்பிற்றனக்கு அக்காரியத்திலுபயோகப்படுந் தன்மையில்லாமையா லுவமேயமாகத்திரிந்து அக்காரியத்தி லுபயோகப்படுகிறதோ, அது திரிபணியாம். இதனை வடநூலார் பரிணாமாலங்கார மென்பர். "விழிப்பங்கயத்திற் கண்டாளென்னு" முதாரணத்திற் (பங்கயத்திற்கே சிறப்பிருத்தலாற் காணுதலென்னுந் தொழிலிற் பங்கயமேயுபயோகமாக நிவந்தனை செய்யப்பட்டதேயன்றிக் கண்ணக்காரியத்திற் பொருந்தவில்லை) பங்கயத்திற் கியல்பிற் பார்க்குந்தொழி லில்லாமையால் விழியுருக்கொண்டு திரிந்ததென்க.

செய்யுள்.

சீதையிலக குவனொடிரா கவன்பூத
நாதன்முடித் தெரிய லாந்தே
வாதிநதி கடந்துமரக கலனுமக்
குகற்கிலக்கு வன்பா லுள்ள
வோதருமன் பொத்திடுமன் பினையோடக்
கூலியதா வுபகா ரஞ்செய்
தேதகைவேட் டரிவையர்கொஞ் சந்தொடரச
சென்றனன்சித் திரகூ டத்தே.

இங்ஙன மாரோபணஞ் செய்யப்படு மோடக்கூலி இலக்குவனிடத்திருக்கு மன்புபோன்ற வன்பாகத்திரிந்து மரக்கலமாகிய குகனுக்குச்செய்யு முபகாரமென்னுங் காரியத்தி லுபயோகப்பட்டது. இராகவனது அநுக்கிரகத்தின் வேண்டுதலையன்றிக் கூலியை யிச்சித்தலில்லா ஓடக குகனுக்கு, அக்கூலி யன்புருக்கொண்டன்றித் தன்னுருவி லுபயோகப்படமாட்டாது.

---

## எ-வது பலபடப்புனைவணி.

(உலலேகாலங்காரம்.)

செய்யுள்.

எடுத்தொன் றினைப்பலர் பல்வித மாக வியம்பல்பல
படப்புனை வாமன்னன் மின்னார் மதனென்னப் பற்றலர்கள்
மிடற்சம னென்ன விரவோர் தருவென்ன மின்றுவனென்
றிடப்பெறு கின்ற திலக்கிய மாகுகல் லெட்டமனே.(கஉ)

எங்ஙனம் பலவிதமான தன்மைகளினியையுள்ள வொருபொருள், அந்தந்தத் தன்மைசம்பந்த வேதுவின் பேதத்தினாற் பலராற் பல்விதங்கூறப்படுகிறதோ அஃது பலபடப்புனைவணியாம். இதனை வடநூலார் உல்லேகாலங்காரமென்பர். அதற்கு "மன்னனென்பது" முதலுதாரணம். இங்ஙனமன்ன னொருவனே அதிகவழகுதங்கியிருத்தலால் மின்னார்கள் மதனெனவும், மிகப்பராக்கிரமமிருத்தலாற் பகைவர்கள் சமனெனவும், கொடுத்தலாலிரவோர் கற்பகத்தருவெனவும், விளங்கினானென்றமையால், இது பலபடப்புனைவணியாம். மின்னார் முதலியவர்கள் மன்னனை மதன் முதலியவர்களாகக் கூறுவதற்கு - ஆவல் - பயம் - பொருள்பெறுகை - ஆகியவை நிரலே காரணங்களாகின்றமை காண்க.

செய்யுள்.

கண்ணன் விருந்தையரால் கைமலைகாத் தானென்றும்
வண்ணத் தருணிகளால் மாமணஞ்செய்—யண்ணலென்றும்
வாலையரா லப்போது வாய்வடிவ னென்றுமகிழ்ந்
தேலவுரை பேசவுற்றா னிங்கு.

இங்ஙனம் கண்ணனொருவனே, இல்லறக் கடலினின்றும் பயமடைந்து கடக்க விரும்பு முதிர்ந்த வயதுள்ளமடந்தையர்கள், கராவாற்பிடிக்கப்பட்டு வருந்திய தந்தாவளத்தைக்காத்தவ னிவனெனவுந், தருணிகள், இலக்குமிதேவியை மகிழச்செய்கின்ற நல்ல யௌவன புருட னிவனெனவும், வாலையர்கள், அக்காலத்துள்ள வேடத்தைக்கண்டிவ் வேடங்கொண்ட விவனோர்புருட னெனவுங் கூறவிளங்கினனென்பதில், பலவித வுல்லேக மிருப்பமையா லிதுவு மவ்வணியேயாம். முன்காட்டிய வுதாரணத்திலோர் அரசனிடத்தில் மன்மதன் முதலியவர்களை யாரோபித்துக் கூறுவது மிவ்வுதாரணத்திலாரோபமின்றிக் கூறுவதும் பேதமாமென்க.

---

## இதுவுமேலையவணி.

செய்யுள்.

ஒன்றைப் பலவித மாகப் பலவிட யத்திலொரு
வன்றெரித் தாலு மதுவே யிவன்குரு வாக்கில்வில்லின்
குன்ற விலாப்பய மீவோ னருச்சுனன் கூர்புகழி
லென்ற லுதாரணந் தேர்கருங் கோட்டை யிறையவனே.()

இங்ஙனங் காட்டிய வுதாரணத்தி லோரோபுருடனு லரசன், வாக்குவிடயத்திற் குருவென்றும், வில்விடயத்திற் பயமீவோனென்றுங், கீர்த்திவிடயத்தி லருச்சுனனென்றுங், கூறப்பட்டனன். இவ்விடத்திற் சிலேடை

யாகக் குருவென்பதற்கு மேலோ னென்றும், வியாழனென்றும்; பயமீவோ னென்பதற்குப் பயத்தைக் கொடுப்போனென்றும், கங்காபுத்திரனென்றும்; அருச்சுனனென்பதற்கு சுத்தனென்றும், பார்த்தனென்று மிருபொருள் வருமாறுணர்க.

செய்யுள்.

தனங்களிற் பெருத்து மருங்குலிற் சிறுத்துந்
தாரையில் நீண்டுறு மேலவி
கனமதி லகன்று மிதழ்களிற் சிவந்துங்
கவினுறு கருணை விசாலி
அனகக பாலி தன்பெரு நிதிய
மானசங் கரியுமை யடியேன்
மனமெனு மிடத்துப பவவினை யனைத்து
மாறிட வந்துதோற் றுகவே.

முந்திய வுதாரணத்திற் பலவிடயங்களிற் சிலேடையாகவு மியங்கனந் தனிமையாகவுமுள்ள பேதமுணர்க.

---

## ௮-வது நினைப்பணி. ௯-வது மயக்கவணி.

(ஸ்மிருதிமதலங்காரம்.) (பிராந்திமதலங்காரம்.)

## ௧௦-வது ஐயவணி.

(சந்தேகாலங்காரம்.)

செய்யுள்.

நினைவு மயக்கமு மையமு மொப்புமை யால்நிகழி
லனையவை யுண்மு னினைப்பணி நாப்பண் மயக்கவணி
பினையொரு மைய வணியென மூன்றுக்கும் பேருணர்வாய்
புனையு மருட பதியாங் குமரரொடட் டுபதியே. (௫௮)

உதாரணம்.

சந்த மரைகண்ட வென்மனம் பெண்ணவ டனைநினைக்கு
மிந்த மதப்புழு வண்டுநின் முகமரை யென்றுணரு
மந்த முகமரை போமதி யோதெளி வாகவிலை
முந்துமெனக்கெனக் காட்டாம் நினைப்பினமயூன்றிற்குமே.

எங்ஙனம், ஒருபொருளைக் கண்டவுட னொப்புமை யான் மற்றொருபொருளி னினைவுண்டாகிறதோ அங்ங னம் நினைப்பணியாம். எங்ஙனம், ஒருபொருளில், ஒப் புமையால் வேறு பொருளென்ற மயக்க முண்டாகின் றதோ அங்ஙனம் மயக்கவணியாம். எங்ஙன மொருபொ ருள், ஒப்புமையால் வெவ்வேறு பொருளாகவாகச் சந்தே கிக்கப்படுகிறதோ அங்ஙனம் ஐயவணியாம். இவைகளை வடநூலார் ஸ்மிருதிமதலங்காரமென்றும் பிராந்தி மதலங்காரமென்றுஞ் சந்தேகாலங்காரமென்றுங் கூறுப. "சந்தமரைகண்ட வென்மனம் பெண்ணவடனை நினைக்கும்" என்பதிற் றாமரைக்கு முகத்திற்கு மொப்புமையிருப்பதனை யாற் றாமரையைக்கண்டவுட னாயகியினுடைய முகநினை வுண்டானது. "இந்த மதப்புழுவண்டுநின்முகமரை யென் றுணரும்" என்பதில் முகத்திலொப்புமையால வண்டிற் குத் தாமரையென்று மயக்கமுற்றது. "அந்த முகமரை போமதியோ தெளிவாகவில்லை முந்துமெனக்கு" என் பதில் முகத்திலொப்புமையாற் றாமரையோ சந்திரனோ வெனச் சந்தேகமுற்றது.

செய்யுள்.

வானவர் தமக்கும் வியப்பினை யளித்து
மலர்ந்திடு வனசங் கையேந்தி
மானவிந் திரைபோற் றனக்கெதி ருறவே
பன்புனற் றுறையி னின்றோய

லானவோர் தெரிவை தனைவிழி நோக்கி
யாழ்ந்தவா றிதியிடை மதனங்
தானியற் றினைதை நினைந்தனன் கமலத்
தண்ணருட் கண்முகுந் தனுமே.

நினைப்பணிக்கு, முன்காட்டிய வுதாரணத்தி லொப்பான பொருளுக்கே நினைவு கூறலாயிற்று. இங்ஙனம் பெண்ணுக்கொப்பான விலக்குமியினினைவுமூலமாக வவளுற்பத்திக்குக் காரணமாகிய சமுத்திரமதனத்தினினைவு கூறலாயிற்று. முற்காட்டிய வுதாரணத்தினுமிது பேதப் படவந்ததென்க.

வெண்பா.

வண்டுபுர சம்புவென் மால்மருவிப் பைங்கிளியின்
றுண்டமதில் வீழ்கிறதந் தோவதுவும்—கண்டநவ்வ
லின்கனியென் றேமயக்க மேய்ந்ததனை யுங்கவர
நன்குவிருப் பங்கொளுமன் று.

முன்காட்டிய வுதாரணத்திலொன்றுக்கு மயக்கமுண் டானது. இங்கு இரண்டிற்கும் ஒன்றுக்கொன்றில் மயக்க முண்டானது பேதமெனக்கொள்க.

செய்யுள்.

கனகம் வாங்கிடு காலை வணங்கிபு
மனது தீர்ந்தபின் னேநிமிர் வாகியும்
இனமி ருந்திடு மீனர் துலாவுக்குச
சினவ ரோபெரி யாரோ தெரிந்திலேன்.

முன் உதாரணத்திற் சந்தேகிக்கப்பட்ட பொருள்கள் உலகபிரசித்தமானவை. இவ்வுதாரணத்திற் கவியினாற் கற்பிக்கப்பட்டவையெனக் கொள்க.

## கக-வது வெற்றொளிப்பணி.

(சுத்தாபந்நுதியலங்காரம்.)

செய்யுள்.

மறுதரு மந்தனை யாரோபித் தறமிட மாம்பொருளில்
உறுதரு மத்தை மறைத்தா லதுவெற் றொளிப்பணியாப்
பெறுமிது திங்க ளிலைவே றெதெனிற் பொருவிணறு
இறைவெண் மரையென் றுதாரணந் தேர்ம ணிவளைசமன்னே.()

புகழக்கூடியபொருளில், ஒப்பான வேறுபொருளின் றருமத்தை யாரோபிக்கும்பொருட் டதன் இயற்கைத் தருமத்தையும். கவிகளிறு லுத்திரோக்ஷிக்கப்படுந் தருமங்களையும் மறைப்பது வெற்றொளிப்பணியாம். இதை வடநூலார் சுத்தாபந்நுதியென்பர். இதற்கு, "அறியப பெறுமிது திங்க" ளென்பதும், அடியில்வரும் "இந்திர நீலத் துடைபடு" மென்பதும், நிரலே உதாரணங்கள். இங்ஙன "மறியப்பெறுமிது திங்களிலை" யென்னுமிடத்துத் திங்களென்னும் பொருளி லொப்பான வெண்டாமரையின் றருமத்தை யாரோபித்தற்கு மதியிலியல்பாகப் பொருந்திய தருமத்தின் மறைவு திங்களிலையென்றதாற் கிடைத்தது.

செய்யுள்.

இந்திர நீலத் துடைபடு துணிபோ
லிந்துவிற் றெரிந்திடு கறுப்பைப்
பந்தமா மறுவென் பார்சிலர் மானென்
பார்சிலர் படியுடைப் பரவை
தந்திடு சேறென் பார்சிலர் புடவிச
சாயையென் பார்சில ரதைரா
வந்துவாய்க் கொளும்பே ரிருள்செறி வுற்று
வயிற்றிடை யமைந்ததென் பேனே.

இங்ஙனம் ஒப்பான விருளின் றருமாரோபத்தைப் பயனாகக்கொண்டு கவியினாலுத்பிரேக்ஷிக்கப்படு மற்று முத லியவையின் றருமத்தின் மறைவு சிலர்சிலவொன்றமையால் விளங்கியது.

---

## கஉ-வது காரணவொளிப்பணி.

(ஹேதுவபந்நுதியலங்காரம்.)

செய்யுள்.

முற்கூறியவொளிப் பேறுவி னோடு முடிந்திடல
திப்கா ரணவொளிப் பெய்பே ருறும்வெம்மை செய்திடலால்
அற்கோதை சோமனன் றென்றிர வாகையி னன்றுவரி
யிற்கூர் வடவையென் றுளென் றிலகிய மெட்டமனே.()

முற்கூறியபடி வேறுதருமத்தி னாரோபத்தின்பொ ருட்டு ஒருபொருளி லநனியல்லான தருமத்தையாவது, கவியினா லுத்பிரேக்ஷிக்கப்படுந் தருமத்தையாவது, கார ணங்கூறி மறைப்பது காரணவொளிப்பணியாம். இதை வடநூலார் ஹேதுவபந்நுதி யென்பர். இதற்கு "வெம் மைசெய்திடலா" லென்பது முதலுதாரணம். இங்ஙனம் சந்திரனிடத்து வடவையின்றருமத்தை யாரோபித்தற்கு, வெம்மையைச செய்யுமென்னுங்காரணங்கூறி யியல்பான சசியின் தருமமும், இரவாகையாலென்னுங் காரணங் கூறிக் கவியினா லுத்பிரேக்ஷிக்கப்படும் இரவியின் தருமமு, மறைககப்படடன. அம்மறைவு "மதியுமன்று" "என்று மன்" றென்றமையால் விளங்கிற்று.

செய்யுள்.

மந்தரவெற் படியுறுக லுரிஞுதலாற்
பெற்றிடுபுண் வடுவு மேவி
இந்துநடு விளங்குமதைப் புவியின்சாயை
யென்றுமக லாதிருக்கு மிரலையொன்று

மந்தமுய லென்றுமொழி வதுமிகவு
மறிவிலர் சொல்லா மவைகரு
வந்துறுபற் றனுவளவா யினுமுளதோ
வெண்புலவீர் மதிக்குங் காலே.

இங்ஙனஞ் சந்திரனிடத்துற்ற களங்கத்தில் புண்வடுவின் றருமாரோபத்திற்காகப் புவியின் சாயை, முதலியவைகளின் றருமம் மறைக்கப்பட்டது. இது அறிவிலர்சொல்லென்றமையால் விளங்கிற்றென்க.

## கரு-வது வேறுபாட்டொளிப்பணி.

(பரியஸ்தாபந்நுதியலங்காரம்.)

செய்யுள்.

ஒருபொரு ளின்றரு மந்தனை யவ்விடத் தேயொழித்து
மருவதை வேறொன்றி லாரோபஞ் செய்ய வரிலதன்பே
ரரும்வேறு பாட்டொளிப் பாங்காட்டுந் திங்களி தன்றுமற்றே
துரையெனிற் பெண்முகந் திங்க ளெனலெட்ட வுரரசே.()

ஒருபொருளின் றருமத்தை யதன்கண் மறைத்து வேறுபொருளி லாரோபிப்பது வேறுபாட்டொளிப்பணியாம். இதை வடநூலார் பரியஸ்தாபந்நுதியென்பர். இதற்குத் "திங்களிதன்றுமற்" றென்பது முதலுதாரணம். இங்ஙன மதியீதன்றென்ற மதியினிடத்திருக்கும் தருமத்தின்மறைவு புகழக்கூடிய பெண்முகத்திற் றிங்களின் றருமாரோபத்தைப் பயனாகக்கொண்டிருக்கின்றது.

செய்யுள்.

கடலுதவ வருமால காலம்விட மலதிருவே
விடமிதனில் மாறுபட மேதினியோர் நினைக்கின்றார்
மிடலரனு ரதைமாந்தி விழித்துவைகின் றரவணைத்
தொடவுடனே மிகமயங்கித் தூங்குகிறார் திருநெடுமால்.

ஆலகாலத்தின் றருமம், அதையுண்ட சிவபெருமான் விழித்துவக்கின்றாரென்ற காரணத்தால் அதனிடம் மறைக்கப்பட்டு, திருவைச்சேர்ந்த திருமால் மயங்கித் தூங்குகிறாரென்ற. காரணத்தாற்றிருவினிடத்தி லாரோபிக்கப்பட்டிருக்கிறது. இதிற் காரணங் கூறப்பட்டதால் முந்திய வுதாரணத்தினும் பேதமெனவறிக. இவ்வணியு முந்திய பேதத்தைப்போ லேதுவுடன்கூடியும் ஏதுவில்லாமலும் வருமெனக்காண்க.

---

## கச-வது மயக்கவொளிப்பணி.

(பிராந்தாபந்நுதியலங்காரம்.)

செய்யுள்.

உள்ள துரைத்தொரு வர்க்குறு சங்கை யொழித்திடுதல்
விள்ளு மயக்க வொழிப்பாம் பனிப்பொரு வெப்பினோநான்
கொள்ள வருமென வுஞ்சுர மோவெனக் கூறுஞ்சகி
தள்ளதை வேளென் னிலகியந் தேரிள சைத்தலனே. ()

ஒருவனுக்கு நேர்ந்த சந்தேகத்தை உண்மையைக் கூறிவிலக்குவது மயக்கவொளிப்பணியாம். இதை வடநூலார் பிராந்தாபந்நுதியென்பர். இதற்குப் "பனிப்போ" டென்பது முதலுதாரணம். இங்ஙனங் கம்பத்துடன் தாபத்தைச்செய்யுமென்று தனக்கு நேர்ந்த மன்மதவிகாரத்தைக் கூறும் நாயகியின் வசனத்தைக்கேட்டுச் சுரமுமச்செய்கைசெய்யுமாதலாற் சுரமோவென வையமுற்றபாங்கிகையம் நீங்கும்பொருட்டு அந்நாயகி சுரமல்ல, வேளிவ்வண்ணஞ் செய்கிறானென வுண்மைகூறியதென்க.

செய்யுள்.

ஓபட் டணக்காரா வோங்குதலுண் டாகியிரண்
டேபக் கமும்வா லிருக்குமிது—தாபிப்பா

யென்னெருமை யென்றவவஃ தின்றும்பற் குட்டியிது
துன்னு துதிக்கைவா லன்று.

யானைக்குட்டியைக்கண் டிருபக்கத்திலும் வாலுள்ள
வுயர்ந்தவிஃதொரு எருமையென நிச்சயித்து மயகக்ங்
கொண்ட வோரறிவில்லானுக் கம்மயக்கம் நீங்கும்பொ
ருட்டு, நாகரிக (பட்டணத்திலுள்ளா) னொருவனிஃதெரு
மையல்ல, யானைக்குட்டி, யிஃது வாலல்ல, துதிச்கை
யெனவுண்மைகூறி மயக்கத்தை விலககிறான். முந்திய
வுதாரணத்தி லையமான மயக்கமென்றும், இவ்வுதார
ணத்தில் நிசசயமான மயக்கமென்றும், கொள்க.

ஒருவனுக்கு மயக்கமுண்டாகாமலிருக்க மயக்கமுண்
டானதாகத் தீர்மானித்து அதை விலக்குவது மிவ்வணி
யேயாம். இதை வடநூலார் கற்பிதபிராந்தாபந்நுதியென்
பர் இதற்கு உதாரணம்,

செய்யுள்.

இதுசடையு மலபினிய குழல்மிடறு
தனில்விடமு மிலைகத் தூரி
அதிகமண முறுதலையில் மதியுமல
மலரணிமெ யதினீ றன்று
பதிவிரக மதின்மருவு தவளநிற
மடமதன பூழுமை யாகி
வதிபுரச மரனெனவு மயர்வனுகி
யெனையடிக்க வருகின் றயே.

இங்ஙன மன்மதனுக்குப் பின்னற்குழல் முதலியவை
களிற் சடைமுதலியவைகளென்ற பிராந்தி யுண்டாகாம
லிருக்க, அவ்விதமுண்டானதாகக் கற்பித்து அட மதனே
இது சடையல்ல பின்னலாகச்செய்த கூந்தலெனககூறி
யோர் விரகமடந்தையதைவிலககிறாள். இங்ஙனஞ் சடை

யல்ல பின்னலாகச்செய்த கூந்தலென் றுண்மையை யுரைத்தமையால் தண்டியாசிரிய ரிதனை யுண்மை நவிற்சி யுவமை (தத்வாக்கியானவுவமை) அணி யென்பர்.

---

## வல்லோரொளிப்பணி.

(சேகாபந்நுதியலங்காரம்.)

செய்யுள்.

மன்னு மொருவன்சந் தேகிந்த தோர்ந்துண்மை யைமறைத்தல்
தன்னைவல் லோரொளிப் பென்பார் புலம்பியென் ருட்பற்றலுண்
டென்னவு நாயக னோவென் றவளுக் கெழிற் றலைவி
பொன்னின்சிலம்பென் னிலக்கியந்தேரொட்ட பூபதியே.()

தான் சொல்லியசொல் வேறொருவராற் கேட்கப் படின் தனது வசனத்திற்கு வேறுபொருளைக் கற்பித்து மெய்யைமறைத்தல் வல்லோரொளிப்பணியாம். இதை வடநூலார் சேகாபந்நுதி யென்பர். இதற்குப் "புலம்பி யென்று" வென்பது முதலுதாரணம். இங்ஙனம் நாயகி தனது நேயமான பாங்கியிடத்திற் புலம்பிக்கொண்டென் காலைப்பற்றுதலுண்டென்று தனது நாயகனது செய்கை யைச்சொல்ல வசசொல்லைக்கேட்ட மற்றொரு பாங்கி நாயகனோவெனச் சங்கைகொண்டு கேட்டதற்கு அதை மறைக்கும்பொருட்டுச் சிலம்புக்கும் புலம்பிப் பாதங்களைப் பற்றுந்தொழிலிருத்தலாற் சிலம்பெனக்கூறி யுண்மையை மறைந்தாள் என்க.

செய்யுள்.

சித்தென் பயிற்றலிதழ்ச் செவ்வடுமெய் யிற்புளகம்
புத்திடவுஞ் செய்யுமென்ற போதுநக—ரேததுசுகன்
இன்பமுறச் சேர்ந்தானோ வென்றசகி யன்றன்று
துன்பனிகா லத்துறுகாற் று.

இங்ஙனம் பாங்கியுடன் சீத்காரத்தைப் பயிற்ற லதரத்தின் வடுவைத்தல் புளகமுண்டாக்கல் செய்யு மென்று தனது நாயகன் செய்கையைச் சொல்ல வச்சொல்லைக் கேட்ட மற்றொரு பெண் நாகரிகபுருஷன் கலவிசெய்ததாரோவென்று ஐயமுறவு மதை மறைக்கும் பொருட்டுப் பனிக்காற்றுக்குமச்செய்கை இருத்தலாற் பனிக்காற்றெனக்கூறி நாயகி யுண்மையை மறைத்தாள் இவ்விரண்டுதாரணங்களினும் சொல்லைமாற்றாமல் வேறு பொருளின் சேர்க்கையாலுண்மைப்பொருளின் மறைவு கூறப்பட்டதென்க.

வசனத்திற்றுநூந் சொல்லுருவினை மாற்றியு முண்மையை மறைப்பது வருமாறு.

செய்யுள்.

பொன்னு முனது விழியை நினைப்
புற்றே னினை புன்குழலிற்
றென்னுறாங் கிருக்கு மென துயமா
திரத்தின் கனிப்பில் விலையா னேன்
என்றுக் கனவிற் புலம்புவகேட்
டெழுந்து சினக்கும் ராதையினால்
முன்னே யதட்டப் பட்டவடகம்
மூன்று முறைமால புரக்குகவே.

இங்ஙன மற்றப்பெண்களை நினைத்தமையால் மிகவுங் கோபங்கொண்ட இராதையினால் அதட்டப்பட்ட கண்ணன் பொன்றுள் நீலா மாதிரம் என்னு மிம்மூன்று பெயர்களுக்கு முன்னிலை யண்மைவிளியாகக்கூறிய சொற்களை இராதையி னிடமாகவே யமைத்துண்மையை மறைந்தனர்க. இம்மூன் றுதாரணங்களினும் வேறு விஷயம் கூறிநினைத்த விஷயத்தை மறைத்தல் விளக்கப்பட்டது.

ஒரேவிஷயத்திலும் நிலைமையை மாற்றலா லுண்மைக் கருத்தைமறைத்தலு மிவ்வணியேயாம். அவை வருமாறு.

செய்யுள்.

தூர்த்தைபதி யுஞ்சகியாத் தோன்றினதால் சோரபதி
சேர்த்தசெய லோதும்போ தேபதியைப்— பார்த்துமுணர்ந்
தேசகியப் போதுவிழித் தேனெனமுற் றுக்கினளில்
வாசகிமார் பால்வெறுப்பு வை.

இங்ஙனம் தன்னுடன் சயனித்துக்கொண்டிருக்கும் நாயகனைப் பாங்கியென நினைந்து அவனிடஞ் சோரநாயகனது வரலாற்றைக் கூறும்பொழுது பின்பு நாயகனெனத்தெரிந்து, சகியே இவ்விதமிருக்கும்பொழுதே விழித்துகொண்டேனென்று, சோரநாயகனது வரலாறாகிய வோரோ விஷயம், சொப்பன நிலைமையால் மறைக்கப் பட்டது.

---

## கைதவவொளிப்பணி.

(கைதவாபந்நுதியலங்காரம்.)

செய்யுள்.

கைதவ மேமுத லாகிய வாசகங் காட்டிமறை
வெய்த வுரைகளி லதுகை தவவொளிப் பின்றலைவி
மைதவழ் நோக்கமென் கைதவத் தால்மதன் வாளிவரும்
ஏதுற வென்ன லுதாரண மெட்ட நகர்ககரசே. (௨0)

கைதவமுதலிய சொற்களைககூறி யுவமேயதருமத்தை மறைத்தல் கைதவ வொளிப்பணியாம். இதை வடநூலார் கைதவாபந்நுதி யென்பர். இதற்கு "இன்றலைவி" யென்பது முதலுதாரணம். இங்ஙனம் பொயயென்பதை விளக்குங்கைதவமென்னும் சொல்லா னுயகியினேககத்திலதன் செய்கையைமறைத்து வாளியின் தன்மையை யாரோபித்திருக்கின்றது.

செய்யுள்.

நீரொன்றுசோ லேய்கானிடை நீள்நண்பகல் வெயிலால்
வாரொன்றிய சூடுண்டவண் வதிதாருகள் கிளையின்
சாரொன்றெரி சிகையென்றகை தவமேகொடு நாவைக்
காரொன்றிட நீள்செய்திர வுறுமேயிது காணும்.

இங்ஙனம் கைதவபதத்தா லக்காட்டுத்தீயின் சிகையி லநின்றருமத்தை மறைத்து நாவின்றன்மை யாரோபிக்கப் பட்டது.

---

## கஉ-வது தற்குறிப்பணி.

(உற்பிரேக்ஷாலங்காரம்.)

செய்யுள்.

ஒன்றும் பொருளைமற் றோர்பொரு ளாகவு ளேதுபயன்
இன்றவை யேது பயனாக யூகித்த லேதற்குறிப்
பென்றும் புலத்தி னவைமுன் விரிதொகை யென்றுபின்று
நின்றவையுண்மையின்மையென்றுமாறு நிகழ்த்துவரே. ()

செய்யுள்.

சககரப் பேட்டின் மயற்றீப் புகைக்குழு வாத்தமத்தைப்
புக்க நினைவுறு மற்பூசு கின்றது போலங்கத்தை
மிக்கவிண் மையைப்பெய் கின்றது போலுறு மேயுமென்கால்
இக்குவில் வைக்கு மதனாற் செவந்த திதுநிசமே.

செய்யுள்.

விதுநின் முகவொளிப் பெட்பால் மறையோடு மேயிகலு
மிதுநிசங் கொங்கையை யேந்தப்பொன் னுண்களி னுலிடைவீக்
குதனுற்ற தோகின் பதமொ டுரிமை கொளமனைநீர்
பதிநோன்பதோவென்றுதாரணந்தேரொட்டபாண்டியனே.

ஒன்றிலிருக்குந் தருமத்தினொற்றுமைக் காரணத் தால் மற்றொன்றை யதுவாகயூகித்தல் தற்குறிப்பணியாம்.

இதை வடநூலா ருத்பிரேக்ஷாலங்கார மென்பர். அது பொருள்விஷயமெனவும், ஹேதுவிஷயமெனவும், பயன் விஷயமெனவு மூவகைப்படும். அவற்றுள் முதலாவது, ஒருபொருளை மற்றொருபொருளாக வூகித்தல் பொருட்டற் குறிப்பணி யென்றும், இரண்டாவதே தேதுவல்லதை ஹேது வாகவூகித்த லேதுத்தற்குறிப்பணி யென்றும், மூன்றாவது பயனல்லதைப் பயனாக வூகித்தல் பயன்றற்குறிப்பணி யென்றும் பெயர்பெறும். இவற்றுள் முன்னதாகியபொ ருட்டற்குறிப்புப் புலத்தின் விரிவாலுந் தொகையாலு மிருவகைப்படும். மற்றிரண்டும் புலத்தி னுண்மையாலு மின்மையாலு மிருவகைப்படும். இவ்வா றறுவகைப்பட்ட வைக்குச் "சக்கரப்பேட்டி" னென்ற பாட்டினுனும், "விது நின்முகவொளி" யென்ற பாட்டினுனும் நிரலே யுதார ணங்கள் காட்டபபட்டன. அவைகளிற் "சக்கரப்பேட் டின் மயற்றீப் புகைக்குழுவாத் தமத்தைப்புக்க நினைவுறு" மென்னுமிடத்தில் கருமை, கண்களை மறைத்தல் முதலிய தொக்கியிருக்குந் தருமத்தினொற்றுமைக காரணத்தால் எல்லாத்திசைகளிலும் புதிதாகச் சேவலை விட்டுப் பிரிந்த சககரவாகப்பேடுக ளெல்லாவற்றி னிருதயத்தில் விருத்தியடைகிற மயற்றீயினது புகைககம்மலாக மாலையி லெங்கும் பரவியிருக்கு மிருளை யூகித்திருப்பமையா லிது விரிபுலப்பொருட்டற் குறிப்பு, இதில் தமமென்னும் புலம் விரிந்திருக்கின்றது. "அற்பூசுகின்றதுபோ லங் கத்தைமிகக விண்மையைப் பெய்கின்றதுபோலுறுமே" யென்னுமிடத்தி லறசெருக்கை ஆகாயமுதற் பூமிவரையி லெல்லாப் பொருள்களையு மிகக்கருமையாகச செய்வ தென்னுங் காரணத்தா லிருள் செய்கிற பூசுதலாக யூகித் தலும் விண்செய்கிற மைப்பெய்தலாக வூகித்தலு மிருந் தலாலிவை தொகைப்புலப்பொருட்டற்குறிபபு. இதி லிருளின் செருகைக் கூறுமையாற் செருக்கென்னும் விஷயந் தொக்கியிருக்கின்றது. இங்ஙனம் வியாபித்த

லெனுந் தருமவொற்றுமையாகிற காரணத்தா லிருளைப் பூசுகின்றதென்ற வினையின்பேரில் வந்த விகுதியின்பொரு ளாகிய கர்த்தாவாகவும், பூமிவரையில் நெருங்கியசுறுப் பின் வியாபித்தலென்னுங் காரணத்தா லாகாயத்தைப் பெய்கின்றதென்ற வினையின்பேரில் விளங்கிய விகுதியின் பொருளாகிய கர்த்தாவாகவு முத்பிரேக்ஷித்து இவ்விரண் டிடங்களிலும், அல் - என்றும், விண் - என்றும் விஷயம் விரிந்திருப்பமையா லிதுவும் விரிபொருட்டற்குறிப்பே யாயிருக்கத் தொகைப்புலப்பொருட்டற் குறிப்பெனும் பிரிவேதெனிற் கூறுவாம். பூசுகின்றது பெய்கின்றது என்ற விரண்டு வினைகளின்பேரிற்றேன்றிய விகுதிகளாற் கர்த்தா சொல்லப்பட்டிருந்தாலும், அக்கர்த்தா வினைக்கு ளடங்கியவன்றி அவை முக்கியமாகாவாம். வினையின் முதனிலையாகிய செய்கையே முக்கியமாதலா லதற்கு ளடங்கிய விகுதியின்பொருளான கர்த்தா உத்பிரேக்ஷித் தலாஞ்செய்கையால் மற்றொரு பொருளோடு ஸம்பந்தப் படமாட்டாதென்றும், இருளின் வியாபித்தல் விஷயமே யல்ல திருள் விஷயமல்லவென்றும், ஆராய்ந்து தொகைப் புலப்பொருட்டற்குறிப் பென்றதெனவறிக. இவ்வாறே தண்டியாசிரியருஞ் செய்கைக்குளடங்கிய விகுதிப்பொரு ளாகிய கர்த்தாவை உவமையணியி லுவமானப்பொருளா கக்கொள்ளக்கூடாதென்றூர். அன்றியும் சிலர் அல் விண் என்ற இவ்விரண்டினையும் தர்மிகளென்றும், பூசுதலும் பெய்தலும் அவற்றின் பொருள்களான தர்மங்களென்றும், வருமிவற்றைத் தருமதற்குறிப்பென்று முரைக்கின்றனர். அவர்கள் மதத்திற் பொருட்டற்குறிப்பில் தருமித்தற் குறிப்பென்றுந் தருமத்தற் குறிப்பென்று மிரண்டுவித முண்டெனக் கொள்க. “உன்மென்காலிக்குவில்வைக்கு மதனுற் செவந்தநிது நிசமே” என்னுமிடத்தில் மெல்லிய தாளிலிருக்கு மியல்பான செவப்புககியல்பிற் பூமியில் வைத்தல் காரணமல்லாதிருந்து மதைக் காரணமாக வூகித்

திருப்பமையாலும் பூமியில்வைத்த லுண்மையாகையாலு முண்மைப்புலவேதுக்தற்குறிப்பு. "விது நின்முகவொளிப் பெட்பால்மனாயொடுமேயிகலு மிதுநிசம்" என்னுமிடத் திற் சந்திரனுக்குந் தாமனாக்குமுள்ள வியல்பான விரோ தத்தில் நாயகியின் முகவொளிபெறுதல் காரணமல்லா திருந்து மதைககாரணமாகச் சொல்வதாலுஞ் சுபாவத் தின் நாயகியின் முகவொளி வேண்டுதலென்னும் புலமின் மையாலு மின்மைப்புலவேதுத்தற்குறிப்பு. "கொங்கை யையேந்தப் பொன்ஞண்களின் றிடைவீக்குதலுற்றதோ" வென்னுமிடத்தி லிடையியல்பாகவே கொங்கைகளை யேந் துகிறதேயல்லது பொன்ஞண்களாக வாரோபிக்கப்பட்ட வுதரமடிப்புகளின் வன்மையினலல்லவென்றும், இடை யில் விளங்குகிற பொன்ஞண்கட்டுக்குக் கொங்கையை யேந்துவது பயனல்லாதிருக்க வதை யதின்பயனுகக கூறு வதாலும்,கொங்கையையேந்துதலென்னும் பயனுகிய புல னுண்மையாகையாலு முண்மைப்புலப் பயன்றற்குறிப்பு. "நின்பதமொ டுரிமைகொள மனாநீர்பதிநோன்பதோ," வென்னுமிடத்தில் தாமனாயினது இயல்பான நீரில்வசித்த லென்னுந் தொழிலுக்கு நாயகியின் பாதத்தோடு உரிமை கொள்ளுதல் பயனல்லாதிருந்து மதையதற்குப் பயனுகக் கூறியதாலு மியல்பின் நாயகியின் பாதத்தோ டொற்றுமை கொள்வதென்னும் பயனுகிய புலமின்மையாலுமின்மைப் புலப்பயன்றற்குறிப்பு. இவ்வணிகளுக்கு நிரலே வேறு தாரணங்கள் வருமாறு.

செய்யுள்.

மலரா திரண்டாம் பிறைபோல
வளைந்து மிகவே செவந் திருக்கும்
பலவாம் புரசம் போதுகளப்
போதே வசந்த பருவ மெனு

நலமாங் கொழுந னொடுபுணர்ச்சி
நடத்தி யிருக்கும் பழுவ மெனுங்
குலநா யகிபா லியைந்த நகக்
குறிகள் போலும் விளங்கிடு மால.

வளைவு செவப்பாகிய விரண்டு தர்மங்களினொற்று மைக காரணத்தாற் புரசம்போதுகளை யக்காலையிற் செய்த நகக்குறிகளாக ஊகிப்பதாலும், புரசம்போதென் னும் புலம்விரிந்திருப்பமையாலும், விரிபுலப்பொருட்டற் குறிப்பணி. முந்திய வுதாரணத்திற் காரணமாகிய தர்ம வொற்றுமை நோக்கிருந்ததென்றும், இங்ஙனம் வளைவு செவப்பாகிய தர்மவொற்றுமைக் காரணம் விரிந்திருக்கிற தென்றும் பேதங்காண்க. போலென்ப துவமையுருபெ னப் பிரசித்தமாதலால் "அற்பூருகின்றதுபோ லங்கத்தை மிக்க விண் மையைப்பெய்கின்றது போலுமுமே" யென் னுமிடத்திற் பூருகின்றது பெய்கின்றது என்ற வினைபி னிடத்து விளங்கிய விகுதியாற் சொல்லப்படுங் கர்த்தா தொழிலுக்குளடங்கி முக்கியமாகாமையா லுவமானமாக வாராதிருக்கினும், இவ்வுதாரணத்தில் நகக்குறிகள்போலு மென்னுமிடத்திலிருக்கும் போலென்றதை யுவமையுரு பாகவைத்துப் புரசமலர்கள் நகக்குறிகள்போல விளங்கு கின்றனவென் றுவமையணியாகவே சொல்வோமெனில், உத்தரம்கூறுவாம். உவமையி லெவ்விடத்திலேனுமிருக் கும் நகக்குறிகளோடொப்புமை சொல்லக்கூடு மாகையா லிங்ஙனம் வசந்தபருவமென்னும் நல்ல கொழுநனோடு புணர்ச்சி நடத்திபிருக்கும் பழுவமென்னுங் குலநாயகி யினது என்றவிசேஷணம் வேண்டுவதின்றும். அவ்விதச சிறப்பு, புரசம்போதுகளை நகக்குறிகளாக ஊகிக்குந்தாற் பரியத்தைக் கொடுக்கச் செய்வித்ததென்க. அவ்விதங் கருதாவிடி லவ்விசேஷணம்பயனின்றுமே! தூரத்தில் வரு கின்றவனை யிவன் தேவேந்தன்போல விளங்குகின்று

னென்னுமிடத்தில் போலென்னும் சொல் உத்பிரேக்ஷையி லும் வருவதாலீண்டும் அவ்வாறேவந்ததெனக் காண்க.

செய்யுள்.

வாரி வெண்டிரை முகங்களால் வருநுரை யென்னும
வாரி யைந்தசந் துமைத்திடு வளமையே போலும்
வாரி யங்கதைத் திசைகளா மாதரைக் கரத்தால்
வாரி சத்தினை வாட்டுவோன் வனைவதே மானும்.

இங்ஙனந் திரைமுகங்களா னுரையி னெதுக்கு தலைச் சந்தன முமைத்தலாகவும் சமுத்திரத்தினின்றெ ழுந்த சந்திரனது கரங்கள் முன்னம்பரவையிற் பரவிப் பின்பு திக்குகளில் வியாபிப்பதை அதனாற் செய்யப் படும் பூசுதலாக வுமுத்பிரேக்ஷித்திருக்கின்றது. இங்ங னம், கடற்கண் சந்தனம்போல் வெண்மையாக நுரை திரள்வதும், அதிற்பொருந்தின சந்திரகிரணங்களின் சம் பந்தத்தால் திசைகள் வெண்மையாதலும், தருமவொற்று மைக் காரணங்களாம். நுரையி னெதுக்குதலுங் கிர ணங்களின் வியாபித்தலுமாகிய இரண்டு புலன்களுந் தொக்கி ருப்பமையாற் றெகைப்புலப்பொருட்டற்குறிப் பணி. இங்ஙனம் வசனத்தினுற் சொல்லப்பட்ட சமுத்தி ரஞ் சந்திரனென்னும் பொருள்களுக்கே அவைகளாற் செய்யப் படுமுமைத்தல் பூசுதலென்ற தருமங்களி னுத் பிரேக்ஷை யென்று சொல்லுகின்ற அலங்காரஸர்வஸ்வகா ராதிகளின் மதத்தில் முந்திய வுதாரணத்திலோர் தர்மியில் மற்றொரு தர்மியினபேத முத்பிரேக்ஷித்தலென்று மிங்ங னம் தருமியிற் றருமசம்பந்தத்தை யுத்பிரேக்ஷித்தலென் றும் பேதமுணர்க.

செய்யுள்.

அந்த வேற்கரத் ததிபதி யனலியு மிரவில்
இந்து வானதும் பகலினி லின்மையாற் போலும

எந்த வேலையுமுகித்திடு மெழிற்பிர தாபமுஞ்
சந்த மாம்புக ழிரண்டையுந் தனித்தனி படைத்தான்.

இங்ஙனம், அரசன் பிரதாபத்தையும் புகழையு முற்பத்தி செய்ததற் கிரவிசிரவி யில்லாமையும் பகலிற் சந்திரனில்லாமையுங் காரணமன்றி யிருந்தும் அதற்கு, அதை யேதுவாக ஊகித்தலானு மிராப்பகல்களிற் பானுமதிகளினில்லாமை யென்னும் விடயமுண்மையிருத்தலானும் இது உண்மைப் புலனேதுத்தற்குறிப்பணி.

செய்யுள்.

ஆதவன்ற னுயிரங்கோ வானவையோ டிங்கூடப்
பூதலத்தோரா னோக்கனுமப் போதேகொண்—டேதினாயிற்
சென்றுபுக்கான் போலுமத னற்றெரிய வில்லையிக்
தன்றியிலை யேதிமிரத் தால்.

இங்ஙனமிரவிற் கண்டெரியாமைக்குச சூரியன் பூதலத்தோரது விழிகளை யபகரித்தல் காரணமல்லாதிருந்து மதையதற்குக் காரணமாகக் கூறுவதாலுஞ் சூரியன் கண்களை யபகரிப்பதென்னும் புலனியல்பிலின்மையாலு மின்மைப்புலவேதுத்தற்குறிப்பணி.

செய்யுள்.

பெரியமதி தனைப்பெறுதாய்ப் பெருக்குமதி கரித்திடத்தன்
னுரியகதிர் மணிக்காந்தச சிலையினிலு முயர்சேவல்
பிரிவுறுசக் கிரவாகப் பெடைநயனத் திலுநிரம்ப
விரிபுனலை விளைக்கின்று வெனச்சங்கை மிகுந்ததுவே.

இங்ஙனஞ், சந்திரகாந்த மணிகளிலுஞ் சக்கிரவாகப் பேடுகளின் விழிகளிலுந் தண்ணீரைப் பெருகசசெய்வதற்கு மதியினாற் செய்யப்படும் வாரிதியின் பெருக்குப் பயனல்லாதிருந்துமதை யதற்குப்பயனாகக் கூறியதாலும் அப்பயனாகிய புலமுண்மையாலு மிது உண்மைப்புலப்பயன் றற்குறிப்பணி.

செய்யுள்.

இரவி தன்றிருத் தேரிலி டும்பழம்
புரவி மாற்றிபி றெற்குப் போலுயர்
பரிக ளேற்பவம் பண்ணும் வடதிசைக்
கருமை யாம்பிர யாணஞ் செய்தானரோ

இங்ஙனம், உத்தராயணத்திற் சூரியனுடைய வட திசைப்பிரயாணமென்னுந் தொழிலுக் கிரதத்திற் கட்டியிருக்கும் பழம் பரிகளை மாற்றுவது பயனல்லாதிருந்து மதையதற்குப் பயனாகக் கூறுதலாலும் 'பழம் பரிகளை மாற்றுதலென்னும புலமின்மையாலுமிது இன்மைப் புலத் தற்குறிப்பணி. தற்குறிப்பணியில் "நினைக்கின்றேன் போற்றுணிவு நிச்சயமுண்மைச்சொ லனைத்தவை யெல்லாமுருபேயாம்." என்பதனு னினைக்கின்றேன் முதலிய சொற்களுருபாவருமெனக் கொள்க. இவைகளின்றியும் வந்த "உன் கீர்த்தி முவுலகுமுற்றுயர் வுற்றும்பர்நதி மன்பிரவேசங்கொண்டும் புமா" என்னுமிடத்திலுருபுந் தொகைத் தற்குறிப்பெனக்கொள்க.

---

## கரு-வது உயர்வு நவிற்சியணி.

(அதிசயோக்தியலங்காரம்.)

---

## உருவகவுயர்வு நவிற்சியணி.

(ரூபகாதிசயோக்தியலங்காரம்.)

செய்யுள்.

வயமுவ மேய மதைமொழி யாதுவ மானமதை
நயமுறச சொல்லி யதைக்காட் டிடிலன் னதுருவக
வுயர்வு நவிற்சி யிருகு வளையினின் றெண்கணையு
தயமுறு மென்ன விலக்கியந் தேரினீ சைத்துனையே.

முகம் முதலிய உவமேயப்பொருள்களைத் தத்தம்பதத்தால கூருது சந்திரன் முதலிய வுபமானப் பொருள்களைச சொல்லுகின்ற பதங்களைக்கூறி யவைகளாற்கொள்ளுத லுருவகவுயர்வு நவிற்சியணி. இதை வடநூலார் ரூபகாதிசயோக்தி யலங்காரமென்பர். இதற்கு "இருகுவளை யென்பது" முதலுதாரணம். இங்ஙனம், குவளைமலரெனும் சொல்லால் கண்ணுங், கணைகளெனும் சொல்லால் பார்வைகளும் கொள்ளப்படுதலால் கண்குவளையும் பார்வை சரமுமாக நினைககபபட்டன.

செய்யுள்.

அந்தரத்தோர் வாவிவிளங் கிடும்தின்மேற்
பொற்படிபா லமைவ தாய
விந்திரநீ லத்தியற்றூ ரடிப்பாதை
யிருக்குமதற் கெதிரே புண்யர்
வந்தடைவர் சந்தின்மறை விடமுளவாய்
விளங்குமிரு மலையுண் டாங்கே
பங்கமுற்றோர்க் கமுதகரன் சனிதானத்
தேயமிர்தம் பலிக்குந் தானே.

இங்ஙனம், அந்தர முதலான வுவமானப்பொருள்களா லிடை முதலிய வுவமேயப்பொருள்கள் கொள்ளப்படுகின்றன. இவ்வணியி லுருவகமென்ற விசேஷணங் கொடுத்திருப்பமையா லுருவகவணியிலிருக்குஞ் சிறப்புகளெல்லாமிதினும் வருமெனக காண்க. அதனல் ஒற்றுமை யுருவகவுயர்வு நவிற்சியணி என்றும், அதன்செய்கை யுருவகவுயர்வு நவிற்சியணி யென்று மிரண்டு விதமாம். அதிலு மிகை குறை இரண்டின்மை யென்ற பிரிவுகளுமாங் காங்காராய்ந்து கொள்க. அவற்று ளிரண்டின்மை யொற்றுமை யுருவகவுயர்வு நவிற்சியே யிவ்விரண்டுதாரணங் களிலுமுண்மையுணர்க.

செய்யுள்.

புண்ணியதென் னமுதுணைவைப் புசிக்கவுத்தி யானமதி
னெண்ணுசகோ ரமுநனுக நலவெணில விரிப்பதுமா
மண்ணலிலா முயலதுமா யமரிவிதுக் ககனமிலாக்
கண்ணெதுமே யிடம்விழியே விச்சிறிது கருதுகவே. ()

இங்ஙனம, முயலன்றியிருக்குமிம்மதி யெது என்னமையால் பிரசித்தமான மதியினும் வேறென்பது. முயலென்னுங் களங்க வொழிவான் மேன்மையுங் கிடைத்தமையால மிகையதன் செய்கை யுருவகவுயர்வு நவிற்சியணி யெனக்கொள்க. இதனை வடநூலார் அதிக தாத்ருப்ய ரூபகாதிசயோக்தி யென்பர். இவ்வாறு மற்றைய பேதங்களும் கண்டுணர்க.

---

## ஒழிப்புயர்வுநவிற்சியணி.

(ஸாபன்னவாதிசயோக்தியலங்காரம்.)

செய்யுள்.

நுவற்சி பெறுமுன் னயதொழிப போடு நுவலவரி
லுவப்புறு செந்தமி ழோரிடு நாம மொழிப்புயர்வு
நவிற்சிமன் னுவி லமுதா மருளர் மதிக்கணதைப
பவிக்குமென் பாரென் றிலக்கிய மெட்டம பாண்டியனே. ()

முன் காட்டியவணியே யொழிப்புடன் வருமாகிலது ஒழிப்புயர்வு நவிற்சியணி. இதை வடநூலார் ஸாபன்ன வாதிசயோக்தி என்பர். இதற்கு "நின்சொல்லிலென்பது" முதலுதாரணம், இங்ஙனம் அரசனது சொல்லிலிருக்குமினிமையே அமிர்தமெனப் புகழ்ச்சி செய்து அது மதியிடத்திலில்லையென வொழித்திருப்பமையா லொழிப்பணியையுமுள்ளாக்கிக் கொண்டதெனக் கொள்க.

செய்யுள்.

மதுதரளம் பவளமவை கருகருநடு
விருக்குமலர் மதுவ தென்னு
முதுவசனத் தினைவாளாச் சுமந்திடுமவ்
விரண்டுகரு முழுவாள் வட்ட
மதியிடங்கொண் டனவலையா விலையதுவும்
வளைமுடியில் வாய்ந்து தோன்று
முதயகிரி யருகிலிலை யிவைக்கவளை
யறிந்திலர்வே றுரைப்பர் மாதோ.

இங்ஙனம், முத்துமுதலிய வுவமானப்பொருள்களாற் பல முதலிய வுவமேயப்பொருள்களைக் கொண்டமையாலு மதரத்துளிருக்கு மினிமையை யமுதெனவே கூறி மல ரிடத்திலில்லையென் றொழித்தமையாலு மிதுவு மவ்வணி யேயாம். அலங்கார ஸர்வஸ்வகாரர் பொருட்டற்குறிப் பணியு மொழிப்பணியுடன் வருமெனக் கூறினர் அது வருமாறு.

செய்யுள்.

இப்பிரா னனையீர் புனலிடை விளையாட்
டியற்றுகால் திமிங்கிலத் தினுக்குந்
தப்பிரிக் குழலநான் றல்குலை மறைநகத்
தனையகல் மாதரை நோக்கி
அப்பிரா னின்று தூங்கிசெய் நுரையி
னவையெனுங் கைதவத் தாலே
சிப்பிரா நதிதா னகைபுரிந் திடல்போற்
றிகழ்ந்திடு கின்றதைப் பார்ப்பீர்.

இங்ஙனம், நுரைக் கூட்டமென்னுங் கைதவத்தா லென்பதால் நுரைக்கூட்டத்தை யொழித்தன்னதைச் சிப் பிராந்தியி னகைத்தலாக வுத்பிரேக்ஷித்திருப்பமையால் கைதவ வொழிப்பணி யுடன் கூடிய விரிபுலப்பொருட்

டற்குறிப்பணி என்க. முன்காட்டிய வொழிப்பணியுடன் கூடிய வுருவகவுயர்வு நவிற்சியணியி னுதாரணங்களுக்கு மிவ்வுதாரணத்திற்கும் பிரிவுயாதே லவற்றின் முதலா வதுதாரணத்திலரசன் வாக்கிலிருக்கு மினிமையேயமுது. மதியினிடத்திருப்ப தமுதல்ல வென்றமையாலு மிரண் டாவதுதாரணத்தி லதரத்துளிருக்கு மினிமையே தேன் மலரிலிருப்பது தேனல்ல வென்றமையாலும் வேறுபாட டொழிப்பணியுடன் கூடியிருக்கின்றனவேயாம். இவ்வுதா ரணத்திற் கைதவ வொழிப்பணி, உடன் கூடியிருக்கின்ற தெனக்கொள்க. தற்குறிப்பணியும் வேறுபாட்டொளிப் பணியுடன் கூடிவரும், அது வருமாறு.

செய்யுள்.

அதிகச் செவப்பா லிதுதானே
விம்பமாக நினைக் கின்றேன்
இதனுக கோட்டம் விம்பமென்ப
தினிதா விளங்கிற் றிவ்விரண்டி
னதுவி சேடந் தனையிதயத்
தறியா திருக்கு மானிடர்க்கவ்
விதமா னவையின் பேரிடத்து
மிகவு மயக்க முண்டதுவே.

இங்ஙனம், இதுதானே கொவ்வைக்கனி யென்னு மிடத்தி லிருக்குந் தேற்றேகாரத்தாற் கொவ்வைக்கனியின் றன்மையை யதில்மறைத்தன்னதைச் செவப்பாகிய தரும வொற்றுமை யென்னுங் காரணத்தாலிதழி லுத்பிரேக்ஷித் திருக்கின்றமையா லிது வேறுபாட்டொழிப் பணி யுடன் கூடிய விரிபுலப்பொருட்டற்குறிப்பணியாம். வேறு பாட்டொழிப்பணியுடன் கூடிய வேதுதற்குறிப்பணிக்கு முன்காட்டிய அவ்வணியிலுதாகரித்த (ஆதவன்றன்னுயிரு ங்கோ) என்னுங் கவியே உதாரணமாம், அங்ஙனந் திமி ரத்திற் கண்டெரியாமைக்குக் காரணமாந் தன்மையை

மறைத்து அதை பிரவியாற் சனங்களினயனங்களபகரிக்கப் பட்டமையினும்பிரேசுஷித்திருக்கின்றது. பயான் றற்குறிப் பணியும் வேறுபாடடொளிப்பணியுடன் கூடி வருமாறு.

செய்யுள்.

பானுவின்வெம் புகையமப் பானுவினை யப்பதுமம்
அனைவையை வாட்டிடத்த டாகமதிற்—போலதன்றி
நோய்ந்திடுதற் கன்றுநிசந் நுன்னுமத மாத்தோயயில்
வாய்ந்தபய னில்லையல்ல வா.

இங்ஙனம், யானை தடாகத்திற் பிரவேசித்தலுக்குப பயனுந் தன்மையைத் தோய்தலி லொழித்துப் பதும வாட்டுதலி லாரோபித்திருக்கின்றது. இவ்விதமொன்றைப் பற்றி யொன்று கூறிய பெருநூலாதலாலிங்ஙனம் நிறுத்தி னும்.

---

## பிரிநிலையுயர்வு நவிற்சியணி.

(பேதகாதிசயோக்தியலங்காரம்.)

செய்யுள்.

இதுவே றெனவும் பிரித்து வருணித் திடலபலர்க்குப
பொதுவா கியதரு மங்களை யாகிற் புகலும்பெயர்
அதுபி ரிநிலை யுயர்வு நவிற்சியெட் டாவவன்றன்
இதயகம் பிரம் பலமிவ்வே றென்ப திலகியமே. (உச)

பலரிடத்திருக்குங் கம்பீர முதலிய தருமங்களினும் வர்ணிகப் படுகிறவனிடத்துள்ள அவற்றின் மேன்மை தோன்றுவதற்காக விது வேறென்று பிரித்துச சொல்வது பிரிநிலையுயர்வு நவிற்சியணி. இதை வடநூலார் பேதகாதி சயோக்தியென்பா. இதற்"கொடடய வவன்றனிதயகம்பீர"

மென்பது முதலுதாரணம். இங்ஙன மற்ற வரசர்களிடத்தி லிருக்குங் கம்பீரம் பலம் இவைகளைப் பார்கினும் வர் ணிக்கப்படு மரசனிடத்திலிருக்கின்ற கம்பீரத்திற்கும் பலத்திற்கு மேன்மை தோன்றும்பொருட்டிவ்வேறென் றுரைககலாயிற்று.

செய்யுள்.

இச்சுந் தரச்செல்வ மேவேறுரு சாதுரிய
மெச்சுந் தரதோ ரணிவேறு—மச்சலசப்
போதாம நொந்தவிழிப் பூவைபடைப் பெண்கணற்குச்
சாதா ரணமலவே தான்.

இங்ஙனம், மற்றப் பெண்களிடத்திலிருக்குஞ் சுந்தரஞ் சாதுரிய மிவைகளினு மிப்பொழுது வர்ணிக்கப்படும் பெண்ணிடத்திலிருககின்ற சுந்தரஞ் சாதுரியங்களுககு மேன்மை கூறும்பொருட்டு வேறென்று கூறலாயிற்று.

இங்ஙன "மெண்கணற்குச் சாதாரணமலவே" யென் றமையான் மற்றப் பெண்களின் படைப்பினு மிபபெண் ணின் படைப்பு மேலெனபபெறறதென்க.

---

## தொடர்புயர்வு நவிற்சியணி.

(சம்பந்தாதிசயோக்தியலங்காரம்.)

இயைபின் றியனை தயியைபு படுத்தி யிசைத்தறொடர்
புயர்வு நவிற்சியிம் மாநகர் மாடத் துறுசிரமொள்,
ளியவிது மண்டலத் தைத்தொடு மென்ப திலக்கியஞ்சீர்
பயில்செட் டயபுரம் வாழுங் குமாரெட்ட பாண்டியனே. ()

சம்பந்தமில்லாதிருக்கும் பொருளைச் சம்பந்தப்படு த்திக்கூறுவது தொடர்புயர்வு நவிற்சியணி. இதை வட

னாலாம் சம்பந்தாதிசயோக்தி யென்பர். இதற்கு "இம்மா நகர்மாடத்துயர்சிர" மென்பது முதலுதாரணம். இங்ஙனம் மாடத்தின் சிரங்கள் விதுமண்டலத்திற் சம்பந்தப்படா திருந்தும் மிகவுமுயரமுள்ளவையெனும் புகழ்ச்சி தோன்றும்பொருட்டு அவை யதிற் சம்பந்தப்பட்டிருப்பன வாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றமை யுணர்க. "மாடத்தின் சிரமிந்து மண்டலத்தைத் தொடுவது போலு" மென்று போலென்னுஞ்சொற் கூறப்பட்டிருக்கி னுத்பிரேக்ஷை யாக விளங்குதலாற் போல் முதலிய சொற்களில்லாதிருக்குமிடத்திற் கம்யோத்ப்ரேக்ஷை யாகுமாதலாலிவ்வுதாரணத்திலச் சொல்லில்லாமையாற் கம்யோத்ப்ரேக்ஷையாகக் கூறலாமே அவ்வாறு கூறுமிடில், "உதங்கிதந்தி மூவுலகு முற்றுயர்வுற்று மன் பிரவேசங்கொளும் பூமா." என்னுமிடத்தில் மட்டிற் கம்யோத்ப்ரேக்ஷையாவதேனெனில் இவ்வித நியதி மற்ற வணிகட்கு விஷயமல்லாதிருக்கில் வருமெனக்கொள்க. அவ்வாறு கொள்ளாக்கால் "முகம் மதி யிது நிஜ" மென்னுமிடத்திலு மிது நிஜமென்னுஞ் சொல்லில்லாவிடில் கம்யோத்ப்ரேக்ஷையாகிவிடுமன்றோ? ஆதலால் மாடத்தின் சிர மிந்துமண்டலத்தைத் தொடுமென்னுமிடத்திற் சம்பந்தமில்லாதிருப்பதைச் சம பந்தப் படுத்திக்கூறுவது சிறப்பிருத்தலாற் கம்யோத்ப்ரேக்ஷையாகாதென்க. உதங்கிதந்தியென்னுங் கவியில், அபாவுறுதலென்னு மேதுவிலுத்ப்ரேக்ஷை தொகையாயிருக்கின்றதே யன்றி யனதியுறுதலென்பதிலின்றெனக் கொள்க.

செய்யுள்.

பிரதாப ருத்திரகெம் பீரனதி யிசை
தரலாற் பகல்முற்று தற்காய—கரணகனை
கக்குவடு சின்னொளிற் காணுமற் போமெனவே
சக்கரப்பே டேகசிக்குந் தான்.

இங்ஙனம் சக்கரப்பேடுக்கு சூரியனுடைய அஸ்தமன காரணமாகிய மகாமேரு காணாமற் போவதா லுண்டாகிய வெப்பின் சம்பந்த மில்லாதிருந்து மதைச் சம்பந்தப்படுத்திக் கூறியிருக்கின்றது.

---

## தொடர்பிலுயர்வு நவிற்சியணி.

(அசம்பந்தாதிசயோக்தியலங்காரம்.)

செய்யுள்.

ஆடுறு பைம்பூண் பணைத்தபைம் பிணைறி யனைமருமத்து
தொடர்பி லுயர்வு நவிற்சி வளையெனத் தோன்றலினி
படைத் தருக்களை யாம்விரும். போமதி பூவெனவே
கிடைவருகின்ற திலக்கிய மெட்ட நரேந்திரனே. (௨௯)

சம்பந்த மிருக்கும்பொருளுக்குச் சம்பந்தமின்மை கூறுவது தொடர்பிலுயர்வுநவிற்சியணி. இதை வடநூலார் அசம்பந்தாதிசயோக்தியலங்கார மென்பர். “வளையெனத்தோன்ற” லென்பது முதலுதாரணம். இங்ஙனமைந்தருக்களை விரும்புதலின் சம்பந்தமின்மை கூறியிருக்கின்றது.

செய்யுள்.

கூர் விருத்தியுங்கொண்டுழலு
மாருவாககமனைக்குநின்
மார்பிடத்திடமவாய்ந்திடா
தோவிளக்குறுப்போந்துளாய்.

இங்ஙனம் விருத்தியடைகின்ற கொங்கைகளுக்கு மார்பினிடங் கொள்ளுதலின் சம்பந்த மிருந்துமதைச் சம்பந்தப்படுத்தாமல் வாய்ந்திடாதென்றே கூறியதுணர்க.

---

## முறையினுயர்வு நவிற்சியணி.

(அக்ரமாதிசயோக்தியலங்காரம்.)

செய்யுள்.

உறைகா ரணமொடு காரிய மோர்பொழு தேயுறுதல்
முறையி னுயர்வு நவிற்சி நினம்பு முனைவாகுமாம்
இறைவ வொரோசமயத்துமண் ணுரிபிணையுற்றவென்
றறைவ திலக்கியங் காண்பாய் குமாரெட்ட னுமண்ணலே.

காரணமுங் காரியமு மொரோ காலத்துண்டாகின்றதாக வருணித்தல் முறையினுயர்வு நவிற்சியணி. இதை வடநூலார் அக்ரமாதிசயோக்தி யென்பர். நிஸம்பு என்பது முதலுங்காரணம். இங்ஙனம் அம்பு பண்ணுரிமையைச் சம்பந்தப்பட்ட போதே பகைவர் மண்ணுரிமையைச் சேர்ந்ததாக ஹேதுகாரியங்களொன்றா யுண்டாதல் கூறப்பட்டது.

செய்யுள்.

நலமீர மன்னவன்றன் வாடபொ னுறை
விடுபொழுதே நண்ணலாரும்
பலவாம்பொன் னுறைவிடுத்தா ரதுகம்ப
முறுபொழுதே பரவன் னேரும்
வலமாறிக் கம்பமுற்று ரதுபொறையை
விடுபொழுதே வணங்க லாரு
நிலமாகும் பொறைவிடுத்தா ரந்நிகழும்
வந்திகளா நீர்மை யோரே.

இங்ஙனம் ஹம்மீரமன்னவனது வாள் பொன்னுறையை விடுதல் முதலிய காரணமுஞ் சத்துருக்கள் பொன்னுறையை விடுதல் முதலிய காரியமு மொரோ வேளையி லுண்டாயிருக்கின்றன.

---

திண்புசெயவண் டினம்விரும்பு மிருகோட் டும்ப
  விடுமுமதப் பெருக்கின்மண மெழுந்து வீசும்
பின்பினிய பாற்கடலி னமுத மாவும்
  பெருந்திரைபோல் விளங்குபிர தாப ருத்திர
னன்புநிறைந் திடுபார்வை யவர்கள் மீதி
  லகலாது வீழ்ந்திடுங்கொண் டாடத் தானே.

இங்ஙனம் பிரதாப ருத்திரனது பார்வையினாலுண் டாகும், கவிஞரின் முன்றிலிடத்து யானைகளினிருத்த லென்னுங் காரியமுண்டாகி யதன் காரணமாகிய வவ்வரச னது பார்வை பின்னுண்டாயிற்று. இம்மூன்றுயர்வு நவிற் சியணிகளுங் காரிய விரைவைக்காட்டுகின்றன.

---

## கச-வது ஒப்புமைக்கூட்டவணி.

(துல்லியயோகிதாலங்காரம்.)

இனமாம் புனைவுளிக் கேனும் புனைவிலிக கேனுமுறு
வனவாந் தருமத்தி னொற்றுமை யெய்வொப் புமைக்கூடே
உனுமா மதியின் மறைதூர்த் தையர்முக முட்குவவாம்
எனலே வருணியந் தொப்புமைக கூட்டத் திலக்கியமே ()

வல்லிநின் மெய்மென்மை நோக்கு மளவி லெவர்மனதில்
மல்லிகை யிந்து கலைவான்மழை வன்மை யெனமதிப்ப
தில்லை யெனல வருணியத் தொப்புமைக் கூட்டத்திற்கே
புல்லு மிலக்கியந் செங்கோல்கொ ளேட்ட புரிமன்னனே.

பலவர்ணியப்பொருள்களுக்கேனும் பலவவர்ணியப் பொருள்களுக்கேனு மொப்பான தருமத்தினால் முடிவு கூறுவது ஒப்புமைக்கூட்டவணி. இதை வடநூலார் துல் யயோகிதாலங்கார மென்பர். இதில் "மறைதூர்த்தைய ரெ"ன்பது முதல்வர்ணியத்தொப்புமைக்கூட்டவணிக்கும்

லேதங் கத்தி விழியா டொடைக்குநே
ரின்மை யாவெளி யிட்டிப் பட்டவே.

இங்ஙனம் பார்வதி தேவியினது தொடைகளின் வர்ணனையில் அவயவங்களாகிய யானைத்துதிக்கைகளுக்கு மரம்பைகளுக்கு முவமானப்பொருளாதலின்றி வெளிப்படுதலென்ற குணமாகிய தருமவொற்றுமை யிருக்கின்றது.

செய்யுள்.

உறவரிடத்தும பகைவ ரிடத்து மொரோவழி தருசெய்
திறத்தை யுரைப்பது மவ்வணி யேதுதிக கின்றவருஞ்
செறுநரு மாசு வணமுற நீசெய்யவை செலவவெனப்
பெறுவ துதாரணந் தேவா யினைப்பிரபலனே.

மித்திரர்களிடத்துஞ் சத்துருக்களிடத்து மொரே விதமான செய்கையைக் கூறுவது மவ்வணியே. இதற்குத் "துதிக்கின்றவ" என்பதுமுத லுதாரணம். இங்ஙனம் துதிக்கின்றவரிடத்துஞ் செறுநரிடத்து மாசுவணமுற செய்க லென்னுமொரே தொழிலைச் செய்தமை காண்க.

செய்யுள்.

நிம்பமெறி வானுக்கும நெய்யொடுதேன் பெய்வானுக்
கும்பரிம ளம்பெரிது கொண்டசந்தோ—டும்பூவாற்
பூசித்தார்க குங்கசப் பு.

இங்ஙனம், வெட்டுகின்றவனுக்கும், நெயயொடு தேனைப்பெய்கின்றவனுக்குஞ் சந்தனம் பரிமளப்போதுகொண்டு பூசித்தவனுக்கும் வேம்பு, கசப்பென் றொரேவிதங் கூறப்பட்டதாம். முந்தியவுதாரணந் துதியாகவுமிவ்வுதாரணம் நிந்தையாகவு மிருக்கின்றது. இந்தப்பிரிவு ஸரஸ்வதி கண்டாபரணத்திற் சொல்லப்பட்டது.

செய்யுள்.

பொருளொன்றை மேன்மைப் பொருள்க ளுடன்புகுத் திப்புகல
வருவது மவ்வணி மன்ன நமனும் வருணனுடன்
திருநிதிமானரி நீயு முலகைத் தினம்புரந்து
மருவுகின் றிரொன் றிலக்கியந் தேரொட்ட மாமன்னனே.

வருணிக்கத்தக்க வோர்பொருளை மேன்மையான பொருள்களுடன் சேர்த்துக்கூறுவதுமவ்வணியே. இதற்கு "நமன்" என்பதுமுத லுதாரணம். இங்ஙனம் வர்ணிக்கத் தக்கவரசனை நமன்முதலிய விமையோர்களோடு சேர்த்துக் கூறினமைகாண்க.

செய்யுள்.

மானிகர்கண் ணார்கலப்பு மாகமினற் காந்தியுமே
லானகன முற்றிருப்ப வாயினுமே—தாமிரண்டு
மாத்திரையும் நிற்க வரா.

இங்ஙன மானிகர்கண்ணார் கலவி, மின்னற்காந்தியுட னென்று சேர்த்துக்கூறப்பட்டது. முந்தியவுதாரணத்திற் றுதியாகவு மிவ்வுதாரணத்தினிந்தையாகவு மிருக்கின்றது. இப்பிரிவு காவியாதரிசமென்ற பிரபந்தத்திற் காண்பிக்கப் படடது, சிலரிப்பிரிவினை.

செய்யுள்.

ஒற்றுமை தோன்றுதற் கோர்பொரு ளான துறுபெயரை
மற்றும் பிரசித்த மாகும் பொருள்க ளுடன்வகுக்கப்
பெற்றது சித்தி யணிவேந்த நீயிப் பெரும்படையா
லுற்ற கடற்புன லான்மேன்மை யென்ப துதாரணமே.

என்று ஜயதேவர்கூறிய லக்ஷணப படிக்குச் சித்தி யணியென்று கூறுவதுமுண்டு. மற்றுஞ் சிலரிதை விளக் கணி யென்று ரெனக.

## கரு-வது விளக்கணி.

(தீபகாலங்காரம்.)

செய்யுள்.

உன்னும் புண்ணியபுண்ணிய கும்புனை வில்லிக்கு மோர்தருமத்
தின்முடி வாதல் விளக்கணி சீற்றத் திபமதத்தால்
மின்னு மரசு பிரதாபத் தாலெண விள்ளுதலே
மன்னு முதாரணந் தேர்க குமாரெட்ட மாமன்னனே. ()

வருணியங்களுக்கு மவருணியங்களுக்கு மோர் தரு மத்தினொற்றுமை கூறிமுடித்தல் விளக்கணி. இதை வடநூலார் தீபகா லங்கார மென்பர். இதற்கு "சீற்றத்திப மதத்தா" லென்பதுமுதலுதாரணம். இங்ஙனம் அவருணிய மான யானைக்கும் வருணியமான வரசனுக்கு மின்னுதலெ ன்னுந் தொழிலாகிய ஒரேதருமத்தின் முடிவு கூறப்பட் டிருக்கின்றது.

செய்யுள்.

கருவியிற் றேய்த்த மணிபடை யுழுத
    கனவடி வுளசது ரங்கி
அருமத முற்றி யிளைத்தமா சரற்போ
    தமைந்துகாய்ந் திடுமணற் குன்ற
மருநதி யிளமைக் கலைமதி கலவி
    வயினுறச் சோரிளங் குமரி
பெருநிதி யிரப்போர்க் களித்தமன் குறைவு
    பெற்றுமேல் விளங்கிடு மாதோ.

இங்ஙனம் வருணியமான மன்னனுக்கும் அவருணியங் களான மணிமுதலியவைகளுக்குமேல் விளங்குத லென் னுந் தொழிலாகிய தருமத்தி னொற்றுமை கூறப்பட்டிருக் கின்றது. மேன்மாடத்தில் வைககப்பட்ட தீபம் இரதவீதிக் குமுபகார மாகுதல்போல் வருணியத்தி லிருக்கின்ற வொ ப்பான தருமம் அவருணியங்களுக்கு முபகாரப்படுவதா லிது விளக்கணி யெனப் பேர்பெற்றது.

செய்யுள்.

பொன்னி றைந்து பொலிவுற
மின்னு பூமியை வீரனும்
உன்னு சேவக னுங்கவி
மன்னு வந்தடை வார்களே.

இக்கவியில் வருணியங்களுக்கும் அவருணியங்களுக்குந் தருமத்தின் ஸம்பந்த மொரேவேளையிற் றோன்றுகிறதே? "சிற்றத்திப மதத்தா" லென்னுமுதாரணத்தில் முதலாவது அவருணியத்திற்றருமம் ஸம்பந்தப்படுகிறதே? யென்றாலங்ஙன மியல்பாக வருணியத்தைப் பிரதான மாகக் கொண்டு வந்த தரும மவர்ணியத்திலும் ஸம்பந்தப்படுவதா லத்தருமத்திற்கு வருணியத்திற் ஸம்பந்தங் கெடாதிருப்பமைகாண்க. மேன் மாடத்திற்கு மிரதவீதிக்கு மொரே வேளையி லுபகார மானாலுந் தீபத்தின் முக்கிய ஸம்பந்த மேன்மாடத் திற்கேயல்ல திரத வீதிக் கல்லாமையும், மருமகனுக்காக்கிய உணவை முதலில் அதிதிகளுக் குபயோகப்படுத்தினு மவர்களுக்காகச் சமைத்ததல்லாமையும் போலத் தரும முதலாவ தவருணியத்திற் ஸம்பந்தப்பட்டாலு மொரே வேளையில் வருணியத்திலு மவருணியத்திலும் ஸம்பந்தப் பட்டாலு மத்தருமத்திற்கும் வருணியத்திற்கு மிருக்கும் பொருத்தம் நீங்காமை காண்க. ஒப்புமைக்கூட்ட வணியி லொன்று வருணிய மென்ற சிறப்பில்லாமையா லெல்லாவற்றையும் பிரதானமாக் கொண்டே தருமங் கூறப் பட்டதா மென்க. ஒப்புமைக் கூட்டவணியிலு மிவ்வணியிலு முவமை யணி யுள்ளடங்கியிருப்பது ஸமானமாக விருந்தாலு மிவ்வணியில் அவர்ணிய முவமான மென்றும் வருணிய முவமேய மென்று மவ்வணியி லுவைப்போனது குறிப்பா லுவமான உவமேய பாவத்தின் விளக்க மொன்றும் பேதமுணர்க.

---

## ௰சு-வது பின்வருவிளக்கணி.

(ஆவர்த்திதீபகாலங்காரம்.)

செய்யுள்.

முனமார் விளக்கணி மேவு தரும முடிவுதனித்
தனியே வரிற்பின் வருவிளக் காமது தானுஞ்சொலாற்
கனிவா கியபொரு ளாலவ் விரண்டுங் கதுவுதலா
லினிமூன் றெனவரு மெட்ட புரம்வள ரிந்திரனே. (௬அ)

பொருவின்மை மேக நிரையும் வருடம் புரியுமிந்த
இரவும் வருடம் புரியுங் கதம்பமு மேயலரும்
மருமல் லிகையு மலருஞ் சிகியு மதிப்புறுஞ்சீர்
தருசா தகமு மதிப்புறு மென்ப துதாரணமே. (௬௯)

விளக்கணியில் விளங்குந் தருமத்தி னொற்றுமையை ஆங்காங்குத் திரும்பக் கூறல் பின்வரு விளக்கணி. இதை வடநூலாராவர்த்தி தீபகாலங்காரமென்பர். இஃது பொருள்வேற்றுமை யுள்ள ஒரே வசனத்தைத் திரும்பக் கூறுவதாலும் வசன வேற்றுமை யுள்ள ஒரே பொருளைத்திரும்பக் கூறுவதாலு மொரே பொருளுள்ள ஒரேவசனத்தைத்திரும்பக் கூறுவதாலு மூவகைப்படும். இவை களுக்குப் "பொருவில்மை மேக நிறையும் வருட" மென்னுங் கவியில் நிரலே யுதாரணங்கள் வந்தன. இதிற் பொருவில்மை மேக நிறையும் வருடம் புரியு மிந்த விரவும் வருடம்புரியுமென்னுமிடத்திற் பொருள் வேற்றுமை யிருந்தாலும் வருடம் புரியு மென்ற ஒரே சொற்றிரும்பப் பிரயோகித் திருப்பதாலிது சொற்பின்வரும் விளக்கணி. "கதம்பமுமேயலரும் மரு மல்லிகையு மலரும்" என்னு மிடத்தில் அலரும் மலரு மென்ற சொல்வேற்றுமை யிருந்தாலும் பொருளைத்திரும்பக் கூறுவதாலிது பொருட்பின் வரும் விளக்கணி. "சிகியு மதிப்புறுஞ் சீர்தரு சாதகமு மதிப்புறு" மென்னு மிடத்

தில் மதித்த லென்னு மொரே பொருளுடன் கூடியமதிப் புறு மென்ற சொல்லைத் திரும்பப் பிரயோகித் திருப்பமை யாலிவ் விரண்டும் பின்வரும் விளக்கணி. இவைக ளுக்கு நிரலே வேறுதாரணங்கள்.

செய்யுள்.

கயத்துவளை யாருமரு கவர்ந்திடுகம் சிறிக்குறுவை
மயக்கழுந்து மேற்கெடுக்கு மாறியற்றி யிடுங்கரபங்
கயத்துவளை யாருறுமீன் காண்டுசரு டவர்மனத்தை
மயக்கழுந்து மேற்கெடுக்கு மாறியற்றி யிடுமம்மா.

இங்ஙனம் பொருள்வேற்றுமையுள்ள மயக்கழுந்து மேற்கெடுக்குமாறியற்றி யிடுமென்ற வொரே சொற்றிரு ம்பக் கூறப்பட்டிருக்கின்றது.

செய்யுள்.

கருமேக தாரைகளசா தகங்களுக்கு நெடுங்காலம்
வருதாக மதைமுழுதும் போக்கினவே மடவார்கண்
டருநீரின் றாரைகளா டவாதமது வேறிடத்து
வெருவாத பிரையாண ருசியதனை விலக்கினவே.

இங்ஙனம் போக்கினவென்றும் விலக்கினவென்றுஞ் சொல வேற்றுமையிருந்தாலும் ஓரேபொருள் திரும்பக் கூறப்பட்டிருக்கின்றது.

செய்யுள்.

சுந்தரமின் னேயுன் சுமுகமத னற்பொருத
சந்திரவிம் பங்கந் தராமதனில்—வந்துமறை
கின்றதர விந்தங் கிளர்பிரவா கப்புனலிற்
றுன்ற மறைகின் றது.

இங்ஙன மொரேபொருளுள்ள மறைகின்ற தென்ற சொல் திரும்பக் கூறப்பட்டிருக்கிறது. விளக்கணியில் வரு ணியாவருணியங்களுக்குத் தருமத்தினொற்றுமை கூடி விரு

ப்பதுபோ லிவ்வணியிலில்லாமல் வருணியங்களுக்குமட்டு மிருந்தாலு மொன்றினது தரும மற்றொன்றுக்கும் ஸம்பந் தப்படுகிற தென்பதை மாத்திரம் வைத்திதற்குப் பின்வரு விளக்கணி யெனப்பெயர் கூறலாயிற்று.

---

## கஎ-வது தொடர்முற்றுவமையணி.

(பிரதிவஸ்தூபமாலங்காரம்.)

செய்யுள்.

இருவாக் கியக்குத் தருமத்தி னொற்றுமை யேமுடிக்க
வருவ தனித்தனி யேற்றொடர் முற்றுவ மைய்யிரவி
தருதாபத் தாலுற் றிலங்குந் திறலிகொள் சாபத்தினல்
மருவ மினுமென் றிலக்கியங் காணெட்ட மாமன்னனே. ( )

உவமானோவமேயங்களாகவிருக்கிற விரண்டுவாக்கிய ங்களில் ஒரேதருமத்தைத்தனித்தனியாக வெவ்வேறுசொ ற்களால் கூறிமுடிப்பது தொடர் முற்றுவமையணி. இதை வடநூலார் பிரதிவஸ்தூப மாலங்கார மென்பர். ஒவ்வொ ருவாக்கியத்திலும் ஸாதாரணதருமம் இருப்பதனலிவ்வ ணி இப்பெயர்பெற்றது. இதற்கு "இரவிதருதாப" மென்ப து முதலுதாரணம். இங்ஙனம் இரவிதருதாபத்தினலுற்றி லங்கு மென்றவுவமான வாக்கியத்திலுந்திறலி கொள் சாபத்தினல் மருவமினுமென்ற உவமேயவாக்கியத்திலும் பிரகாசித்தலென்ற வொரேதருமம் இலங்கு மென்றும், மின்னுமென்றுந் தனித்தனிகூறி முடிக்கப்பட்டிருக்கிற தென்க.

செய்யுள்.

நல்லபண்பி னோர்திரமா நல்லொழுக்கச் சற்குணமே
யல்லன் மதியா லவியாது—புல்லும்
கதிர்மணியின் றீபவொளி காற்றி னசியாது
மதிநுதற் போலுமடவாய்.

வென்பது முதலுள்ள வுவமானவாக்கியத்தி லறிவில்லா மை தருமமாகவு மிருக்கினு மிவ்வணியேயாம். அவ்வாறு மி னுவமான உவமேயவாக்கியங்களுக்கு வெவ்வேறு த ரும மிருத்தலா லிவ்வாக்கியங்களுக் குவமானோவமேய மாவிருக்குந் தன்மை யெவ்வாறெனில் வித்துவான் கவி சொல்லுஞ் சிரமத்தை யத்தொழிலுள்ளவனறிவா னென் றமையாற் கிடைத்த் வவித்துவானறியமாட்டா னென் றதை யுவமேயமாக வைத்து வந்தி பிரஸவ வேதனை யறி யாளென்பதை உவமானமாக வைத்தாவது வந்தி பிரஸவ வேதனையையறியா ளென்பதாற் கிடைத்த பிரசவித்தவள் அவ்வேதனையை யறிவாளென்பதை யுவமானமாக வைத்து வித்துவானது கவி சொல்லுஞ் சிரமத்தை யத்தொழி லுள்ளவனே யறிவா னென்றதையே யுவமேயமாக வைத் தாவது தரும வொற்றுமையுண் டெனக்கொள்க.

செய்யுள்.

மாந்தரிடம் பண்பிருக்கு மாகிலவை யுந்தனியே
தாந்துலங்கு நானமதிற் றங்குமணம்—போந்துபல
ராணைபுரிந் தேதடையிட் டாலுமடங் காதுமணிப்
பூணையுடை யாயிதைநம் பு.

இங்ஙனம் "மாந்தரிடம்பண்பிருக்கு" மென்ற உவமே யவாக்கியத்தில் பண்பினியற்கைத் துலக்கந் தருமமாக வும் "நானமதிற்றங்குமண" மென்றது முதலுள்ளவுவமான வாக்கியத்தி லாணையாற் றடைபடாதிருத்தல் தருமமாகவு மிருந்தாலு மிவ்வணியே யாம். முந்திய வுதாரணத்தி ல்றிந்ததுபோ லுவமானோவமேய வாக்கியங்களாற் கிடை த்த பொருள்களை வைத்து இந்த விரண்டு வாக்கியங்களு க் குவமானோவமேயமா யிருக்குந் தன்மையைப் பிரித் தறிந்து கொள்க.

---

## கஅ-வது எடுத்துக்காட்டுவமையணி.

(திருஷ்டாந்தாலங்காரம்.)

ஈட்டிரு வாக்கிய வெவ்வே றுதரும மென்பவற்று
ளூட்டுவிம் பப்பி ரதிவிம்ப பாவமுற லேயெடுத்துக்
காட்டுவ மையர சேபுக ழோன்மதி யேகதிரோ
னூட்டி லென் றேத விலக்கிய மெட்ட நகர்க்கரசே.

உவமான உவமேய வாக்கியங்களினது வெவ்வேறா ன தருமங்களை விம்பப் பிரதி விம்ப பாவமாக வுரைத்த லெடுத்துக் காட்டுவமையணி. இதை வடநூலார் திருஷ்டாந்தலங்கார மென்பர். இதற்கு "அரசே" யென்பதுமுத லுதாரணம். இங்ஙனம் புகழுங் கதிருக்கும் விம்பப் பிரதி விம்ப பாவ மென்க.

செய்யுள்.

பலவரச ரிருந்தாலு மிவ்வரச னற்படியுங்
னலவரச தாவிருக்கின் றதுநாளொன் பானுமூன்றுங்
குலவுறுமற் றயமீனுங் குருமுதற்கோள் களுமிருந்து
முலவிரவுங் காந்தியதா வுமதியா மொன்றுமே.

இங்ஙனம் நலவரசதா விருத்தலுங் காந்தியைப் பொருந்துதலும் விம்பப்பிரதி விம்ப பாவமா விருக்கின் றது.

செய்யுள்.

பலகவிஞர் நாமகளின் சித்தியுற்று லுங்குருவின் பாற்றன்பாரிக்
குலவுமுரா ரிக்கவிஞ னேவாணி சாரமறி குவனுநாகர்
நலகடலைக் கடக்கினுமன் னதினுழம் பிலத்துவரை யணுகுமிக்க
வலனுறுதே கம்படைத்த மந்திரவெற் பறிந்ததுபா வலமையோரே.

இங்ஙன முவமானுவமேய வாக்கியங்களுக்கு அறி வென்னு மொரேதருமந்தைத் தனித்தனிகூறி முடித்திரு

பமையாற் றொடர்முற்றுவமையணி யாமெனி லவ்வா றன்றும். உவமானமாகிய மந்திரகிரி யம்பிணையானதா லதற்கறிவென்பது பொருந்தாது. மந்திரகிரி யறிந்ததென்ப தற்குமந்திரகிரி சமுத்திரத்தில் பாதாளம்வரை மூழ்கிற் றென்றபொருள்படவருங்கருமத்தி லொற்றுமையில்லை யாதலா லிதுவு மெடுத்துக்காட்டுவமையணி யெனக்காண்க. சொற்பின்வருவிளக்கணியி னுதாரணத்திற்கு மிவ்வுதாரணத்திற்கும பிரிவியாதேல் அதில் வருணியங்களுக்கே கருமவொற்றுமை யிருக்கின்றதென்று. இதில் வருணியா வருணியங்களுக்குங் கருமவொற்றுமை யிருக்கின்றதென் றுமுணர்க. முரணான கருமத்தாலு மிவ்வணிவருமென்ப தற்குதாரணம்.

செய்யுள்.

மன்னியுட சீற்றேனும் மாற்றலரெல் லாமிறந்தா
ரென்னே யுரைவேண்டு மென்றுரைத்த—நன்மலையி
னுச்சி யெதுவரையு முண்டோ வதுவரைமே
யிசைசருவ ரிக்குமுவா மே.

இங்ஙனங் கோபங்கொள்ளல் அதனாற் சத்துருக்கள் மடிதல் இவ்விரண்டு கருமங்களுக்கு மிரவி யுதயாசலசிகரத்திற்குவராமை யதுவரையிருளிருத்தல் என்று முரணான கருமங்களுக்கும் விம்பப்பிரதி விம்பபாவமிருக்கின் றமைகாண்க.

---

## ௧௯—வது காட்சியணி.

(நிதர்சநாலங்காரம்.)

சொற்றொடர்ப்பாவிருவாக்கியங்களிற் றோன்றுபொருட்
கொற்றுமையென்பதி னாரோபங் காட்சி யுயர்வளற்குச
சற்குணம் யாதது. வாமதிக் குக்கறை தானிலதா
யுறுதிட லென்ப திலசிய மெட்டாநல் லூரரசே.

உவமானோபமேயங்களாயிருக்கிற விரண்டு வாக்கியங்களின் பொருள்களை யொன்றாக ஆரோபிப்பது காட்சியணி. இதைவடநூலார் நிதர்சனாலங்காரமென்பர். இதற்கு "உயர் வள" மென்பதுமுதலுதாரணம். இங்ஙனமுயர்ந்த வள்ளற்குற்றிடு சற்குணமென்ற வுவமேயவாக்கியப் பொருளுக்கு மதிக்குங்களங்கமற்றமை யென்னு முவமானவாக்கிய பொருளுக்கும யாது அது என்ற சொற்களா லொற்றுமை யாரோபிக்கப்பட்டிருக்கின்றது.

செய்யுள்.

அறிவிலா மூர்க்கன் றன்னையனு சரித்தல் படாதசு வாரணி யமதி
லழுக்கையுற் றிடுத லாவியிலுடலை யடுகுறும் படிதுடைத் திடுதல்
செறிபுன லறுபா றதிலர விந்தத் தினையா ரோபமே புரிதல்
தினந்தினை முவறா நிலந்தனில் வருடஞ் செய்குச ஞயறு வாலை
நெறியுறத் திருத்தல் முழுச்செவி டாமனிதனது செவியின்மந் திரத்தி
னிகழுப தேசம் புரிகுதல் குருடாய்ச் சேர்பவ னுனைத் தெதிரே
உறுநிழ லாடி காட்டுத லெனவே புளங்சொடு சற்சன சங்கத
தொடுநித மிருந்தே செவியுணும் விருந்தே யுறிலது பவவினை மருந்தே

இங்ஙன மறிவில்லா மூர்க்கனை யனுசரித்த லென்ற வுவமேயவாக்கியப் பொருளுக்கு மாரணியத்தி லழுக்கை யுற்றிடுதல முதலிய வுவமானவாக்கியப் பொருளுக்கும் யாது அது என்ற சொற்களால் ஒற்றுமை யாரோப்பிககப் பட்டிருக்கின்றது.

---

## இரண்டாவது-காட்சியணி.

(பதார்த்தவிர்த்தி நிதாசநாலங்காரம்.)

நேரும் பதப்பொருளாரோ பமுமுன் னிகழ்த்துவதாங்
காரும் புனைமென் முலையா யுனதிரு தாளையுநீ
ராருங் குவளை மலர்க்காந் தியினை யடைந்ததென்ப
தோரு மிலக்கியம் வாழெட் டயபுர வுத்தமனே.

உவமானோபமேயங்களாயிருக்கு மிரண்டு சொற்பொருள்களுக கொற்றுமை யாரோபித்தல் பதப் பொருட் காட்சியணியாம. இதை வடநூலார பதார்த்த விர்தநிதர்சனையென்பர். இதற்கு "உனதிருதாரையு" மென்பது முதலுதாரணம். இங்ஙன முவமேயமாகிய தாரையென்ற கண்களிற் குவளைப்போதின் காந்தி யென்ற பதத்தின் பொருளாரோப்பிக்கப்பட்டிருக்கின்றது.

செய்யுள்.

காமமுற்ற காலையே கவுடநாட்டு மாதர்தந்
தாமநற் கபோலமார தவளவிட்டம் யாதது
நாமமிட்ட பேர்முனே நணுகுமீச சமாதுணர்
ஆமதிற் குலாவுநீ யதனை நோககு வாய்மினே.

முந்தியவுதாரணத்தி லுவமேயத்தி லுவமான தருமமாரோபிக்கப்பட்டது. இவ்வுதாரணத்திற் கவுடநாட்டு மாதர் கபோலமாகிய வுவமேயததிலிருககும் வெண்மை யென்னுந் தருமம் காஜ-ரபபூவினுட் பராகங்களாகிய உவமானத்தில் யாது - அது என்ற சொற்களா லாரோபிக்கப்பட்டிருக்கின்றது. இவ்விரண்டிடங்களிலுமொருபொருளிலிருக்குந் தருமம் மற்றொருபொருளிற் சேராதாகையா லத்தருமத்திற் கொப்பான தரும வொற்றுமையிருக்கின்ற தென்றறிக. இவ்வுதாரணங்களி லியல்பாகக கிடைத்தவாரோபத்தை - யாது - அது - என்ற சொற்கள் விளக்கினுமிவைகள் இன்றியும் வருமெனவுக கொள்க. இப்பதப்பொருட் காட்சியணியைஜயதேவர் லளிதோபமையென்றூர். காமமுற்றகாலை யென்ற செய்யுளை முன்னூலார் வாக்கியப் பொருட்காட்சியணிக் குதாரணங் காட்டினரேனும் விம்பப் பிரதி விம்ப பாவமாக விருக்கின்ற பொருளிலுள்ள தருமங்களுக் கொற்றுமை யாரோபித்தல் வாக்கியப் பொருட்காட்சியணி யென்று முவமானோபமே

யங்களுக்கு ளொன்றின் றருமத்தை மற்றொன்றி லாரோ பித்தல் பதப்பொருட் காட்சியணி யென்றும தீர்மா னித்துக் காமமுற்றகாலை யென்ற கவியை யிங்ஙனம் பதப்பொருட்காட்சியணிக் குதாரணங் காட்டின தென்க.

செய்யுள்.

பரம்பரநீ யெமதுவிருப பந்தருவோ
 னுவிருக்கப பகர்மறறொருனை
இரந்திடுகோ லங்கொடுசே வித்திடுநாந்
 தேனுவர சிருக்கும்போது
முரந்தரும்பிற் காலுதையா லனுகவொட்டா
 வொட்டக்குட் டியையுற்றேபால்
நிரந்தரமுங் கறந்திடவே விரும்பினவ
 ரிதுபொாலை நிமலவாழ்வே.

கடலினைக்கரத்தாற்கடந்
திடவிருப்பமைந்திட்டவா
மிடலுன்னற்குணவேலையைப்
புடவியிற்புகழ்ந்தார்மனே.

இவ்விரண்டுதாரணங்களும் வெவ்வேறு வாககியங் களா முடியாவிட்டாலும் விம்பப் பிரதி விம்ப பாவமா யிருக்கும் பொருள்களுடன் கூடிய தருமங்களுக்கு ஒற்று மையாரோப மிருப்பமையாலுஞ் "சொற்றி டொப்பான விருவாககிய" மென்ற விலககணத்திலிருககு மிருவாக் கியங்களிற் றொன்று பொருளென்றதற்கு விம்பப் பிரதி பிம்ப பாவமுள்ள பொருளுடன் கூடிய வருணியாவருணிய தருமங்களுக் கெனத்தாற்பரியங்கொண்டமையாலும் வாக் கியப் பொருட்காட்சியணியேயாம். இவ்வாறு கூறினமை யால

செய்யுள்.

மாந்த ருக்கு மகிபதி சேவைநாக
காந்து வாள்முனை நககல் சிங்கப்புலல்
போந்த பேட்டுப் புயங்க முகமுகப்
பாந்த ளிக்குழந் தாயய ராயினைத்.

இதிலும் வருணியா வருணியா விருத்தாந்தங்க ளொரு வொருபதித்தாற கூறப்பட்டிருக்கிறு ரவைகளாவிம்பப் பிர தி விம்பமாகவிருக்கும் பொருள்களுடன்கூடிய விவகாரமா யிருத்தலால் வாக்கியப் பொருட்காட்சி யணியேயாம். ஆ யின் உருவகவணிக்கு மிவ்வணிக்கும பிரிவியாதெனில் உரு வகத்தில் விம்பப்பிரதி விம்பபாவத்தை யடைந்திருக்கிற பொருள்களுடன் கூடாத, முகம் சந்திரன்முதலியவைகளு க்கொற்றுமை யாரோபித்தலென்றும், இதில விம்பப்பிரதி விம்பபாவத்தை யடைந்திருக்கிற பொருள்களுடன்கூடிய தருமங்களுக் கொற்றுமை யாரோபித்த லென்றும் பிரிவு காண்க.

செய்யுள்.

மீளியெறு மாவலியை மேலடாக்கும் போதுயர்வுற்
றுளுமறை யோரு தனமனாக்கு-நாளதண்ட
மென்றுசொல வேயிருந்த தெம்பெருமான் பாததண்டம்
நன்றுமகிழ் விக்கு நமை.

விசிஷ்ட உருவக வுதாரணமான இந்தக் கவியால் நாளமானது மறையோ னுதனமனை யென்றதற்கிணங்கச் சொல்லுஞ்சிறப்புக்கு வந்தமையாலும் வள்ளற்குச்சற்கு ணமென்ற வுதாரணத்தில் வள்ளலுக்கு முவாமதிக்கு மானந்தத்தைச் செய்தலென்னும் பொதுத்தன்மையிருப் பதால் விம்பப்பிரதி விம்பபாவம்வருவதுபோ லிங்ஙனமு ம் பாதத்திற்கும் நாளத்திற்கு மஃதுவாரர்மையாலும் பா ததண்டம் நாளதண்டமெனபனவக்கு விம்பபிரதி விம்ப

பாவமடைந்திருக்கும் பொருள்களுடன் கூடுந் தன்மை யில்லாமைகண்டு காட்சியணி யாகாதெனக் கொள்க. உவமானோவமேயங்களுடைய விசேஷணங்களி லொன்று க்கொன் றொப்புமையால் விம்பபிரதி விம்பபாவமாயிரு க்கின்றது.

செய்யுள்.

சந்திரிகைப பூதியின்வெண் ணிறம்படைந்து
முடிவெலும்பு தரித்து நோற்று
விந்தைசெயல விரும்பியுந்தி வொன்றியிருந்
தொன்றினுக்கு மேவிரசெல்வான்
இந்தவிராத் திரியெனுங்கா பாலிகையோ
சந்திரனை யெனுமக பாலச்
சந்தமணிச சிமிழ்மூலமது வெனுமனைத்து
சித்துமையுந் தரித்துந் தானே.

இந்த ஸாவயவ வுருவக வுதாரணத்தி லெவ்வாறு வருமெனில், அங்ஙனம் உவமானோவ மேயங்களுக்குந் தத்தம் விசேஷணங்களுக்குந் தனித்தனியே யொற்றுமை யினுரோபமே யல்லது சந்திரிகைமுதலியவைகளுடன் கூடிய இராத்திரியாகிற வுவமேயத்திற்கும் பூதிமுதலிய வைகளுடன் கூடிய காபாலியாகிற வுவமானத்திற்குஞ் சேர்க்கையா லொற்றுமையாரோபித்தலன்று மாதலால் விம்பப்பிரதி விம்பபாவமாக விருக்கும் பொருள்களுடன் கூடிய தருமங்களுக் கொற்றுமை யாரோபித்தல் வாக்கிய ப்பொருட் காட்சியணியென்று முவமானோவ மேயங்களி லொன்றி லொன்றின் றருமத்தை யாரோபிப்பது பதப் பொருட் காட்சியணியென்று முன்காட்டிய தீர்மானத் தைக்கொண்டே "மாந்தருக்கு மகிபதி" யென்ற செய்யுளில் வாக்கியப்பொருட்காட்சியணி யென்றே விதிக்கப்பட்டது. விம்பப்பிரதி விம்பமாக விருக்கும் பொருள்களுடன் கூடி ய தருமங்களுக் கொற்றுமை யாரோபித்தல் வாக்கிய

பொருட்காட்சியணி யென்று கொள்ளாமலிலக்கணத்திற் கூறியபடியே யொப்பான விரண்டுவாக்கியங்களின் பொருள்களுக் கொற்றுமை யாரோபித்த லவ்வணி யென்று கொண்டவர் "மாந்தருக்கு மகிபதி" யென்ற செய்யுளிற பதப்பொருட்காட்சியணி யென்றார்.

---

## தீங்குப்பொருட்காட்சியணி.

(அஸதர்த்த நிதர்சனாலங்காரம்.)

## நற்பொருட்காட்சியணி.

(ஸதர்த்த நிதர்சனாலங்காரம்.)

செய்யுள்.

தீப்பய னாவது நற்பய னாவது செய்கையினால்
வாய்ப்பொடு காணப் புரிவது மவ்வணி மாநிலவின்
கோப்பகை யோனசி வானென்று காட்டமங் குல்கலையோன்
பூப்புறுங் காலநசி கின்றதென் காட்டுமுன் போந்தகற்கே.

தக்க நிதிப்பய னன்பாக குதவுத லானென்றறி
மிக்க விரவி வருபொழு தேபொன் விளக்கின்றனன்
அக்க மலத்திலென் காட்டும்பின் சொன்னதற் காம்புகழெண்
டிக்கு நாடாத்திடுஞ் செங்கோற் குமாரெட்ட சிதரனே.

ஒருவன் றன்னிடத்திலிருக்குஞ் செய்கையால் மற்றொருவருக்குத் தீங்கான பயனையாவது நன்மையான பயனையாவதறிவிப்பது மவ்வணியே. இதற்கு "மாநிலவின் கோப்பகை" யென்பதுமுதற் றீங்குப பயனினறிவிப்புக்குந் "தக்க நிதி" யென்பது முதல் நன்மைப் பயனினறிவிப்புக்கும் நிரலே யுதாரணங்கள். இவற்றுள் முந்திய வுதாரணத்திற் கலையோன் பூப்புறுங்கால் நசிகின்ற மங்குல் அத்தொழிலால் மாநிலவின் கோப்பகையோன் நசிப்பானென்பதைப் பிறருக்குத் திருஷ்டாந்தமாகக் காண்பிக்கின்றது.

## நற்பொருட்காட்சியணி.

இது நீங்குப் பொருட்காட்சியணி யாம் இதை வடநூலார் அஸதார்த்த நிதர்சனை என்பர். இரண்டாவதுதாரணத்தி லிரவிதா னுதிக்கும்போதே கமலங்களுக்கழகை விளைவிக் கின்ற தொழிலாற் றக்க நிதிப்பய னண்பர்க்குங் கொடுத்த லே யென்று தெரிவிக்கிறானென்று மிதுநற் பொருட்கா ட்சியணி யாம். இதை வடநூலா ஸதார்த்தநிதர்சனை யென்பர்.

செய்யுள்.

அற்பன் மேன்மை யுற்றுவிளை யாட்டா சக்கீழ் விழ்வனெனுஞ்
சொற்பு கலு நின் றது வாய்விண் டிலங்கு பொருப்பி னதுசிகரத்
திற்ப ரவி யுற் றிருந் திடிநீர்த் திவலைக் குழுமென் சிறுகாலாற்
பொற்பின் மடந்தாய் பாரசைவு பொருந்திக் கீழ்வீழ் கின்றதுவே.

இங்ஙனம் பொருப்பினது சிகரத்திற் பரவி யிருந்த நீர்த்திவலைக்குழு, மெல்லிய காற்றினுலசைவுற்று கீழே வீழ்கின்றதாகி யற்பனுக்கு மேன்மையா மிடத்திற் செ ல்லுதல்கீழே வீழ்வதற் கேதுவென்ற நீங்குப் பொருளை விளக்குகின்றது.

செய்யுள்.

இல்லறத்தோர் சாதுக்கட கின்னதிதி பூசையினை
எல்லைசெய வேண்டுமென வேயுணர்த்தும்—நல்லுதய
மாமலைதன் பாலே வருமிரவி யைக்கொளுஞ்சூ
டாமணித்தா னத்தினிலேல் டா.

இங்ஙனம் தன்னிடத்துக்கு வருமிரவியைச் சூடா மணி வைக்குமிடத்திற் றாங்குகின்ற உதயகிரி, அரசெய் கையா லில்லறத்தோர் ஸாதுக்களை யதிதி பூசை செய்து கொண்டாட வேண்டுமென்ற நல்ல பயனை விளக்கு கின்றது. இங்ஙனஞ் சிலர், வாக்கியப்பொருட்காட்சியணி யிலும் பதப்பொருட்காட்சியணியிலும் பொருள்களினி யையபில்லை யென்றும் மூன்றாவது காட்சியணியிற் பொரு

ளினியை யிருக்கிறதென்றுங் கூறி, யவற்றுள் முதலாவது வாக்கியப்பொருட்காட்சியணியி லிரண்டு வாக்கியங்களிற் பொருள்களொன்றாகாம லொப்புமையில் முடிகிறதென் றும் இரண்டாவது பதப்பொருட்காட்சியணியி லொரே தருமம் மற்றொருபொருளி லுண்டாகாமையா லதுவு மொப்புமையில் முடிகிறதென்று மூன்றாவது தீப்பொருள் நற்பொருட்காட்சியணியிற் றன்னிடத்திலிருக்குந் தொழிலாற் பிறருக்குத் தீப்பயனேயாவது நற்பயனேயாவது அறிவித்த லுளதாகியே யொப்புமைகொண்டதெனக் கூறுகிறார். கனற்புத்தி பிள்ளைகளைப் படிக்கச் செய்கின்றதென்பதுபோ லுதயகிரி நற்பொருளை அறியச்செய்கின்றதென்னு மிடத்திற் பிறவினை யெனக்காண்க. அது படிக்கின்றவர்களுக்குக் குளிரைநீக்கிப் படிப்பிலாவலுண்டாக்குவதுபோ லிம்மலை தானுவமானமாகி மற்றவர்களுக்குத் தன்னைப்போற் பெரியோர்களைச் சிரத்தினாற் கொண்டாடவேண்டுமென்ற புத்தியை யுண்டுபண்ணுகின்றதென்க.

---

## உ0-வது வேற்றுமையணி.

(வியதிரேகாலங்காரம்.)

ஒப்பா மொழியுவ மானேவ மேயத்தி னொன்றினைப்பே
திப்பா மெனிலது வேற்றுமை மேலர் சிகரியைப்போற்
றப்பா துயரினு மெல்லிய ரென்ப துதாரணமா
மெப்பாவ லோரும் புகழெட் டயபுரத் திந்திரனே. (சசு)

ஒப்பாக வருணித்த வுபமானேபமேயப் பொருள்களுக்கு ளொன்றைப் பேதப்படுத்தி வருணிப்பது வேற்றுமையணி. இதை வடநூலார் வியதிரேகாலங்காரமென்பர். இதற்கு "மேலர் சிகரியைப்போ"லென்பதுமுதலுதாரணம். இங்ஙனம் மேலரென்றவுபமேயப்பொருளையும்

சிகரியென்ற வுவமானப்பொருளையு முயாதலென்ற குணத் திருலொப்பாக வருணித்துப் பின் புவமேயமாகிய மேல ருக்கு மெல்லிய மெய்யை யுடைத்தாயிருக்குந் தன்மை யைப் பிரித்துக கூறியிருப்பமையா லிதுவுவமேயஞ் சிற ந்த வேற்றுமையணி.

செய்யுள்.

தங்குகற்ப கத்தின் றனிரினுமுன் பாலையினுக
கிங்குகொ டைவள்ளா லெதுசிறப்பேழல்—அங்கணது
கன்னநின்று மேவுமலங் காரப் படுத்துமிது
கன்னனின்னுந் தாழவருங் காண்.

இங்ஙனமுங் கன்னனின்று மேவியலங்காரப்படுத்து நின்ற வுவமானமாகிய கற்பகத்தளிரினும் புகழக் கூடிய வரசனது உவமேயமாகிறகைக்குக் கன்னனைத்தாழச் செ ய்யுமென்ற சிறப்பிருக்கின்றது முந்தியவுதாரணத்தி லுவ மானையமேயத்தி னைபபுத் தன்மையாகிற வுயர்ச்சி விரிந் திருக்கிறதென்று மிங்ஙனஞ் சிவபபு மென்மை முதலிய வொப்புத்தன்மை தொகநிருகின்ற தறிக.

செய்யுள்.

எனதுநேய மேபுகிதா யிருக்குந்தளிரி னிராகிநீ
எழிலுயசிமேம் படுகுணத்தி னிராகிநானுஞ் சிலிமுகங்கள்
வனமாருனது பாலடைய வருகின்றனவென் பாலினுமா
மதன்விலெழுந்து சிலிமுகங்கள் வருகின்றனவு யசிபதத்தின்
இனமாமிதியுன் றனக்குமுவப் பிணையேகொடுக்கு மெனக்குமவ்வா
றேயுற்றதுநம் மிருவருக்கு மெல்லாம்பார்க்கி லேசம்மாத்
தினமுமிருந்த தாலுைம் திகழுமசோக மேநீநான்
செய்யமுகம்நான் கினைப்பெறுவேதியனற்சோகமானேனே.

இங்ஙனம் இராகியாக விருப்பது முதலாகிய் வொப் புத்தன்மை யுவமானமாகிய வசோகத்திற்கும் முவமேயமா கிய விரகபுருடனுக்கும் பொதுவாயிருந்தாலும் சோக

மில்லாமை யென்றுந் தாற்பரியங்கொண்ட வசோகமென்னும் பெயருள்ள வுவமானமாகிய தருவைப் பார்க்கினு முவமேயமாகிய விரகனுக்குச சோகமுற்றிருக்கிற தென்ற குறைவு தோன்றுவதா லிதுவுவமேயக் குறைவான வேற்றுமையணி.

செய்யுள்.

மிகக்கிட மேவியிட் வேயிடிகளுங் கைப்பிடியும்
தக்கதென்னும் பொன்னுறைமேற் றங்கிருப்பும்-புக்கியல்பாச்
சேர்கறுப்புங் கொள்வஞ்சகத் திற்குமொரு வஞ்சனுக்குஞ்
சாரிறுதி யக்கரப்பே தம்.

இங்ஙன முவமானுவமேயமாகிய வஞ்சகத்திற்கும் வஞ்சனுக்குந் திடமாகிய கைப்பிடி முதலிய வொப்புமையிருந்தாலு மிறுதியக்கரத்தைப் பேதமாக வுரைத்திருக்கின்றது. உவமானமாகிய வஞ்சகத்தைப்பார்க்கினு முவமேயமாகிய வஞ்சனுக்கு மிகை குறைதோன்றுமையால் இஃது இரண்டிமில் வேற்றுமையணி.

---

## உக-வது உடனவிற்சியணி.

(ஸஹோக்தியலங்காரம்.)

உணர்ந்தோருவக்க வுடனிகழ் வோத லுடனவிற்சி
வணஞ்சேரும் வேந்தன் புகழ்திக் குறுமரு வாரொடெனல்
இணங்கு முதாரணஞ் சோமத் தலைவி ருதின்கழல்வங்
கணங்கொள் பதாம்புய துங்க குமாரெட்ட காவலனே.

பன்னூலாராய்ச்சியுள்ளவர்களின் மனமகிழும்படி யுடனிகழ்வதை வருணித்தலுடனவிற்சியணியாம். இதை வடநூலார் ஸஹோக்தியலங்காரமெனபர். இதற்கு "வணஞ்சேரும் வேந்த"னென்பதுமுதலுதாரண மிங்ஙனம் வேந்த

னது புகழ். சத்துருக்களோடு திக்குகளிற் சென்றது என்ற மையாற் சத்துருக்களும் புறங்காட்டித் திக்குகளிலோடினார் புகழுந் திக்குகளில் வியாபித்ததென்ற சிறப்புத் தோன்று கின்றதென்க.

செய்யுள்.

மரங்களினடியிலவைநிழல்சிரமம்வாய்ந்தபோனடந்தீமவழிச்செல் வாரோடுமிசைந்து வந்திருந்தனநீள் வாவிநீர்த் தண்மையுந்தாபம் திரமுறப்பொருந்த லுற்றதுபோலச் சேலினமொடுபுனலடியிற் சென்றதோராழி யிரதனும்வெம்மை சேர்ந்தவன் போற்பலவாகுஞ் சரங்களினொடுதண் புனலினையருந்துதலையுறுகின்றனன்றயிலுந் தழைவுறுவருத்த மடைந்ததுபோலத் தலைவியரொடுமறைவீட்டுள் விரைவுறப்புகுந்த திந்தநண்பகலாம்வேளையி லெனதொருமகளும் வெஞ்சுரநோய்கொள் ளுஞ்சுரம்போக மிஞ்சுரமெங்ஙனமுறுமே.

இங்ஙனம் நிழல் முதலியவைகளுக்கு வழிசசெல் வோர் முதலியவைகளோடு கற்றோா மனமகிழத்தக்க வு டனிகழ்ச்சி வருணிக்கப்பட்டிருக்கின்றது. இவ்விலக்கண த்தி லுணர்ந்தோருவக்கவென்ற விசேஷணங் கொடுத் திருப்பமையால் இவரோடு சமுத்திரக்கரையில் விளை யாடுவா யென்னுமிடத்தில் உடனிகழச்சி யிருந்தாலுங கற்றோரை மகிழ்விக்குஞ் சிறப்பில்லாமையா லிவ்வணி யாகாதென்க.

---

## உஉ-வது இன்மைநவிற்சியணி.

### (விநோக்தியலங்காரம்.)

எதுமொன் றிலாமை யதனாற் புனைவுளிக் கேகுறைவு
கதுவ வுரைக்கி லதின்மை நவிற்சியிக் கல்வியுயா
வதுதா னெனினும் வணக்க நிதிய மருவிலதேல்
அதுமேலன் றென்ன லுதாரணந் தென்னிள சைச்கரசே.

ஏதேனுங் கிஞ்சித்தில்லாமையால் வருணியத்திற்குக் குறைவு தோன்றச் சொல்வது இன்மைநவிற்சியணி. இதை வடநூலார் விநோக்தியலங்கார மென்பர். இதற்குக் "கல்வி" என்பதுமுத லுதாரணம். மிங்ஙனங் கல்வி மேன்மையாயினும் வணக்க நிதியமில்லாவிடில மேன்மையன்றெனக்கல்விக்குக் குறைவு கூறலாயிற்று.

செய்யுள்.

எவனி ராகவற் பார்க்கிலனோ விரா
கவனு மேவனைப் பார்க்கிலனோ வவன்
புவனி மீதுநிந் திக்கப் பொருந்துவன்
அவனைத் தன்னுளும் நிந்திகக லாகுமே.

இங்ஙனம் வருணிக்கத்தக்க வோர் மானிடனுக் கிராகவ தரிசனமென்பது ஒன்றில்லாமையாற் குறைவு கூறலாயிற்று.

இதுவுமதுசவி.

புனைவுளி யேதுமொன் றில்லாமை யூனுயர் வைப்பொருந்தும்
அனையது மவ்வணி மன்னவை நின்னவை கோளறை வோன்
றனையடை யாமைபின் மிக்கொளி யாமென் னுதாரணந்தேர்
வனைவுறு சந்திர காவியி டால்கொண்ட மன்னவனே.

ஏதேனுங் கிஞ்சித்தில்லாமையால் வருணியப்பொருள் மேன்மையடைவதும் இன்மைநவிற்சியணியாம். இதற்கு "மன்னவ" வென்றதுமுத லுதாரணம். இங்ஙன மன்னவ நின்ஸபை கோட்சொல்லுகிறவர்களில்லாமையால் விளக்கமுற்றது என்றமையால் வருணிக்கத்தக்க ஸபைக்கு மேன்மை கூறலாயிற்று.

செய்யுள்.

அதிக சினம் நீங்கினவ ளாந்திருவி-
லுருவமையிவ் வரிவை சோமன்
உதயமுற வுந்தமமோ டியவிரவு
போலுமிரா வொளிர்தீ யின்மி

குதிபெறுவெம் புகையகல்சு வாலையது
 பேர்லுமிடி கோடு கீழ்வீழ்
வதின்முழுதுங் கலங்கியபின்
 றெளியாகீரதிபோலும்வதிகின்றுளே.

இங்ஙனம் உவமேயமாகிய பெண் மோகமில்லாமை யாலு முவமானமாகிய இரவு முதலியவைக ளிருள்முத லிய வொவ்வொன்றில்லாமையாலும் விளக்கமுற்றிருக் கின்றமை தோன்றிற்று.

---

## உரு-வது சுருங்கச்சொல்லலணி.

(ஸமாஸோக்தியலங்காரம்.)

ஒரு மடைமொழி யொற்றுமை யாற்புனை வுள்ளிவிவ
காரம் புனைவிலி யின்விவ காரத்தைக் காட்டிலதன்
பேருஞ் சுருங்கச் சொலல்காட் டிசைப்பினி ராகியுமா
யோாங் கிரிமுகங் கொஞ்சுஞ் சசியென லெட்டமினே.

எங்ஙனம் வருணிக்கவேண்டிய விவகாரத்தை வரு ணிக்கும்போது அதின் விசேஷணங்களி னொற்றுமையின் பலத்தால் அவருணியமாகிய விவகாரந்தோன்றுகின்ற தோ அங்ஙனஞ் சுருங்கச்சொல்லலணி. வருணியாவருணி யங்களான விவகாரங்களைச் சுருக்கமாகக் கூறுவதாலிஃதிப் பேர்பெற்றது. இதை வடநூலார் ஸமாஸோக்தியலங்கார மென்பர். இதற்கு "இராகி" யென்பதுமுதலுதாரணம். இங் ஙனஞ் சந்திரனுக்குக் குணதிசையினது முதற்பாகத்தின்ஸ ம்பந்தமாகிய வுதயத்தை வருணிப்பதில் முகமென்ற சொ ல்லுக்கு முதற்பாகமென்றும் வதனமென்றும் பொருள் சொல்லத்தக்கதாயிருப்புமையாலு மிராகியென்ற சொல் லுக்குச் சிவப்பை யுடையானென்றும் காதலையுடையா னென்றும் பொருள் கொள்வதாலும் கொஞ்சுமென்ப தற்கு ஸம்பந்தப் படுகிறானென்றும் முகக்கிறானென்றும்

பொருள் கொள்வதாலுஞ் சசியென்னும் பதத்திருக்கும் ஆண்பாலாலோர்புருடனெனக் கிடைத்தமையாலும் ஐந்திரியென்னு மிடத்தில் விளங்குகிற பெண்பால் விகுதியாலிந்திரனைச் சேர்ந்த வோர் பெண்ணென்று கிடைத்தமையாலும் அவருணியமான அன்னியமடந்தையிட மாவனுள்ள வோர் காமுகனது விவகாரந்தோன்றுகின்றது.

செய்யுள்.

கந்துகமே நீயிந்தச் சுந்தரியாள்
மிகக்கனக் கொங்கைகளாடக்
குந்தளமா டப்புறந்தாழ்ப் பந்திகற்றி
யாடவண்ண குந்தோடாடச்
சந்தமுக மனைவேர்வைத்துளியாடக்
கையடிசந்ததங்கொண்டாட
வந்துயிர்ப்பு மேலாடப் பெட்பொடனு
குற்றதனல் வாழ்வுற் றுயே.

இங்ஙனம் கந்துகத்தின் விவகாரத்தை வருணிப்பதிற் கொங்கைகளின்ஞட்ட முதலாகிய தொழிலொற்றுமை யிருப்பமையால் விபரீதப்புணர்ச்சி செய்கின்ற தலைவியின் விவகாரந் தோன்றுகிறது. முந்திய வுதாரணத்தில் விசேஷணங்கள் சிலேஷையாகவிருக்க வொற்றுமை தோன்றுகிறதென்று மிவ்வுதாரணத்திற் சிலேஷையன்றிப்பொதுவாயிருக்க வொற்றுமை தோன்றுகிறதென்றும் பிரிவு காண்க. இவ்வணி விசேடணங்களினொற்றுமையன்றி முற்றிய வருணிய விவகாரத்தி னொற்றுமையாலும் அவருணிய விவகாரந் தோன்ற வருமென்பதற்குதாரணம்.

செய்யுள்.

முன்னதிப னீரோட்ட மெவனுறுமவ்
வண்புளின மோவுண் டிந்நாள்
மன்னுதரு வாற்கலக்க மாய்ச்செறிவா
யிருந்தவிட மாறிற் றய்யா

வுன்னவெகு நாட்குமுனநீ காணிவனம்
வேறெனினே வுறுவே ஞுற்
பன்னுபருப் பதத்திருப்பவ் வனமென்றே
நல்லுறுதி பண்ணுந் தானே.

இங்ஙனம் வன வருணனையி லதற் கொப்பான தன் மக்கள் செல்வமுதலிய வைகளின் குறைவு நிறைவுகளின் மாறுதலே யுடைய நகர முதலியவைகளின் விவகாரந் தோன்றுகிறது. இங்ஙனம் வருணியாவருணியங்களுக்குப் பொதுவாகிய விசேடணங்களின் பலத்தினுலாவது விவகாரத்தி ஞெற்றுமையினுலாவது அவருணிய விவகாரத்தைத் தோன்றச் செய்தல் வருணியமான விசேடியத்திலொற்றுமை யாரோபித்தற்காம். எந்த விடயத்தினுலாவது வருணியத்திற் சம்பந்தப் படாதிருக்கும் விவகாரங் கவிகளால் வருணிக்கக் கூடியதாக நேராமையாலென்க. இவ்வணியில் வருணியமான விவகாரத்தி லவருணியமான விவகாரத்தை ஒற்றுமை தோன்ற ஆரோபித்தலே மனமகிழ்ச்சிக்குக் காரணம். முகம் சந்திர னென்னுமிடத்து முகத்தில் சந்திரனது தன்மையை ஆரோபித்தற்குக் காரணமாகச் சந்திரனென்ற சொற் சேர்க்கை யிருப்பதுபோற் "சசியிராகியுமா யேனைாந்திரிமுகம் கொஞ்சு" மென்ற சுருங்கச் சொல்லலணியிற் சந்திரனிடத்திற் சோரநாயகனின் றன்மையை. யாரோபிப்பதற்குக் காரணமாகச் சோரநாயகனென்ற சொற் சேர்க்கை யில்லாமையா லுருவகணியில் வருணியத்தி லவருணியத்தைச் சொரூபமாக வாரோபிப்பதுபோலிவ்வணியிலில்லை யென்க.

செய்யுள்.

புயன்மி னேத்திரத் தாற்பர புருடனைத் தேடி
முயனு வாள்முக மிரவினி ஞேக்கிமுன் ஞைப்
பயமோ டிம்மதி யுமிழ்ந்தன மோவெனப் பரிவு
தயமி குந்துதா ஞேலமே புரிதனிச் சயமே.

இந்த வேகதேச விவர்த்திரூபகத்தில் வருணியமான புயலி லவருணியமான வோர் புருடனது தன்மையை ஆரோபித்தற்குக் குறிப்பாயிருக்கும் பார்த்தற் குபயோகமாகும் பொருட்டாக் கண்களையே முக்கியமாகக் கொள்ளத்தக்க மின்னேத்திரத்தாலென்ற சொற் சேர்க்கை யிருப்பதுபோலு மிங்ஙனமில்லை. அவ்வணியில் மின்னும் விழியாலென்ற சொல்லானது தொக்கியிருக்கின்றது ஓர் புருடனின் றன்மையைப் புயலி லாரோபிக்கவேண்டு மெனக் குறிப்பிடுகின்றது ஏகதேச ரூபகத்துக குதாரணமாகிய "புயன்மினேத்திர"மென்ற செய்யுளில் வருணியத்திற்கே உரித்தான நோக்கியென்ற சொல்லிருப்பதுபோலும் "நிவந்திடு நீவருங்கா" லென்ற வுருவக வுதாரணத்தில் வருணியத்திற்கே யுரித்தான சேதுவை வகுத்திட்டவன் கடைதல் புரிந்தவனென்ற விசேடணச் சொற்களிருப்பது போலு மிங்ஙனமில்லை. சிலேடையான விசேடணங்களாலாவது பொதுவான் விசேடணங்களாலாவது துலங்குகின்ற வருணியா வருணிய விவகாரங்களுககுளவருணிய விவகாரமானது மினனேத்திரத்தாலென்னு மிடத்தில் விழி முக்கியமாயிருப்பதுபோல முக்கியமாக இல்லை. "நி வந்திடு நீ வருங்கா" லென்ற செய்யுளில் வருணியத்தைச் சொல்லாதிருக்கினு முரித்தான சேதுவை வகுத்திட்டவன் கடைதலைப் புரிந்தவ னென்ற விசேடணங்களால் அவருணியத்தின் சொரூபமாரோபித்தலிருப்பதுபோலு மவருணிய விவகாரத்தை யறியக்கூடிய அவருணியத்திற்கே யுரித்தான விசேடணங்களுமில்லையாதலால் வருணிய விவகாரத்தின் விசேடண ஒற்றுமையாற் கிடைத்த அவருணிய விவகாரத்தை வருணிய விவகாரத்திலாரோபிப்பதே யிவ்வணியில் மனமகிழ்ச்சிக்குக்காரண மென்க. தனித்தனியாகக் கூறிய விசேடணங்கள்போலப் பொதுவாகவாவது சிலேடையாகவாவது இருக்கும் விசேடணங்களின் பலத்தினாற் கிடைத்த வருணி

யாவருணிய விவகாரங்கள் நேரில் விசேடியத்தோடு சம்பந்தப்படுவதா லிரண்டு விவகாரமு முக்கியமாகவே யிருக்கின்றன. அவ்வாறிருந்தாலும வருணிய விவகாரஞ் சம்பந்தப்படுவதற்காக வருணியத்தி லவருணியத்தின் சொரூபமாரோபித்தலே அங்கீகரிககத்தக்கதன்று. வருணியமான சந்திர விசேடியத்தில் அவருணிய விவகாரத்தின் சேர்க்கை யெவ்வாறு நேராதோ வவ்வாறே அவருணிய விசேடியமான சோரநாயகனிடத்தில் வருணிய விவகாரத்தின் சம்பந்த நேராது. ஆதலால் முக்கியமாயிருக்கும் வருணியா வருணிய விவகார மிரண்டனுள் ஒன்றி லொன்றி னாரோபித்தலே முககியமாக அங்கீகரிக்க வேண்டுவதாற் சொற்களாற் கூறப்பட்டிருக்கும் வருணிய விவகாரத்தி லவருணிய விவகாரத்தை யாரோபித்தலே யுசிதமென்க. இங்ஙனம் வருணியத்திற் சிலேடையாக வாவது பொதுவாகவாவது இருககிற விசேடணங்களாற் கிடைத்த ஆவலுடன் முகத்தை முகக்கிறுனென்ற அவருணிய விவகாரத்தினாரோபித்தலே மனமகிழ்ச்சிக்குக் காரணமென்று தீர்மானிக்கப்பட்டிருப்பமையாலும் விசேடணங்களி னொற்றுமையா லுண்டுபண்ணப்பட்ட காமுகன் முதலிய வந்தரங்கத்தருமிகளைக் கருதி ஆரோபத்தின பேக்ஷித்த லில்லாமையாலும் விசேடணங்களி னொற்றுமையா லந்தரங்கத்தருமிகளான வவருணியங்கள் தொகையாக விளங்குகிறது சுருங்கச் சொல்லலணி யென்ற தாத்பரியமுள்ள

செய்யுள்.

புனைவழி மேவடைச் சொல்லொற் றுமைபிற் புனைவிலியா
நினைவது மேமறை வாகி விளங்கி நிகழ்த்தவரில்
வனையும் பெயர்சுருங் கச்சொல் லென்று வகுத்தனரு
லனைவருந் தேர்வித்தி யாநாத னென்னு மருங்கவியே.

என்ற இலக்கணம் எவ்வாறு சம்பந்தப்படு மென்றா லோ அதற்குக் கூறுவாம். அவருணியமான விவகாரத் தை யந்தந்தத்தருமிகளைக் கருதிச் சொரூபமாரோபித் தல் மனமகிழ்விப்புக்குக காரணமாகமாட்டாது. அவரு ணியமான காமுகன் முதலியவர்களின் சம்பந்தத்திலறிய ப்படுகிற வவருணிய விவகாரத்தி னாரோபித்தலே காரண மாம். அந்தந்தத்தருமியாகக் கருதுவதில் விசேடணங்களு க்குச் சாமர்த்தியமில்லை. ஆதலாற் சிலேடை முதலியவை களின் சாமர்த்தியத்தினாற் சொரூபமாக விசேடண பதங் களாலுண்டுபண்ணப்பட்ட முகம் கொஞ்சுதல் முதலிய வைகளா லந்தச் சம்பந்தமுள்ள காமுகன் முதலியவர்க ளின் றோற்றமுண்டானதின் பின்பு அககாமுகன் செய்த முகமுகத்தலென்ற அறிவுண்டாகின்றது. உலகத்திலோர் மன்னவனது குதிரையைச் சொரூபமாகக கண்டவுடனம் மன்னவனது நினை வுண்டாகிப் பின்பிக் குதிரையம் மன் னவனது என்ற ஞானமியல்பாக வுண்டாகின்ற தன்றோ? அவ்வாறே இங்ஙனமும் விசேடணங்களினொற்றுமையாற் காமுகன் முதலியவர்களி னினைவுண்டாகிப் பின்பவனு டைய தென்ற ஞானம் உதிக்கின்றது. ஆதலால் பொது வான விசேடணங்களிருக்கு மிடத்தி லவருணிய விவகா ரத்தை ஆரோபிப்பது போலவே சிலேடையான விசே டணங்களிருக்கு மிடத்திலுமவருணியமான விவகாரத்து க்காரோபமென்றே முன்னூலாரின் முடிபென்க. சொரூ பமாகக் கந்துகத்திற் சுந்தரியின்னனுகுதலிருப்புமையா லும்ஃதாரோபிக்க வேண்டுவதில்லாமையாலும் ஆட்டமு ள்ள கொங்கைகள் முதலியவைகளுடன் கூடிய சுந்தரி யின் னனுகுதலை காமுக சம்பந்தமுள்ளதாக வைத்து ஆ ரோபிக்கவேண்டிய திருப்பதாலுஞ் சாதுருசியத்தினால வருணிய விவகாரந்தோன்றுகின்ற சுருங்கச் சொல்லலணி யிற் சொற்பொருளில்லாமலிருக்கு மவருணிய விவகார த்தை யந்தந்தத்தருமிகளைக் கருதி ஆரோபிப்பதற்கிடமி

ல்லாமையா லவருணிய விவகாரமாகவே யாரோபிக்கவே ண்டிய திருப்பதாலு மற்று முதாரணங்களிலு மவருணிய விவகாரத்தையே யாரோபிப்பதுசிதமென்க. முன்னோரி லக்கணமு மிக்கருத்தையே கொண்டதென்று ஊகிக்கவே ண்டுமென்க.

---

## உ௪-வது கருத்துடையணி.

(பரிகராலங்காரம்.)

செய்யுள்.

கொண்டவி சேடணத் திற்புனை தற்கனு கூலக்கருத்
துண்டெனி னும்புகல்வ துகருத் துடையணியென்
றண்டு மமுத கரமுடி நாதன கற்றுங்கநம்
எண்டெறு தாபத்தை யென்ன விலகிய மெட்டமனே.

எங்ஙனம் விசேடணம் வருணிக்கிற தாற்பரியத்துக்க நுகூலமான கருத்தைக் கொண்டிருக்கின்றதோ வுங்ஙனங் கருத்துடையணியாம். இதை வடநூலார் பரிகராலங்கார மென்ப ரிதற்கு அமுதகர முடிநாத னென்பது முதலுதா ரணம். இங்ஙனஞ் சிவபெருமானுக்கு அமுதகர முடிநாத னென்ற விசேடணங் கொடுத்திருப்பமையாலது அவருக் குத் தாபத்தை நீக்குவதில் விசேடமான சாமர்த்திய மி ருக்கின்ற வபிப்பிராயத்தை விளக்கிற்று.

செய்யுள்.

ஏவா சவநான மலர்ப்பாணத் தினனாய்
வசந்த னென்பவனே
யோவா நேச மாகவுங்கொண் டினது
பிரசா தப்பெருக்காற்
கோவாம் பினாக பாணியெனக் குறிக்கு
மரற்கும் பலங்குறைப்பே

ஞவா வெனக்குப் பதித்திடத்தக் கவரா
மற்றை யருந்தானே.

இங்ஙனம் பரமசிவனுக்குக் கொடுத்த பிநாகபாணி என்ற விசேடணமு மன்மதனுக்குக் கொடுத்த மலர்ப்பா ணத்தோ னென்ற விசேடணமு மவ்விருவர்களுடைய அதி பலத்தையும் பலக்குறைவையும் விளக்கிற்று.

செய்யுள்.

எல்லா வசுதத விருப்பா யுபசார
நல்லாப் புரிந்தவைவி ஞக்குவதாய்ப்—பொல்லாத
வீவதுமாய் வந்தகெட்ட மெய்விடய மாய்மூடர்
பாவம் புரிவரவர் பாழ்.

இங்ஙனஞ் சரீரத்துக்குக் கொடுத்த விசேடணங்க ளதற்கு மிகுதியான குறைவை யுண்டுபண்ணிக் காப்பாற் றத்தக்கதன்றென்ற கருத்தை விளக்குகின்றன.

செய்யுள்.

வன்றிறலோ யாரொருமைப் படுமறையைப்
பிரிக்கவிலை வன்மீ கத்தி
னின்றும்வெளி யுதிக்கவிலை யச்சுதனுந்
திப்பிறப்பி னோ விலலை
நன்றுறுமா பாடியமு மியற்றவிலை
பெருங்கதையு நவில விலலை
வென்றிமக வான்குருவா கவுமிலையுன்
குணம்புகழ்ந்தெவ் விதஞ் சொல்வேனே.

இங்ஙனம் மறையைப்பிரிக்கவில்லை யென்றது முத லிய விசேடணங்கள் தன்னிடத்தில் வேதவியாசர் முதலி யவர்களாற் செய்யக்கூடிய செய்கையைச் செய்ய வன் மையில்லை யென்ற வபிப்பிராயத்துடன் கூடிய நான் வி யாசர் முதலியவர்களல்ல வென்ற வபிப்பிராயத்தைக்

கொண்டிருக்கின்றன. இங்ஙன முந்திய விரண்டுதாரணங் களி லொவ்வொரு விசேஷண மபிப்பிராயமுள்ளதாக விரு க்கின்றது. பிந்திய விரண்டுதாரணங்களிற்பல விசேஷணங் களபிப்பிராயமுள்ளவைகளாக விருக்கின்றன. அதிலு முத லாவதுதாரணத்தி லெல்லா விசேஷணங்களு மொரே ய பிப்பிராயங்கொண்டவைகளு மொவ்வொரு சொற்களாக வு மிருக்கின்றன. இரண்டாவதுதாரணத்தில் வெவ்வேறா ன வபிப்பிராயமுள்ளனவாகவும் வாக்கிய ரூபங்களாகவு மி ருக்கின்றன. இவ்வுதாரணங்களில் வெங்கியமான பொரு ளிருந்த போதிலும தொனியென்ற விவகாரமில்லை. பரம சிவனுக்குத் தாபத்தை நீக்குவதிலும், மன்மதன் பஞ்சபா ணியான பரமசிவனது தைரியத்தைக் குறைத்து விட்டா னென்றால் மற்றும் வில்லாளிகளைப் பங்கஞ்செய்வதில் எ ன்ன சொல்லவேண்டு மென்பதிலும், சரீரத்தைக் காக்கும் பொருட்டாய்ப் பாவஞ் செய்கின்றவர்களுக்கு மூடத்தன் மையைக் கற்பிப்பதிலும், புகழப்படகூடிய வரசன் குணத்தை வருணிப்பதிற் றனக்குப் பலமில்லாமலிருப்பதிலும் விசே ஷணங்கள் தந்த முண்மைத் தாற்பரியத்தாலுபயோகப் படுவதைப்பற்றி யிவ்வணி யிப்பேர்பெற்றது. இங்ஙனம் சிலர் பயனில்லாத விசேஷணங்களைச் சொல்வதில் அபு ஷ்டார்த்த தோஷமென்றும் பயனுள்ள விசேஷணத்தைச் சொல்வதி லவ்வித தோஷமில்லையென்றும் நிச்சயித்துப பயனுள்ள வனேக விசேஷணங்களைச் சொல்வதி லோர் விசித்திர மிருப்பதா லவ்வண்ணம் பல விசேஷணங்களைச் சொல்லுமிடத்தி லிவ்வணியாமே யல்லது பயனுள்ள வொரு விசேஷணத்தைச் சொல்லுமளவில தோஷ மில் லாமலிருப்பதைத் தவிர இவ்வலங்காரமென்று சொல்லக் கூடாதென்றார். இதனுண்மையாயுங்காற் பயனுள்ளவனே கவிசேஷணங்களைச் சொல்லுமிடத்திற்றானிவ்வணி யென் ற தீர்மான மில்லை. சிலேஷையமக முதலிய விடங்களில் பயனில்லாமலிருக்கிற விசேஷணங்களைச் சொன்னபோதி

லும் அவ்வித தோஷமில்லை என்றங்கீகரிக்கப்பட்டிருப்ப மையா லவ்விடங்களி லொரு விசேஷணம் பயனுள்ளதா யிருந்த போதிலும் மனமகிழ்விக்கு மாதலால் இவ்வணி யே யாகின்றது காண்க.

செய்யுள்.

வாய்ப்புறுதன் தெய்வம்விடுத் தேவேறு வணங்குபவன்
பூப்பினுறு தேவிழப்பு மறப்பாவம் பொருந்துவனுங்
காப்பதலைத் தேவுண்டயார் காப்பதலை யெனவருவோ
னுப்பிறங்கு மகவானைத் தேவாக்கி னூரலவே.

இங்ஙனம் இந்திரனைப் பூசைசெய்யத் தொடங்கிய நந்தன் முதலியவர்களை நோக்கிக் கண்ணன் சொல்லிய கோவர்த்தனகிரியே நம்மைப் புரக்குந்தெய்வ மதையே நாம்பூசிக்கவேண்டும்; நம்மைப் புரக்காமலிருக்கிற இந்திர னைப்பூசிக்க வேண்டுவதில்லை என்ற வாக்கியத்திற் கோ வாத்தன கிரியினது“கா” என்றவிசேஷணமிப்பருவதம் வ னத்தையும் அருவிகளையும் கந்தமூலபலங்களையுந் திரணங் களையுங் கொண்டிருப்பமையால் நம்மையும் நமது பசுக் களையும் காக்கின்றது என்ற அபிப்பிராயத்தைக் கொண் டிருக்கிறது. இவ்வண்ண மிங்ஙன மநுகூலமான கருத் துள்ள வொருவிசேஷண மிருக்குமிடத்திலு மனமகிழ்ச்சி யுண்டாவதா லிவ்வணியாகத் தீர்மானிப்பமையால் மற்று மமுதகரமுடி நாதனென்ற பயனுள்ளவொரு விசேஷண மிருக்கு மிடத்திலு மிவ்வணியென்னத் தடைபடாதென்க. அல்லாமலு மொரேபதத்தினால் வருணியமான பொரு ளைப் பொருந்தும்படி செய்கிற தொடர்நிலைச் செய்யுட் குறியென்ற அணியை யெல்லாரு மங்கீகரித்திருப்பமை யால் இங்ஙனமும் அவ்வாறே யலங்காரமாக ஒப்புகொ ள்வது உசிதமென்க.

## ௨௫-வது கருத்துடை யடைகொளியணி.

(பரிகராங்குராலங்காரம்.)

செய்யுள்.

நடைகொள் விசேஷியந் தானே புனைந்து நவிலுவதற்
குடையநு கூலக கருத்தோ டிலது கருத் துடைய
அடைகொளி மாலென் சதுர்ப்புய னும்பொரு ளானவையின்
கொடையுள னென்ன விலகிய மெட்டம கோளரியே.

எங்ஙனம் வருணிக்கக் கூடிய தாற்பரியத்துக் கநு கூலமான கருத்துள்ள விசேஷியம் விளங்குகின்றதோ அங்ஙனம் கருத்துடை யடைகொளியணியாம். இதை வட நூலார் பரிகராங்கு ராலங்காரமென்பா். இதற்கு மாலென் பதுமுத லுதாரணம். அறம், பொருள், இன்பம், வீடு என்கிற நால்வகைப் பொருள்களையும் கொடுக்கின்றவர் திருமாலாகிய சதுர்ப்புய னென்றமையால் நால்வகைப் பொருள்களைக் கொடுப்பதற்குரிய நான்குகைகளுள்ளவ ரென்ற அநுகூலக்கருத்துள்ள விசேஷியம் விளங்குகின்ற தென்க.

செயயுள்.

கூர்த்தவேல சேஷனின் குணத்தையே வருக்கவும
கார்த்தவீரி யாா்சுன னெழுத்துவேலை காணவும்
பார்த்தல்காரி மேவவும் பருககவல்ல ரிவ்விதத்
தார்த்தசீர்க் குணங்களெங்ஙன் யானுமெங்ங னண்ணலே.

இங்ஙனம் அரசனது நற்குணங்களின் மேன்மையை வருணிக்கவு மெழுதவும் பார்க்கவு முரித்தாயிருக்கு மாயிரமுகங்களையு மாயிரங் கைகளையு மாயிர நயனங்களையுங் கொண்ட வாதிசேஷன் கார்த்தவீரி யார்ச்சுன னிந்திர னிம்மூவரையு மந்தந்தத் தொழில்களுக்கு விசேஷியமா

கக் கொண்டமை யுணர்க. முந்தியவுதாரணத்தில் நாற்புய னென்னும் விசேஷியத்தொகை வெளிப்படையாயு மிங்ஙன மாயிரமென்னுந் தொகையடை விசேஷியம் மறைந்தும் வருவதுணர்க.

---

## உசுஅ-வது சிலேஷையணி.

(சிலேஷாலங்காரம்.)

செய்யுள்.

தெரியும் பலபொருட் சொற்களின் சேர்க்கை சிலேஷையது
வருணிய மேய வருணிய மேயிரு மையெனவாம்
மருவி வருமலை யம்புவி யேந்திய மாதவன்காண்
ஒருகுளக் கண்ணா புரக்குக வேயென்ப தொன்றிற்குமே.

அமுது விரவி யுழையா ரலரொப் புறுநகமுத்
தமியென்ப தொன்றிற்கு மம்பி னதிபதி தானிசையை
யுமிழுங் கறையுறு மென்பதொன் றிற்கு முதாரணமாஞ்
சிமிழ்முலை யார்மத னென்னுங் குமாரெட்ட சீதரனே.

எங்ஙனம் பல பொருள்களுள்ள சொற்களின் சேர்க்கை விளங்குகின்றதோ வங்ஙனஞ் சிலேஷையணியாம். அது வருணியச்சிலேஷை யென்று மவருணியச்சிலேஷை யென்று மிருமைச்சிலேஷை யென்றும் மூன்றுவகையாம். இதை வடநூலார் சிலேஷாலங்கார மென்பர். இம்மூவகைச் சிலேஷைக்கும் வருமலை யென்பதுமுதல் நிரலேயுதாரணங்கள். அவற்றுள் "வருமலை யம்புவி யேந்திய மாதவன் காண்" என்பதில் வருணிக்கப்படுஞ் சிவபெருமானுக்குந் திருமாலுக்குஞ் சிலேஷைவந்தமையும் "அமுது விரவியுழையாரல ரொப்பு றுநகமுத்தமி" யென்னும் நாயகிமுக வருணனையில அவருணியங்களாகிய தாமரைக்குஞ் சந்திரனுக்குஞ் சிலேஷை வந்தமையும் "அம்பி

னதிபதிதானிசையை யுமிழுங்கறை யுறு" மென்பதிலிருக்கும் அம்பின்தாக்குதலாற் பெருகிய குருதிப்பெருக்குள்ள படைத்தலைவனது வருணனையில் அவருணியமாகிய சமுத்திரஞ் சிலேஷையாக வந்தமையுங் காண்க.

செய்யுள்.

எழும ராப்பட வாட்டம் பிடித்துமே
வழுவை யுங்கொன்ற மானையுங் கொன்றிடத்
தொழும்ப ரதனுக் கண்ணனு மாத்துலங்
கொழுங் குறும்புயற் கன்புள ருய்வரோ.

இங்ஙனம் வருணிக்கத்தக்க இராமனுக்குங் கிருஷ்ணனுக்குஞ் சிலேஷைவந்தமை காண்க.

வெண்பா.

பொன்னம்பா வைக்குநிகர் பூங்கொடியே வில்வேடன்
முன்னம்பா யப்பயமு மூழ்கிக்கான்—மன்னுதலாம்
வாயு மிருகஞ் சமானமே வித்திகழும்
பாயுனது கண்ணினுககுப் பா.

இங்ஙனம் நாயகியின் விழிவருணனையி லுவமானங்களாகிய மானுக்குந் தாமரைககும்வந்த வவருணியச்சிலேஷை காண்க.

செய்யுள்.

அரியணை யுதய மேறியுங் காந்தி
மானென வாகியு மிராகம்
விரியுமண் டலத்தோ ணுகியும் விளங்கு
நிலமன்மெல் லியகரங் களினுற்
பெரியதா முலக மடங்கலு மனத்திற்
பெறுமகிழ் வினைவிளைத் திடுவான்
தரியல ருளமு முருககுமின் சுவைச்செந்
தமிழமு தூறுநா வலரே.

இங்ஙன மிரவிற் சந்திரோதய வருணனையில் அவரு ணியமான அப்பொழுது முடிபுனைந்த அரசன், சிலேஷை யாக வந்தமைகாண்க. இருமைசசிலேஷை யுதாரணத்தில் விளங்குகின்ற வவருணியப்பொருளை யந்தந்தச் சொற்க ளின்சக்தியாற் றோன்றுகின்ற குறிப்பென்று முன்னோர்கள் கூறுகின்றார். அதில் வருணியாவருணியக் கருத்திற்றுண் டாகிய வுவமையணியைக் குறிப்பாகக் கூறவேண்டு மெ ன்பது கருத்தே யல்லது அவருணியப் பொருளைக் குறிப் பாகக் கூறவேண்டு மென்பதல்ல. சொற்களின் சக்தியி னால் விளங்குகின்ற வவருணியப் பொருளையு மந்தந்தச சொற்பொருளாகவே கூறவேண்டுவது முக்கியமாதலா லதைக்குறிப்பெனக கூறுவது உசிதமல்ல. ஆனால் அந் தந்த வரலாற்றின் பலத்தினால் வருணிக்கவேண்டிய பொ ருள் சீக்கிரமாகப் புத்தியிலுதித்ததின் பின்பு நிலமன் கர முதலிய சொற்களின் பலத்தினால் அவருணியப் பொருள் விளங்குகிறது. சொற்களின் சக்தியால் விளங்குகின்ற இதைக்குறிப்பெனக் கூறுவிட்டாலும் வருணியமான பொ ருள் தோன்றியபின்பு அவருணியப் பொருள் விளங்குவ தால் மறைபொருட் சிலேஷையாமோ வெனில்.

செய்யுள்.

மருங்கினி லுறப்ப யோதரந் தூங்கல்
 மருவியு மேகநீ ருறல்
அரும்பியுங் கடமே வளைந்துபல் லிடத்தி
 லாம்வலி மேவியுங கனமே
பொருந்தியுங் கூடற் கருமையா கியுங்கட்
 புலமறி யாமலு முடி
இருஞ்சய மடுத்து முதிர்வுறு சார
 லிசைந்திடு மலையிது மாலே.

சிவன்கொணில வாரியன்வந் திடுமுனஞ்சூ ரியகாந்த
மவிந்தகனலினைக்கொண்ட் திருள்வீக்க மடைந்ததுமே

னிவந்திடுநோக் கமுந்திமிரத் தாழ்கேடு நேர்ந்ததுகாண்
குவிந்தமுலை மலைகுலுங்க நடஞ்செய்மடக் கொடியிடையே

இச்சுருங்கச் சொல்லணியி னுதாரணங்களில் மறை பொருட்சிலேஷை யிருப்பதுபோ லரியணையென்னுங் கவி யில் வந்த இருமைச்சிலேஷை யுதாரணத்திலும் மறை பொருட் சிலேஷையாகக் கொளினும் பொருந்துமெனக் கொள்க. மருங்கினிலுற வென்னுங் கவியில அவ்வேளைக் குரியபொருள் விரைவாகப புத்தியிற்றோன்றிய பின்பு சிலேஷையான விசேஷணங்களி னொற்றுமையால் முதிர் ந்த வயதுள்ள வேசைமாதின் வரலாறும் சிவன்கொணி லவாரிய னென்னுங் கவியி லவ்வேளைக்குரிய சந்திரோ தய விவகாரம் தோன்றியபின்பு வைத்தியனது விவகார முந் தோன்றுவதால் அவ்விரண்டிடங்களிலுஞ் சுருங்கச் சொல்லலணியுஞ் செம்மொழிச் சிலேஷையு மிருக்கின்ற தென்பது யாவருக்கு முடன்பாடேயாமென்க. இவ்வா றே மறைபொருட் சிலேஷையுள்ள விடங்களிற் குறிப் பெனக் கொள்ளற்க.

செய்யுள்.

வலங்கொளுந் துவாரகைக் குமாரரரி வையருடனே
துலங்கிடுகோ லமுந்திரத்து வசங்கொடுமேற் றோற்றுகையும்
இலங்குதனிக் கற்பணியு மெழில்நிலவு மடிவயிறும்
அலங்கொளுமேல் மாளிகையி லகலாது வதிகுவரால்.

இங்ஙனங் கோலமுதலிய விசேஷணங்கள் மாடத் திற்கு நேரிற்பொருந்துவதுபோல் அரிவையர்க்கு நேரிற் பொருந்தாமை யானும் அவைகளைப் பொருத்தற்குரிய போல் முதலிய சொல்.

செய்யுள்.

உறும்பலஞ கப்படையுற் றாதையின்றோற் றத்தாற்
பெறுமலைவு காணப் பிறங்கித்—திறமாம்

இராகவ ஞரிலக்வ ஞைரயிசை வாவி
பராவுறுவான் மீகிசொலொப் பாம்.

என்னும் ஆக்ஷிப்தசிலேஷைக் குதாரணமாமிக்கவியி விருப்பதுபோலில்லாமையானுமவ்விசேஷணங்கள் அரி வையரிடம் பொருந்து முன்னமுடனென்னும் வேற்று மையுருபாலுடனிகழ்ச்சியன்றி யொப்புமைத் தோற்றம் பெறுமையானுமவ்விசேஷணங்களிலிருக்கும் பொருட்சிற ப்பாலே அவை யரிவையரிடத்திலும் பொருந்துகின்றன வெனக் கொள்ளுதலானு மறைபொருட்சிலேஷையென்க இச்சிலேஷையும் விசேஷணங்களிலரிவையரிடம் பொருந் தியபின் றேன்று முவமையணிக்கங்கமாகின்றமைகாண்க. இவ்வாறு மூவகையாகப்பிரிந்த சிலேஷை செம்மொழிச்சி லேஷை பிரிமொழிச்சிலேஷையென விருவகைப்படும். அவற்றுள் - முன்னையது கான் - பயோதர - முதலியவென் றும், பின்னையது - வருமலையம்புவி - படவாட்டம் பிடித்து முதலியவென்றுங் கொள்க. இங்ஙனம் பிரிமொழிச்சிலே ஷையைச் சொல்லணி யென்றும் செம்மொழிச்சிலேஷை யைப் பொருளணியென்றுஞ் சிலரிரண்டையுஞ் சொல்ல ணி யென்றுங் கூறுவாருமுளர். இவ்விரண்டும் பொருள ணியென்பதே யாசிரியர் கருத்து. இன்னு மிதன்விரிவை சசித்திரமீமாம்ஸையிற் கண்டு கொள்க.

---

## உஎ-வது புனைவில்லிப் புகழ்ச்சியணி.

(அப்ரஸ்துத ப்ரசம்ஸாலங்காரம்.)

செய்யுள்

அவ்ரு ணியவர லாற்றல் வருணியத் தாம்வரலா
றிவரி லதுபுனை வில்லிப் புகழ்ச்சி யிலங்குகரி
யவினையல் லார்க ணிரவாத சாதக மானதுபுள்
ளெவையினு மேலென் றிசைத்த விலக்கிய மெட்டமனே.

எங்ஙனம் அவருணிய விவகாரத்தின் வருணனையால் வருணியவிவகார மறியப்படுகின்றதோ வங்ஙனம் புனைவில் லிப்புகழ்ச்சியணி. இதை வடநூலார் அப்பிரஸ்துதப்பிர சம்ஸாலங்காரமென்பர். அவருணிய விவகாரத்தின் வரு ணனையால் வருணியவிவகாரத்தினறிதலும் வருணியாவரு ணியங்களுக் கொருவித ஸம்பந்த மிருப்பதா லுண்டாகின் றது. அச்சம்பந்தமும் ஸாதிருசியமாகவும் பொதுச்சிறப் பின் தன்மையாகவும் காரிய காரணத் தன்மையாகவும் வரும். அவற்றுட் பொதுச்சிறப்பான தன்மையிற் பொது வாற் சிறப்பினறிதலும் சிறப்பாற் பொதுவினறிதலு மென விருவகைப்படும். காரியகாரணத்தன்மையிலும் காரியந் தாற் காரணத்தினறிதலும் காரணத்தாற் காரியத்தினறிதலு மென விருவகைப்படும்- ஸாதிருசியத்தினற் ஸாதிருசியந் தோன்றுவ தொன்றும்- ஆக இபபுனைவில்லிப் புகழ்ச்சி ஐ வகைப்படுகின்றது. இவ்வாறே இப்பிரிவை முன்னூலா ருங்கூறினர்.

செய்யுள்.

காரியங் காரண மேனும் பொதுச்சிறப் பேனுங்கவி
தேரும் வருணிய மாங்கண்மற் றொன்றினைச செப்புவதா
லோரும் வருணிய மொப்புடை யாகமற் றேரொபபுமை
சார வுரைத்தலி னுலிவ் வணியுமைந் தாய்வருமே.

இவ்வைந்து பிரிவுகளுக்குட் ஸாதிருசியத்தினற் கி டைத்த பிரிவுக "கிலங்குங்கரியவ"னென்பதுமுத லுதார ணம். இங்ஙனம் அவருணியமான சாதகப்புள்ளினது வர லாற்றுல் வருணியமாகிய புல்லியர்களிடத்தி லிரப்ப தில் நாணமுற்ற வோர் மானியினுடைய வரலாறு ஸாதி ருசியத்தினுல் அறியப்படுகின்றது.

செய்யுள்.

நாய்ப்பிடர்த் தலையிற் பொய்ம்மயிர பந்தி
நன்குறக் கட்டியு மதனை

வாய்ப்புறு சீயக் குகையிடை வதிய
வைக்கினு மும்மதம் பெருகப்
பூப்புறு களிநல் யானைமத் தகத்தைப்
போழ்ந்திடு மாவன்மிக கூர்ங்கட்
டப்படு மடங்கற் றெனியைபொங்ஙனமே
செய்திடு மறிகுவை மகவே.

இங்ஙனம் அவருணியமாகிய நாயினதுநிந்தையால் வர்ணியமாயுள்ள பொய்வேடமுதலியவைகளால் வித்துவானுகப் பாவகஞ்செய்கின்ற வோர மூர்க்கனது விவகாரம் ஸாதிருசியமாகத் தோன்றுகிறது.

செய்யுள்.

உள்ளங் குழலுற் றுறவெளியிற் கண்டகங்கள்
கொள்ளுமரைத் தண்டின் குணநக ளெங்ஙன்
றேற்றுபங்க மேயடையா து.

இங்ஙனந் தாமரைத்தண்டினது வரலாற்றைக் கூறியதால் வெளியிலனேக துர்ஜனர்களால் வியாபிக்கப்பட்டு மகத்தில் ஸஹோதரர் புத்திரர் முதலியவர்களாற் கலகம் செய்யப்பட்டு மிருக்கிற வோர மானிடனது வரலாறு தோன்றுகின்றது. இம்மூன்றுதாரணங்களுக்குள் முதலாவ துதாரணத்தில், துதியானஸாதிருசிய வரலாறு தோன்றுகிறதென்று, மிரண்டாவ துதாரணத்தில் நிந்தையான ஸாதிருசிய வரலாறு தோன்றுகிறதென்றும், மூன்று முதாரணத்திற் றனிகுணமான ஸாதிருசிய வரலாறு தோன்றுகிறதென்றும் பிரிவு காண்க.

செய்யுள்.

அழுக்காறு மருவிச்சத் துருவினகத் தேபகைமை
யொழுக்காநின் றெவரொளிதா நினைக்கின்று ரவருலர்ந்த
குழுக்கானற் சருகினிடைக் கொழுங்கனலை யேகொளுத்தி
முழுககாற்று வந்தடிக்க முன்சயனிக் கின்றுரே.

இது பொதுவாகிய விவகாரத்தாற் சிறப்பாகிய வரலாறு தோன்றுவதற் குதாரணம். இங்ஙன முன்னமே பொருமையோடு கூடியிருக்குஞ் சிசுபாலனிடத்து ருக்மணியை அபகரித்தல் முதலியவற்றால் விரோதத்தை விர்த்தி செய்திருக்குங் கண்ண னவனை யெளிதாகநினைப்பது உசிதமல்ல வென்று வர்ணிக்க வேண்டியதிருக்க வவ்வாறன்றிச் சத்துருக்களிடம் விரோதத்தை விர்த்திசெய்து எளிதாக நினைப்பவர்களென்ற பொதுவிவகாரம் வருணிக்கப்பட்டிருக்கின்றது.

செய்யுள்.

ஆற்று பலவித நேயமென் னுடகத்
தேற்ற மாற்றுரைக் குப்புற மேயெனா
சாற்று சோதனை செயுனை கலொன்று
தோற்ற மேவி யிருந்தது தோன்றலே.

இதுவுமது. இங்ஙன மொருவனைப் பார்த்து நீ யெனது முன்னிலையி லநுகூலத்தைச் செய்வது போற் புறத்திலு மநுகூலஞ் செய்வாயாகில் நீயே யெனக்கு மேன்மையான சிநேகனென்ற சிறப்பைக் கூறவேண்டியதற்கு நேயமென்னுஞ் சுவர்ணத்தை மாற்றுக்காணப் புறமாகிய உரைகல்லிருக்கின்ற தென்ற பொதுவிவகாரம் கூறப்பட்டிருக்கின்றது.

செய்யுள்.

மடியில் மான்கொண் டிதியம் மிருகத்தாற்
கடிக ளங்கமுற் றுன்மிரு கங்களை
அடிக ளால்வெலுங் கேசரி யானது
படிமி ருகப தியென் றுரைக்கவே.

இது சிறப்பாற் பொதுவிவகாரந் தோன்றுவதற் குதாரணம். இங்ஙனங் கண்ணனிடத்திற் பலராமன் சொல்லிய வசனத்தில் மெல்லிய தொழில் மேன்மைபெறுது கொ

டுமைத் தொழிலே மேன்மை பெறுமென்ற பொதுவான விவகாரம் அவருணியமும் சிறப்புமாக விருக்கிற சந்திர விவகாரத்தாலுஞ் சிஙக விவகாரத்தாலு விளங்கிற்று. இவ் வாறே பெருங்கதை முதலிய காவியத்திற் பொதுவாற் சிறப்புத் தோன்றுமிடங்களி லிவ்வணியைக் காண்க.

செய்யுள்.

நிசமறையோ ரூற்றமயந் தியின்வதன
மியற்றுதற்கு நேடிச சாரா
மிசமதுதொட் டெடுத்திடப்பட் டதுபோல
நாப்பணிடை மிளிர் துவார ரம்
வசமுறுவ தாயுமதிற் ரேன்றுவெளி
யின்மிகுமை வாய்வ தாயும்
சசியதுமண் டலங்காணத் திகழும்வள
நிறைநிடதந் தழைக்க வந்தோய்.

இஃது காரணத்தினூற் காரியந் தோன்றுவதற் குதா ரணம். இங்ஙனந் தமயந்தியின் வதனத்தை யுண்டுபண் ணும்பொருட்டாய் அதற்குக் காரணமாகச் சந்திரனது மத் தியிலிருக்கும் ஸாரமான அம்சத்தி னபகரித்தலே வர்ணித் ததா லெல்லாப் பெண்களின் முகத்தைப் பார்க்கினுந் தமயந்தியின்முக மதிக ஸெளந்தரிய முள்ளதென்ற காரி யம் விளங்கிற்று.

செய்யுள்.

வருமாதந் தொறும்பேத முறுநி லாக்கள்
மதிக்கும் பரம பதங்கொண் டாடலுற்று
மருவிய சரீர மழிவுறுங் காலத்து
வாய்த்திடு மேலாம் பதவியதி லேயிச்சை
பெருகினவை யாகவுமே யுரிமை யாகிப்
பிறங்குமது வதனமதில் விடங்க மென்னும்
பரவுறுபுண் ணியக்குழுவை நிறுத்தி விட்டுப்
புரிதியின்பாற் செலுந்துவரைப் பதிவந் தோரே.

இதுவுமது. இங்ஙனஞ் சந்திரர்கள் தமது பேரழகாகிய புண்ணியத்தை வைத்தலெனுங் காரணத்தால் திருமாலுடைய முகம் அநேககோடி சந்திரருக் கொப்பான பேரழகைக் கொண்டிருக்கிற தென்ற வருணியமான காரியம் விளங்குகின்றது. சந்திரனொருவனாக விருந்தாலுமொவ்வொரு மாதத்திலுங் கலைகளினிறைவு குறைவுள்ளமைபற்றி யந்தந்தக்காலத்தில் வெவ்வேறா வுண்டாகிறானென்றாரோபித் திருக்கின்றது. ஆதலால் காலமநாதியாக விருப்பதைப்பற்றி யநேககோடி சந்திரனென்று கூறலாயிற்று. அச்சந்திரர்களுக்கு உம்பரமபதங் கொண்டால் என்ற சிலேடையாற் றிருமாலின் சரணத்தை ஸேவித்தலாரோபிக்கப்பட்டது. தேகம் நசிக்குங் காலையிற் புண்ணியத்தாற் பரமபதத்தைச் சேருவதும் அக்காலையிற் றனக்கிஷ்டமானவ ரிடத்துத் தனது புண்ணியக் கூட்டத்தை வைப்பதும் பின்பு சூரியமண்டலத்திற் செல்வதும் வேதத்திற் பிரசித்த மென்க. இவ்வாறே சந்திரர்களுக்கு மேனிக்குறைவு வரத்தக்க வமாவாசை காலத்திற் சூரியமண்டலத்திற் செல்வதிருப்பமையால் அதற்கு முன்ன மவர்கள் வனப்பென்னும் புண்ணியக் கூட்டத்தைத் தமக்கு இஷ்டமாக விருக்கின்ற பகவானது முகத்தில் வைத்ததாக வுத்பிரேக்ஷித்திருக்கிறது. மோக்ஷத்தை அடைகின்றவர்களுக்குப் பலவிஷ்டர்க ளிருப்பார்களாதலா லந்தந்த விஷ்டர்களிடத்து மவர்களுடைய புண்ணியங் கொஞ்சங் கொஞ்சமாக ஸம்பந்தப்படும். இங்ஙன மெல்லாச் சந்திரர்களுக்கும் பகவானுடைய முகம் ஒன்றையே யிஷ்டமாகக் கூறுவதால் மற்றுமுகங்களைப் பார்க்கினு மது மிக்கவனப்புள்ள தென்பது மநேககோடி சந்திரர்களுக் கொப்பான தென்பதும் நன்றாய் விளங்குகின்றது. ஆனால் வேதத்திற் சூரியமண்டலத்தைக் கடந்தபின் பின்பு விரஜை யென்னும் நதியைக் கடப்பதற்கு முன் மோக்ஷத்தை யடைகின்றவர்களின் புண்ணிய பாவங்கள் தத்தஞ் சிநேகர்

களையுஞ் சத்துருக்களையுஞ் சேருகின்றன வென்று சொல்லி யிருக்கின்றது. அவ்வாறிருந்தாலும் பாவங்கள் முதலியவைகளின் விலக்கமின்றிச் சூரியஜோதியிற் செல்வதரிதென்பதைப் பற்றி யந்தவேதத்துக்குச் சூரியமண்டலத்திற் பிரவேசிப்பதற்கு முன்னமே பாவமுதலிய வைகள் விலகிவிடுமென்ற அர்த்தங் கொள்ள வேண்டுமென்பதைத் தீர்மானித் திங்ஙனம் வனப் பென்னும் புண்ணியக் குழுவை யிஷ்டமான பகவானது முகத்தில் வைத்து விட்டுச்சூரியமண்டலத்திற் செல்லுகிறார்களென் றுரைக்கலாயிற்று.

செய்யுள்.

நாதனே நினது திருவடிக் காட்டு
நறும்பெரும் புனலொடு மந்தப்
பாதமா ருகிர்க்காந் தியின்சிறு வணுக்கள்
பரவையிற் சென்றுபின் கடைந்த
போதவை யனைத்து மொருங்குறத் திரண்டு
பொழிகதிர் முழுமதி யுருவம்
ஆதலுற் றெழுந்த வென்றுமா தவரு
மலஙகரித் தினிதுபோற் றுவரே.

இஃது காரியத்தின் வருணனையால வருணியமாகிய காரணந் தோன்றுவதற்குதாரணம். இங்ஙனம் பகவானது திருவடித்தாமரைகளில் ஸம்பந்தப்பட்டுப் பெருகிய நதியிற் செம்பஞ்சுக்குழம்பு போற்பற்றிச் சமுத்திரத்துச் சென்ற பகவானது நகக்காந்தியின் சிறுவணுக்கள் சமுத்திரத்தைக் கடையுங்காலையிற்றிரண்டு சந்திரனென்ற பெயரைக்கொண்டு விளங்குகின்றன. என்றமையாற் காரியமாகிய சந்திரனுடைய வுற்பத்திக்குக்காரணமாகிய பகவானது நகக்காந்தியின் மேன்மை விளங்குகின்றது.

செய்யுள்.

இந்த மாதுநடை யந்த மேதெரியி
லின்று முகருவ மேயனஞ்
சந்த மோரில்மௌ னங்கு லாவுவிர
தங்கெ டாதுசெயு மேகுயில்
கந்த மேல்மிருது கண்டு மாலதிக
லென்று மாமிகவு மோதலென்
அந்த மாமகளு மின்ற னுதப
மறிந்து காவியுடை சூழ்வளே.

இதுவுமது, இங்ஙனம் நாயகியினது நடை முதலிய வற்றின் மேன்மையான வழகை வருணிக்கவேண்டிய தற் கவ்வழகின் பார்வைக் காரணத்தினாலுண்டாகத்தகக அன்ன முதலியவைகளின் கருவம் நீங்குதலாகிய காரியங் கள் கூறப்பட்டன. முந்திய வுதாரணத்திற் பொருளின் காரியமாகவும் இங்ஙனம் அந்தப் பொருட்பார்வையின் காரியமாகவுமிருக்கின்றது.

செய்யுள்.

வாமிருக நெஞ்சிடைநாண் வாய்ந்திடுமோ கிறகவரி
மாமிருகம் வெற்பிறைக்கு மாரிமென்மை—யாமினிய
குந்தளத்தின் பந்திகண்டு கொண்டுதன்வான் மேல்விருப்பை
யுந்தளவே யூகக முறும்.

இவ்வுதாரணத்திலும் பார்வதியினது கூந்தலாகிய பொருட்பார்வையினாலுண்டாகின்ற கவரி மிருகந்தன் வால்மேல் விருப்பம் நீக்குமென்னுங்காரியம் விளங்குகின்றது. முந்திய வுதாரணத்தில் மூன்றாவது பாதத்திற் புகழக்கூடிய நாயகியின் அங்க மேன்மையைக் கண்டதினால் மாலதியிற் கடினத்தன்மை யென்ற காரியமுண்டாகவில்லை. அந்நாயகியைத் தொட்டநுபவிப்போருக்கே மாலதிக டினத்தன்மையுள்ளதென்ற நினைவுண்டாகின்றது. இவ்வா

று நாயகியின் றேகமிருதுத்தன்மையைக்கண்டதினாலுண் டாகும் மாலதிவன்மையுளதென்ற நினைவாகிய காரியத் தைக் கூறியதாலிது காரியத்தாற் காரணம் விளங்குகின்ற விவ்வணிக்குதாரணமாக வருவது கெடவில்லை. இவ்வித மே யவருணியத்தொபபுமைக் கூட்டத்தணிக்குதாரணித் த "வல்லிநின்மெ" யென்ற செய்யுளிலும் நாயகி மெய்ம்மெ ன்மையை நோக்குதலுண்டாகு மல்லிகை முதலியவை வன் மையுள்ள வென்ற நினைவானகாரியம் விளங்குகின்றது. மு ன்னோரும் பொருள் காரியமாவருமிடம்போல் நினைவு கா ரியமாவருமிடத்திலு மிவ்வணியே யென்றார். உண்மை யாகப்பார்க்குமளவி லிவ்வணியில் வருணியாவருணியங் களுக் கைந்து பிரிவுள்ள ஸம்பந்தமன்றியும் வேறு ஸம்பந் தமுங் காணப்படுவதா லைந்துவித மென வரையறுத்தது கூடாமையாயிருக்கின்றது.

செய்யுள்.

திரிவிததா பத்தினுககு மருந்தாய்ச
சுவாசமெனுஞ் சிறுகா லாற்ப
தருமகனுன் குறுநகையி னின்றெருநாற்
சூழலிற்போய்ச் சார்ந்து கூடி
மருவியசெண் டவைபோலிம் மதிககரங்க
ளுலகமிசை வயங்கு கின்ற
பெருவிரத விசயனுக்கங் கொருவிரத
நடத்தியருள் பெய்யுங் கோவே.

இங்ஙனம் அவருணியங்களாகிய சந்திரகிரணங்களைப் பகவானது குறுநகையர்கிற தானியங்களின் செண்டுகளாக வருணித்தமையாற் பகவானது குறுநகை யந்தக் கிரண ங்களினு மிக்க மேன்மைதங்கியதென்ற விசேஷம் விளங் கிற்று. இங்ஙனங் காரியகாரண பாவமுதலிய ஸம்பந்த மின்றிக் கூடவே யுற்பத்தியாகிறதான ஸம்பந்தத்தையே கொள்ளவேண்டியதாக விருக்கின்றது. இவ்வாறே யுவமா

னுவமேயமாக விருந்தாலுங் கவியினுற் காரியகாரண பாவமாகக்கூறப்பட்டு விளங்கும் "இந்தமாதுநடை" "வாமிருகநெஞ்சிடை" யென்னுங் கவிகளிலு மிவ்வணி யுபமானுவமேயபாவ ஸம்பந்தமுள்ளதாக விளங்குகிறது.

செய்யுள்.

வெந்தகா ளிந்தியோ யென்னகாண் சொற்றிடுவிர்
மகிமைபெறு கும்பரே நான்
வாரிதிய னென்பகைவர் தம்பெயரை யெவ்விதம்
வருத்தனைகொல் நருமதையு நான்
முந்தெனது பகையாளி யின்பெயரை யெவ்வித
மொழிந்திடவு நீர்குறித் திர
மொருமத் தன்மையா மென்னினி யிவ்வித
முழுகரு நிறத்தையோ சம்
பந்தமுறு தற்கமை நிமிந்தமெது மாளவ
பருந்தேய மாதரார் தம்
பரிவுற வணிந்தவரு சலம்விரவு நயமாகி
பறியிட லாயி விதமி
ருந்தகரு நிறமுமரு வினனவர்த மக்கெனே று
குறைவந்து தோன்றினது போ
குந்தள மெனுந்தேய மதுபரந் திடுவேந்து
கோபமனு மேவினே மோ.

இங்ஙன மாளவதேசத்துப பெண்களுடைய வயிறையின் காரணத்தை யென்னே குறைவந்ததென்று கேட்க, அவர்களுடைய ஆடவர்களின் மரணத்தைக் கூறாது குந்தளதேசத்தரசன் கோபமனு மேவினனென்ற காரணத்தைக் கூறியிருப்பமையாற் காரணத்தாற் காரியம் விளங்குமிவ்வணியும் மாளவதேசத்தரசனைக் குறித்துக் குந்தளதேசத்தரசன் படை யெடுத்தானே வெற்றியடைந்தானோ வெனக்கேட்க அடைந்தானென்பதைக் கூறாது அக்காரணத்திற் சமுத்திரத்திற்கும் காளிந்திக்குமுள நேர்ந்த வி

ஞவிடையான காரியங்கூறப்பட்டிருப்பதாற் காரியத்தாற் காரணம் விளங்கும் இவ்வணியு மிச்செய்யுளிலிருக்கி ன்றது. இவற்றுள் முந்தியதில் விஞச்சொல்லால் விளங்கு கிறதென்றும் பிந்தியதில் விஞத்தொகையால் விளங்கு கிறதென்றுங் கொள்க.

---

## உஅ-வது புனைவுள்ளி விளைவணி.

(பிரஸ்துதாங்குராலங்காரம்.)

செய்யுள்.

சொல்லோர் வருணியத் தாலோர் வருணியந் தோன்றியிடில்
எல்லோருஞ் சொல்புனை வுள்ளி விளைவுவண் டேமலிகை
மல்லோ டிருக்கமுட் சூழ்தாழையிலென் வருமெனலே
வல்லோ ருதாரண மென்பார் குமாரெட்ட மாமன்னனே.

எங்ஙனம் வருணியமாகிய வோர் வரலாற்றை வரு ணிக்குங் காலையில் மற்றொரு வருணியமாகிய இஷ்டமான வரலாறு விளங்குகிறதோ வங்ஙனம் புனைவுள்ளி விளை வணியாம். இதை வடநூலார் பிரஸ்துதாங்குராலங் காரமென்பர். இதற்கு "வண்டேமலிகை" யென்பதுமுத லுதாரணம். இங்ஙனம் பிரியநாயகனேடு பூங்காவில் விளை யாடுகின்ற வோர் பெண்வண்டைநோக்கி யிவ்வண்ணங் கூறுகிறுளென்று சொல்லால் விளங்கிய வண்டின் வியவ ஹாரம் வருணியமாயிற்று. இதனுற் சுகமாகக் கலவி செய்ய வுசிதமான நாயகி இருக்க வக்காலையிற் சோர நாயகியிடங் கலவி செய்ய வெத்தனிக்கும் வருணியமான நாயகனது நிந்தையான வியவஹாரமும் விளங்குகின்றது. ஆனுலிங்ஙனமறிவில்லாமலிருக்கும் வண்டை முன்னிலை யாகச்செய்வது உசிதமல்லாமையால் வருணியமாகிய நாயகனது வியவஹாரந்தோன்றும்பொருட்டு அவ்வருணிய மான இவ்வண்டின் வியவஹாரங் கூறப்பட்டிருக்கிறதென

வைத் திதுவும் புனைவில்லிப் புகழ்ச்சியணியே யென்று லோ அவ்வாறன்றும் பேதமையா லறிவில்லாமலிருக்கும் பொருள்களையு முன்னிலையாக்கி யுரைப்ப துலகவியல்பா யிருக்கின்றது. அஃது வருமாறு.

செய்யுள்.

அம்மநீயார் யானருந்தே வாற்கே டுண்டு
விம்முசா கோடகங்காண் மிக்கதொரு வெறுப்பால்
இம்மொழிவிண் டாய்தெளிந்தே னெனிப் படியுரைத்தாய்
வெம்மையுறு மிக்கணிடப் பாலோரால் மேவுமதைச்
செம்மைவழிச் செல்வரெல்லாச் சீராலு மேயடுப்பார்
சும்மையத ரிடையிருந்துந் தோற்றெனிழல் வந்தவர்கட்
கம்மையுத வுஞ்செயலின் றால்.

இங்ஙனம் சரத்திற்குமசரத்திற்கும் வினாவிடையிரு ப்பதுபோலறிவுள்ள பொருளுககு மறிவில்லாமலிருககும் பொருளுக்கும் வினாவிடையிருப்பதில் யாதொருகுறைவு மில்லை யென்க.

செய்யுள்.

தும்பியே நீதோயத் தோலாத பூங்கொடியிற்
பம்பியசஞ் சலமனத்தைச் செலுத்தியுவப் பாயிளமை
யும்பொருந்திப் பூவாமை யுறுநவமா லதியரும்பில்
வம்புறுவீ ணுகவுமேன் விருப்பமதை வைக்கின்றாய்.

இங்ஙன முத்தியானத்திற் சஞ்சரிக்கின்ற தும்பியி னது நிந்தை தும்பியே யென்ற முன்னிலையால் வருணிய மென்றறியலாயிற்று. இதுவுங்கலவிக்குசிதமான பெண்க ளிருக்குங்காலையிற் பேதையாகிய கன்னிகையைக் கலவி செய்ய வருத்தப்படுத்துகின்ற வொருகாமுகன் கேட்குங் காலையில் நாயகிசொல்லும் வசனமானதா லக்காமுகனது நிந்தையும் வருணியமாகவே விளங்குகிறது.

செய்யுள்.

ஓதிமத்தின் றுண்டமதாற் கிழிகொளிரு
மரையருமை யுங்கொண் டேந்தி
யேதிசழ்வுற் றிருக்குமிபபங் கயவாவி
யாண்குயிலுற றினிதா யுண்ட
பேதகவல லரிவையுறு மாங்கொம்பென்
றிருளையர்க்குச் செப்பக் கேட்ட
மாதுகலை யால்முலையுங் கரமதனாற்
றிருவாயும் மறைத்திட் டாளே.

இங்ஙன மிப்பங்கயவாவி யென்று சுட்டிச் சொல்வதாற் பங்கயவாவியின் வரலாறு வருணியமாகத் தோன்றுகிறது. மற்றொரு வருணியமாகிய நாயகியின் வரலாறுங் கவி வசனத்தினாலே கூறப்பட்டது. புனைவில்லிப் புகழ்ச்சியணியிற் சொல்லாற் கூறியிருக்கும் பொருள் அவருணியமாக விருப்பதா லஃது வருணிக்க வேண்டிய தாற்பரியத்தி னறிவிப்பின்றி முடியாதாகையா லதின் றோற்றங் குறிப்பாகாதென்றும் அலங்கார மென்றும் அங்கீகரித்தாலு மிங்ஙனஞ் சொல்லாற் கூறியிருக்கும் பொருள் வருணியமா யிருப்பதால் வேறொரு பொருளி னறிவிப்பின்றியே அது முடிந்துவிடுவதா லவ்விவகாரத்தின் சாதுரியத்தால் மற்றொரு வருணிய வியவஹாரந் தோன்றுகின்ற முந்தியவுதாரண மிரண்டினும் குறிப்பேயன்றி யலங்காரமில்லை யென்றுரைத்தார் லோசனகாரர். இதினுண்மை யாராய்ந்து இது அலங்காரமே யல்லது குறிப்பல்லவென்று சித்திர மீமாம்ஸையில் தீர்மானிக்கப் பட்டிருக்கின்றது. மூன்றாவதுதாரணத்தி லிவ்வணி யென்பதில் யாதொரு ஸந்தேகமுமில்லை. இவ்வாறே தொனிகிரந்தத்தென்றவரும் லக்ஷணங் கூறினார். அஃதாவது.

செய்யுள்.

சொற்பொரு ளின்பலத் தால்வரு விக்கத் துலங்குகுறி
பிற்கொள் பொருள்கவிச் சொல்லாலே வண்வெளி பெற்றிடவே
உற்பவ மாகி வருமோ வவனு முறைமையிவணி
முற்படு மன்றிக் குறிப்பி லுருதிதை முன்னுகவே.

இவ்வுதாரணங்கள் ஸாதிரிசிய நிபந்தனையினாற் கி டைத்தவைகள் வேறே ஸம்பந்தத்தி னிபந்தனையுள்ள விரிந் தும் தொகுகியு மிருக்கும் பொருள்களிரண்டும் வருணியங் களாகவே யிருப்பதற் குதாரணம் வருமாறு.

செய்யுள்.

நேத்திரங்கா ணல்லொரிரா நேர்ந்ததுதப் பாதுவிழித்
தாத்திரங்கொண் டேயிருப்பி ராங்குமரு—காத்துலங்க
வுங்களுக்கொப் பாகி யுறுமொருசி னேகனுமே
அங்குரங்கொள் வானவசி யம்.

இங்ஙனஞ் சிவஸாரூப்பியம்போலவே அநினேகதே சமாக இருக்கும் நெற்றிக கண்ணும் சிவராத்திரி மகிமை யாற் கிடைக்கத்தக்க தாதலால் வருணியமா யிருககிறது. அதனால் சிவனது ஸாரூப்பியமானவருணிய மறியப்படுகி றது. இங்ஙனம் ஏகதேசி யேகதேச பாவத்தா லோர் வரு ணியத்தைக கூறியவுடன் மற்றொரு வருணியம் விளங்கு கிற துணாக.

செய்யுள்.

பிரபலகுந் தளபார விருட்குழலாற
சிறைபுரியப் பெருமிளஞ்செம்
பருதியதின் கிரணமெனப் பிறங்குசிந்தூ
ரத்திலகம் பதிந்துமின்வத்
திரவனப்பின் பெருக்கதனுக் கியற்றுமறு
காலெனவுந் தேசுற்றோங்கி
மருவுறுமு ரோமவகிர் மார்ககமெனைக
காக்குகவெம் மையினுந்தானே.

இங்ஙனம், புகழத்தக்க வுரோமவகிர் மார்க்கத்தை முகத்திலிருக்கும் வனப்பின் பெருக்குக்கு மறுகாலாக வுதப்ரேக்ஷித் திருப்பமையாற் பரிபூரணதடாகத்தில் மறு கால் செல்கின்றதெனி லவ்விடத்திற் றண்ணீரி னடங் காமை தோன்றுவதுபோல் முகத்திலடங்காத வதிகஸௌ ந்தரியத்தின் சிறப்புத் தோன்றுகிறது. அதுவும் வருணிய மேயல்ல தவருணியமல்ல வென்க.

செய்யுள்.

உறுபபுறு வனசத தணடணி வணடி
றுறுகுவைக் கதிரன நாசி
இறுத்தமுத் தெழுசு வாசமுற் றரிநீ
லத்திய லிசைந்தது தனமேற்
பொருத்தபைம் பளித மோர்கணந் திப்பொ
லிவணிகி னகரத் திடுநீர்
நிறுத்துலே யதிற்கா யிரும்பின்வீழ் புனலே
நேரவற் றினவிவட் கரசே.

இங்ஙனம் நாயகியின் பொறுக்கத்தகாத விரகதாபத்தை வெளிப்படுத்தும் பொருட்டுத் தாமரைத்தண்டு கறுப்படைவது முதலிய விரகதாப காரியங்களையும் வருணியங்களாகவே கூறியிருக்கின்றது. இதனல் வருணிய மான வதிகவிரகதாபந் தொகையாக விளங்குகிறது. எங் ஙனம் காரியத்தினு லறியப்படும் காரணத்தின் விளக்கம் செய்யுளிற் கூறப்பட்டிருக்கிறதோ வங்ஙன மநுமானமே யல்லது இவ்வணியன்றும். அது வருமாறு.

செய்யுள்.

கனத்திடு தனமு நிதம்பமு மவனே
கதுவலால் வாடியு மருங்கு
மனத்தினுஞ் சிறிதா யிருத்தலாற் பொருந்தா
மையுமுற வவண்பசு மையுமாய்

வனத்தடங் கரத்தை மாற்றிவைத் திடலால்
மாறுபா டுறுமரை யிலையின்
இனத்தமை விரிப்பு நாயகிவிரக
தாபமீ தெனவியம் பிடுமே.

இங்ஙனந் தாமரையிலையினு லுண்டுபண்ணப்பட்ட சயனத்தின் வாடுதலாகிய காரியத்திஞல் விளங்கும் நாயகியின் விரகதாபரூபகாரணம் நாயகி விரகதாபமீதென வியம்பிடுமே யென்று கவியில் வெளிப்பட வுரைத்திருக்கின்றது.

---

## உகூ-வது பிறிதினவிற்சியணி.

(பரியாயோகதாலங்காரம்)

செய்யுள்.

கருது பொருளுக் குறித்தாம் விதத்தின்றிக காட்டல்மற்றை
ஒருவிதத் தென்னிற் பிறிதி னவிற்சி யிராகுவினோர்
அரிவை முலைவறி தாப்புரிந் தார்க்கன்பு செய்வமென
வருவ துதாரண மெட்டம பாண்டிய மாமன்னனே. ()

எங்ஙனம் வருணிக்கவேண்டும் பொருள் அதற்குரித்தான சொல்லாற் கூறப்படாது மனமகிழ்விக்கும்படி மற்றொரு விதத்தாற் கூறப்படுகிறதோ வங்ஙனம் பிறிதினவிற்சியணி. இதை வடநூலார் பரியாயோக் தாலங்காரமென்பர். இதற்கு இராகு வென்பது முதலுதாரணம் இங்ஙனம் மகாவிஷ்ணுவை ஸ்வரூபமாகத் தெரியக்கூடிய சொல்லாற் கூறும விராகுவினோரரிவை முலையைப் பயனில்லாமற் செய்தவரென்று வேறுவிதமான ரூபத்தாற் கொள்ள வருணித்திருக்கின்றது.

செய்யுள்.

எவர்கா லுலகத் தினைப்பார்க்கு மோவன்
னவர்யா ரதுபதமின் னம்பார்க்—குவதிலையோ

அந்தவிரு வோரு மளவிடுவ ரல்லருன்பால்
வந்தகல்வி யைக்குருதே வா.

இங்ஙனங் கௌதம முனிவரையும் பதஞ்சலி முனிவரையும் வெளிப்படையான வசசொற்களாற் கூறாது வேறுவிதத்தாற் கூறியிருக்கின்றது.

செய்யுள்.

மிருது வாலுயர் வாகைவீச செருக்கைவிட் டிந்த
இருப தங்களை யிககடும் பாரிலெத் தூரம்
பெருக வைப்பதற் குவந்தது தயவெனுப் பிறந்து
வருநின் னுள்ளமா வாவிது துயருனை வரனே.

இங்ஙன மெவ்வளவு தூரத்திற்போக விரும்புகிறாயென்பதை யவ்வாறு கூறாமல் வேறுவிதமாகக் கூறியிருக்கின்றது.

செய்யுள்

ஏவருக்கு வியாசர்முன்னோர் பரிக்கார
ரோவைதல மென்ற லோகம்
மாவணிப்பெட டகமோவான் பூங்காவோ
வரிமுதலெண் வீரர்க ளாடைக்
காவலரோ சித்தசன்சந் தனமரமோ
பரவையொரு கணைககூ டோவத்
தேவசக்ர வர்த்தியெனுங் கடவுளுக்குத்
திடவணக்கஞ் செய்கு வேனே.

இங்ஙனம் சிவபெருமானுக்கு வேதங்கள் பரிகள் ஆபரணங்க ளுரகங்களென்பன முதலியவைகளைத் தத்தம் பதத்தால் வெளியிட்டுரையாது வியாஸர் முதலியவர்கள் பரிக்காரர்க ளென்பது முதலியவைகளால் வெளிப்படுத்தி யிருக்கின்றது. இங்ஙனம் அலங்கார ஸர்வஸ்வகாரரு மிவ்விலக்கணப்படியே கருதத்தக்க பொருளை வேறு விதமாகக் கூறுவது இவ்வணி யென்றே யுரைத்தார்.

செய்யுள்.

சக்கரவே கத்தடியாந் தண்டனையா லேராகு
தக்கமனை யின்கலவிச சார்பெனுமுள்—ளக்களிப்பே
இன்றிவந னஞ்சுனைக்த லென்றுமிருக் கப்புரிந்தோா
நன்றுதினங் காக்க நமை.

என்று முன்னோர் சொல்லிய வுதாரணத்தி லிராகு மடந்தையின் கலவியிலுள்ள குறைவாகிற காரியத்தை வருணித்ததா லிராகுவின் சிரச்சேதத்தை யடைந்த தென்ற கருதத்கூடிய காரணம் அறியப்படுகின்றது என்றும் இதனாற் கருதப்பட்டதை வேறு விதமாகக்கூறுவ திவ்வணியென்ற விலக்கணத்திற்குக் குறையென்றும் கருதப்பட்டதைக் காரியமுகமாகத் தெரிந்துகொள்வ திவ்வணியென்று இலக்கணத்தில் சேர்த்துரைக்க வேண்டுமென்றுங் கூறினரென்க. அன்றியும் லோசனகிருத் தென்பவரும்

செய்யுள்.

வேறு விதமா கிடவே விளம்புவது
தேறும் பிறிதினவிற் சி.

என்று முன்னுரைத்த விலக்கணம் போலவே யிலக்கணத்தையுரைத் துதாரணத்திற் சொல்லாற் கூறியிருக்குங் காரியத்தாற் காரணந் தொகையாக விளங்கும்படி காண்பித்திலக்கணத்தை வன்மையாக விலக்கியத்தி லாரோபித்தார். இவரிலக்கணத்தை வேறுவிதமாகவு மிலக்கியத்தை வேறுவிதமாகவுங்கூறி யிலக்கணத்தை யிலக்கியத்தி லாரோபிப்பதற்கு மிகுதியான சிரமத்தை யடைந்ததற்குக் காரணம் யாதோ? கருதத்தக்க பொருளை வேறு விதமாக அறியும்படிக்கு இருக்குமுதாரணங்கள் பலவிதங்களா யிருக்கின்றன. “சக்கரவேகத்தடியா” லென்ற முன்னோருரைத்த செய்யுளிலுங் காரிய காரணபாவத்தைக் கருதாமலே யிலக்கணத்தைச் சரியானபடி யாரோ

பிப்பதற்கு இடமாகக் கருதத்தக்க பொருள் வேறு விதமாகத் தோன்றுவதற்குக் குறைவில்லை. அதிவிராகுவரிவையின் கலவிககுறைவாகிற வருணியத்தா விராகுவின் சிரம் சேதத்தை யடைந்தது என்றவருணியம விளங்குகிறது என்ற விஷயத்திற் பிரஸ்துதாங்குராலங்காரமாக விருந்தாலு மிராகு வரிவையின் கலவிகருக் குறைவை யுண்டுபண்ணினவரென்ற வேறுவிதத்தால் ஸ்வரூபமாகப் பகவானறியப்படுகிற னென்றும் பிறிதினவிற்சியணிக்குங் குறைவில்லை.

செய்யுள்.

கருதிய தைக்கப டத்தான் முடித்திடக் காணிலதும்
பிரிதி னவிற்சிசெல் கின்றனன் மாங்கொம் பினைத்தெரிய
விருவிரு மிங்கிரு மென்ப துதாரண மென்னையுமோர்
பொருளென வேயருள் செய்யுங்கு மாரெட்ட பூபதியே.

தான் எண்ணிய காரியத்தை யோர் கபடத்தால் முடிப்பதும் அவ்வணியே. இதற்கு "செல்கின்றன" னென்பது முதலுதாரணம். இங்ஙனம் பாஙகி நாயகியை நாயகனோடு சேர்ப்பித்துத் தான் மாங்கொம்பைப்பார்க்கப்போவதாகக் கபடம் செய்தவ்விருவருங கலவிசெய்ய வேண்டுமென்னுந் தன திஷ்டத்தை முடித்தாள்.

செய்யுள்.

இராதா யடிமடிம றைத்திடுமென் கந்துகத்தை
நீதாவென் றோதியவ ணீவியினைத் தொட்டவிழ்க்குங்
கண்ணனமக் கேமகிழ்செய் க.

முந்திய வுதாரணத்தில் பிறருக்கு ஸௌக்கியமான இஷ்டமுடித்தலென்று மிங்ஙனங் கந்துகத்தைத் தேடுகிற கபடத்தால் நீவியைத் தொட்டவிழ்ப்பதினு லுண்டாகிய தன்னுடைய இஷ்டத்தை முடித்த லென்னும் பிரிவு காண்க.

## ௬௦-வது வஞ்சப்புகழ்ச்சியணி.

(வியாஜஸ்துதியலங்காரம்)

செய்யுள்.

நிந்தையி னூற்றுதி யுந்துதி யானிந்தை யும்பணிக்க
வந்திடில் வஞ்சப் புகழ்ச்சியிப் பாவரை வானதியே
யுந்துவை சொற்க மறிவனக் கேதென் னுதாரணந்தான்
முந்துறு நிந்தையிற் றோன்றுந் துதிக்கு மொழிந்தனரே.

இன்றூதி யேயிநி னுஞ்செய வேண்டலென் னைற்கு நன்று
நன்றேயெற் காசசென்று பெற்றனை பல்லி னகத்தின்வடு
என்றோ துதாரண நிந்தை துதியி லிருப்பதற்காம்
அன்றோர் கடலி லணைசெய் குமாரெட்ட னுமண்ணலே.

எங்ஙனம் நிந்தையாற் றுதியுந் துதியால் நிந்தையும் விளங்குகிறதோ அங்ஙனம் வஞ்சப்புகழ்ச்சியணி. இதை வடநூலார் வியாஜஸ்துதி யலங்காரமென்பர். இவற்றுள் "இப்பாவரை" யென்பது முதல் நிந்தையாற்றுதி தோன்றுவதற்கும் "இன்றூதியே யிதினு" மென்பது முதற்றுதியா னிந்தை தோன்றுவதற்கும் நிரலேயுதாரணங்கள். முந்திய வுதாரணத்திற் கங்கையே யுனக்கு அறிவேது என்ற நிந்தையால் புண்ணியஞ் செய்தவர்களைப் போற் பாவஞ் செய்தவர்களையும் சுவர்க்கத்திலிருக்கச் செய்கிறா யென்றதுதி விளங்குகிறது. இரண்டாவ துதாரணத்தில் தூதியை நோக்கி யென்னிமித்தம் பற்களாலும் நகங்களாலு முண்டாகிய வடுவைக்கொண்டாயினி யென்ன செய்யவேண்டும் என்று நாயகி சொல்லிய துதிவசனத்தாற் றூதியின் செய்கைக்கு விரோதமாக வந்நாயகனது புணர்ச்சியைச் செய்ய நீ போனவளே யல்லது எனக்குத் தூதாகப்போனவ ளல்லளென்று நிந்தை விளங்குகிறது.

செய்யுள்.

மன்னவனே போரின் வலத்தாற் கருவமுனக்
கென்னநீ யோர்குதிரை யேறினையேல்—நின்னைத்
தொழுத லுறச்சத் துருவா னவரும்
எழுவரிய மாவே றுவார்.

சிவன்மெய்யொரு பாதிதிரு மாலுமொரு
பாதியுமைத் தேவி கொள்ள
அவனுலகி லிலாமையினுற் கங்கைகட
லைச்சசிவிண் ணதனைச் சேட
னுவல்பிலத்தை யனைத்துமுணர் தன்மையெங்கு
மிறையெனமன் னுதலாந் தன்மை
தவமியற்று நின்னையிரந் திடுதன்மை
யென்னையடைந் தனபூ மானே.

இஙஙன முந்தியவுதாரணத்தில் "எழுவரியமா" வென்ற சிலேஷையாற் கிடைத்த நிந்தையா லரசன் குதிரையை யேறினவுடன் பகைவர்களிறந்து சுவர்க்கத்தை யடைவதற்காக அரியமாவிற் செல்கிறார்களென்ற துதி தோன்றுகிறது. இரண்டாவ துதாரணத்தி லரசனெல்லாந் தெரிந்தவன் புவனத்துக்கு நாயகனென்ற துதியா லிரப்போனது துன்பத்தையும் கல்விச்சிறப்பையு மறிந்தும் கிஞ்சித்தேனுங் கொடுத்துக் காக்கின்றானில்லையென்ற நிந்தை தோன்றுகிறது. இவ்வுதாரணங்களி லொரேவிஷயமான நிந்தையாலுந் துதியாலும் அவ்விஷயமான துதியும் நிந்தையும் தோன்றுகின்றது. வேறுவிஷயமான நிந்தையால் வேறுவிஷயமான துதி தோன்றுவது மிவ்வணியே.

செய்யுள்.

வானரநீ யாரிரகு ராமபதி
யரண்மனையில் மன்னிக்கூலி
யானதுபெற் றெழுமோலைக் காரன்முனிங்
குற்றிலங்கைக் கனல் கொளுத்திப்

போனகவி யநுமனெங்குற் ருனரக்கன்
சேயவனற் பொரக்கட் டுண்டு
மானமழிந் தானெனவா நரர்விலக்கி
யடிக்க வெங்கோ மருவினனே.

இங்ஙன மாருதியின் நிந்தையால் மற்றும் வானரர்களின் றுதி தோன்றுகின்றது துதியினல் நிந்தைதோன்றுவதற் குதாரணம்

செய்யுள்.

தனமுடையர் வதனமடிக் கடிபார்க்கி
லாய்தரும்பொய் தானுஞ் சொல்லாய்
அனவர்செருக் குரைகேட்கி லாய்விருப்பா
லவரிடம்போ யலேயாய் நல்ல
தெனவருபைம் புலுமுரிய போதருந்தித்
துயிலுறுகா லெல்லாந் தூங்கித்
தினமகிழ்கின் ருயிதற்கே யெத்தவமெவ்
விடத்திருந்து செய்தாய் மானே.

இங்ஙனம் மானின் றுதியா லரசனே ஸேவித்துக் கிலேசமடைந்த தன்னுடைய நிந்தை விளங்குகின்றது. இது புனேவில்லிப் புகழ்ச்சியின் ஓர் பிரிவென் றலங்கார ஸர்வஸ்வகாரருரைக்கின்றார். அவர்மதத்தில் ஸாதிருசியமாகவரும் புனேவில்லிப்புகழ்ச்சி முரணுன தர்மத்தாலும் வருமென்றறிக. அஃது வருமாறு.

செய்யுள்.

செங்கழுநீரப் பூவினிடைச் சேர்ந்துசுக மாககுளிர்ச்சி
பொங்குமெக்காற் றின்குவளை போற்கருமை—யங்கமுள
இராமனேயே தானு ரணியமதிற் சேர்ந்ததுவோ
ஆமதுவே மேன்மை யது.

இங்ஙனம் ஸ்ரீராகவனை ஸம்பந்தித்த காற்றே மேன்மை தங்கியதென்று அவருணியத்தைத் துதித்ததால் நான் மேன்மை தங்கியவனல்லவென்ற வருணியமான பொருள் விளங்குகின்றது. தண்டியாசிரியர் இவ்வாறிருப்பதே புனைவில்லிப்புகழ்ச்சியென்றுங் காரியகாரணமாயிருப்ப தவ்வணி யல்லவென்று முரைக்கின்றார்.

செய்யுள்.

பிரகர ணத்துக் குரிமையில் லாமையைப் பேசியிட
வருவது மேபுனை வில்லிப் புகழ்சசி வனத்தின்மற்றோர்
அருகணை யாது முயலாது புற்புன லார்ந்துயுமென்
றொருமன்ன னூற்றுய ருற்றோன் பிணையியல் போதினனே.

உண்மையினாராயுங்கா லிங்ஙனம் வஞ்சப்புகழ்ச்சியென்றுரைப்பதே யுசிதம். துதியினால் நிந்தை தோன்றுகிறதென்னுஞ் சிறப்புப் புனைவில்லிப்புகழ்ச்சியினு மிதிலிருக்கின்றது. இவ்வாறில்லாவிடிற் பிரசித்தமான வஞ்சப்புகழ்ச்சி யுதாரணங்களிலும் அவருணியங்களாகிய நிந்தை துதி யிவைகளால் வருணியங்களாகிய துதியும் நிந்தையு மறியப்படுகின்றனவென்று வஞ்சப்புகழ்ச்சி முழுமையும் புனைவில்லிப்புகழ்ச்சியே யாகும். இவ்விதமே யொன்றின் றுதியால் மற்றொன்றின்றுதி தோன்றுவதும் வஞ்சப்புகழ்ச்சியணியே.

செய்யுள்.

ஒண்டொடியே யிச்சுகக்குஞ் சுன்னதரம் போற்சிவப்புக்
கொண்டவிம்பத் தின்கனியைக் கொத்துமிதற்—கண்டமெந்த
வெற்பினிடை யெப்பெயரை மேவறத்தை யெத்தனைநாள்
அற்பொடிது செய்ததுசொல் லாய்.

இங்ஙனங் கிளிகுஞ்சின்றுதியால் நாயகியினதரத்தின்றுதி விளங்குகின்றது.

## ௬௧-வது வஞ்சப்பழிப்பணி.

(வியாஜநிந்தாலங்காரம்.)

செய்யுள்.

தனிநிந் தையானிந் தைபோல் வருவதுவஞ் சப்பழிப்பாம்
உனதோர் சிரமடடும் யாரமுன் னரிந்தனை யேயவனோ
யினமல வாவெள் ளுறவேண்டு நான்முக னேயெனச்சொல்
வனவே யிலக்கியந் தேரெட்ட மாநகர் மன்னவனே. ()

எங்ஙனம் ஓர் நிந்தையால் மற்றொரு நிந்தை விளங்குகின்றதோ அங்ஙனம் வஞ்சப்பழிப்பணி. இதை வடநூலார் வியாஜநிந்தாலங்கார மென்பர். இதற்கு "உனதோர்சிர" மென்பது முதல் உதாரணம். இங்ஙனஞ் சிவபெருமானது நிந்தையாற் றுக்கத்துக் கிருப்பிடமாகிய ஸம்ஸாரக் கடலில் விழச்செய்த நான்முகனது நிந்தை விளங்குகின்றது.

செய்யுள்.

காகமே கத்துகநீ கத்துமுன்மே லென்பலகுற்றங்
கோகிலமோ டென்னையுமே கூடமதுர—மாகியதோர்
மாவினிடைச் சேர்த்திடுநால் வத்திரத்தோன் றன்னையல
வாவிகழ வேண்டு வது.

ஒன்றின் றுதியால மற்றொன்றின் றுதி தோன்றுகின்ற ஐந்தாவது வஞ்சப்புகழ்ச்சி யணிக்கெதிரா யிருக்கின்ற திவ்வணி. இங்ஙனங் காக்கையையுங் கோகிலத்தையுந் தேமாமரத்திற் சோத்து வைத்த நான்முகனது நிந்தையால் வித்துவானையு மவித்துவானையும் ஸபையிற் சேர்த்துவைத்த வரசனது நிந்தை விளங்குகின்றது. ஆயின் ஒன்றின்றுதியால் மற்றொன்றின் றுதியும் ஒன்றி

னிந்தையால் மற்றொன்றி னிந்தையுந் தோன்றுமிடத்தில் வஞ்சப்புகழ்ச்சி வஞ்சப்பழிப்பணிகளாக வொப்புக்கொள்ளும் விஷயத்தில் ஸ்துதியாகவும் நிந்தையாகவு மிருக்கும் புனைவிலவிப் புகழ்ச்சியு மிவைகளுக்குள்ளே யடங்கிவிடுவதா லதையவ்வணி யென்று கூறவேண்டா மெனிலோ, அவருணிய வியவஹாரத்தால் ஸ்துதியாகவாவது நிந்தையாகவாவது இருக்கும் வருணியவியவஹாரந் தோன்றுகின்ற "உள்ளங்குழலும் றுறவெளியிற் கண்டகங்கள்" என்பது முதலிய உதாரணங்களிற் பயனையடைந்த ஸாதிருசிய நிபந்தனையான புனைவில்லிப் புகழ்ச்சியும் வஞ்சப்புகழ்ச்சியும் வஞ்சப்பழிப்பு மியங்கனம் வருவதிலுந் தடையில்லை. ஆனால் "காகமே கத்துக நீ" யென்னுஞ் செய்யுளில் நான்முகனது நிந்தையாலு மதற்கு மூலமாகிய காகத்தினிந்தையாலு மிகவறிவுள்ள வோரரசனது நிந்தையு மவனால் வித்துவானுக் கொப்பாக மரியாதை செய்யப்பட்ட மூடனது நிந்தையும் விளங்குகிறதென்று ஸாதிருசிய நிபந்தனையான புனைவில்லிப் புகழ்ச்சி யிருக்கின்றது. அவ்வாறிருந்தாலும் வஞ்சப் பழிப்புமூலமாக முதலாவது விளங்கும் புனைவில்லிப் புகழ்ச்சியை அங்ஙனம் நீக்கக்கூடாதுதான். வஞ்சப்பழிப்பு மூலமாகத் துலங்கும் வஞ்சப் பழிப்பாகிய புனைவிலவிப் புகழ்ச்சி யென்றே யொருவித மனமகிழ்ச்சியிருப்பதைப்பற்றி அவ்வாறே அங்கீகரிக்கவேண்டும். இவ்வாறே வஞ்சப்புகழ்ச்சி மூலமான வஞ்சப்புகழ்ச்சியா யிருக்கும் புனைவில்லிப் புகழ்ச்சியுங் காணப்படுகின்றது. அஃதெவ்வாறு வருமேல்

செய்யுள்.

சதுர்முகன் படைக்குங் காலமு மென்னுந்
தனச்செல வையுங்கரு தாது
முதிர்கவ லையுந்தா னடைந்தது மன்றி
மூள்பரி வுறுபல சனத்தின்

இதயமா குலமாஞ் சுரத்தினை யுறவு
மியற்றினு ளிந்தவே ழையுந்தற்
குதவுறி யவனில லாதுமே டடைந்தா
ளிவளையேன் படைத்தனன் வயனே.

இங்ஙன மவருணியமாகிய பெண்ணினுடைய படைப்பின் வருசனை நிந்தையாலு மப்பெண்ணினது வருசனை நிந்தையாலுந் தோற்றுகின்ற வவளது மேன்மையான அழகின் ஸ்துதியானது வருணிக்கத்தக்க கவிதையினுடைய படைப்பின் வருசனை நிந்தையாலும் அக்கவிதையின் வருசனை நிந்தையாலுந் தோன்றுகின்ற பதம் பொருள் இவைகளிலிருக்கு மதிக ரசனையை விளங்கச் செய்கிறது. இச்செய்யுளிற் சொல்லால் விளங்கும் பொருளுக்கதிகமான இனிமை இல்லை. எவ்வித லாபமுமில்லாம லிருப்பவன் இப்பெண்ணைக் குறித்திவ்விதம் பலவாறு கூறுவது சிங்கார ரஸத்திற்குக் குறைவு. அவனுக்கு இவ்விஷயங்களின் முயற்சியே யுண்டாக மாட்டாது. ஆசையுள்ளாவ னிவ்வாறு கூறினனென்றாலோ, அதிலும் பழுதே யென்பதும் தன்னை எந்த நாயகிருசு சரியான நாடகருக நினைப்பது இயல்பானதால தனக்குரியவளில்லாது கெட்டாளென்பது பொருத்தமல்ல. ஆதலால் அதில அவ்வித மிருந்தாலு மதனால் விளங்கும் வருணியமாகிய கவிதையின் விஷயமான தாற்பரியத்திற் கெதிர்ப்பேது மில்லையப்படிக் குறைவில்லை. ஆதலாலிச் செய்யுளை முன்னூலார் சொல்லால் விளங்கும் பொருளுக்குக் குறைவிருந்தாலு மதனால் விளங்கும் வருணிய விவகாரத்திற் குறைவில்லை யென்று புனைவில்லிப் பிரசம்ஸைக்கு விஷயமாகக் கூறினார்.

---

## ௬உ-வது எதிர்மறையணி.

(ஆக்ஷேபாலங்காரம்.)

செய்யுள்.

தானுரைத் திட்டதை யாய்ந்து மறுக்கி லதன்பெயரோ
யான தெதிர்மறை யம்புலி நின்மெ யறிவியன்றேற்
கானமின் னுள்வத் திரமுள தாமென் றிலகியங்காண்
மானவை வேற்கைச செகவீர ராமக் குமாரெட்டனே.

எங்ஙனம் தானுரைத்ததை யாராய்ந் தொப்பான வேறு பொருளிருப்பதைத் தெரிந்து முற்கூறிய பொருள் மறுக்கப்படுகிறதோ அங்ஙனம் எதிர்மறையணி. இதை வடநூலார் ஆக்ஷேபாலங்காரமென்பர். இதற்கு "அம்புலி" யென்பதுமுத லுதாரணம். இங்ஙனம் அம்புலியை நோக்கி யுனது மெய்யைக் காணச்செய் யென்றுரைத்துப் பின்பு அல்லாவிடிற் கானமின்னுள் வத்திரமிருகின்ற தெனகூறி முற்கூறிய பொருளை மறுத்திருக்கின்றது.

செய்யுள்

அவுணரைப் போற்கா வியப்பொருள் கரப்போ
ரமைவதாற் பாடலங் கடலுற
பவமுறு கர்நா மிர்தகாவி யத்தைக்
காப்பிரன் றேவவா வளவும்
எவரெடிக் கினுஞ்சம் மதமதாற் கவிஞாக்
கொருகுறை யிலேமணி களைவிண்
ணவர்பல கொளினு மிரத்தினா கரமே
நனிர்திரை வாரிநா வலரே.

இங்ஙனம் தான்கருதிய காவிய கர்ணமிர்தத்தைக் காக்கவேண்டுமெனக் கூறியதைச் சமுத்திரத்திலிரத்தினக்

குழுக்கள்போல் கற்பனைகள் அளவின்றி யிருப்பதைத் தெரிந்து இல்லாவிடிற் காவியப் பொருள்களைத் திருடு கின்றவர்கள் இதினின்றுங் கற்பனைகளை எடுத்துக்கொள் ளுக வென்று கூறி மறுத்திருக்கின்றது.

செய்யுள்.

மறுத்த லதுதன் னுளுண்டுமற் றோர்பொருள் வந்திடச்செய்
திறத்தது மவ்வணி நான்றூதி யன்றவ ளின்மெய்வெப்பம்
ஒறுத்திடு மூழிக் கனற்கொப்ப தென்ப துதாரணந்தேர்
பொறுத்தெவர் பாலுந் தயைசெய் குமாரெட்ட புண்ணியனே.

எங்ஙனம் மறுத்தலுண்மையன்றி யாரோபிக்கப் படுகிறதோ அங்ஙனம் ஆக்ஷேபாலங்கார மென்று அலங்கார ஸர்வஸ்வகாரர் முதலியோர் நினைக்கின்றனர். இதற்கு "நான்றூதியன்றவ" ளென்பது முதலுதார ணம். இங்ஙனம் தூதாகவந்தவளே தன்னைத் தூதியல்ல ளென்று மறுத்தல் பொருந்தாமையால் இம்மறுத்தல் ஆரோபமாகத் தள்ளுண்டு உங்களிருவரைச் சேர்க்கிறதற் காகப் பொய்பேசுகிறது முதலியவை யின்றி உண்மை பேசுகிறேனென்று விசேஷத்தைத் தோற்றுவித்து நீ யிப் போதே விரைவாகவந்து நாயகியைப் பிழைக்கச்செய்ய வேண்டுமென வேறுபொருளை விளக்குகிறது.

செய்யுள்.

நன்றிசைய மன்னவனே நாஙகளொற்ற ரேயல்லம்
என்றுஞ் செகருடும்பி யென்றிருக்கு—முன்றனககே
யோாசத் துருவுமில்லை யோா.

இங்ஙனம் ஒற்றர் நாங்களொற்ற ரல்லோம் என்ப துசிதமன்று. அவ்விதங் கூறுவதால் ஸந்திகாலத்துக் குரித்தானபடி வஞ்சனையாகச் சொல்வதை நிவிருத்தி செய்து உண்மை சொலவதை விளககுவதிறைல் உலகத்

தைக் காக்கின்ற எமக்கெல்லாரு மூழியக்காரர்களா யிருக்கிறார்களே யல்லது ஒருவரேனுஞ் சத்துருவாகவில்லை என்ற தாற்பரியம் விளங்கச் செய்யலாயிற்று.

செய்யுள்.

உடன்பட லேவெளி யாய்விலக் கேமறை வாயுலவும்
இடமு மணியென் றாயக னேசெல்லை யேற்செலங்கே
திடமொடு யான்பிறப் பேனென் றிலக்கியஞ் செப்புவர்காண்
தடமதி லண்ட முகட்டினைத் தாங்கிள சைத்துறையே.

மறுப்பு மறைந்தும் உடன்பாடு வெளிப்பட்டு மிருப்பதும் அவ்வணி. இதற்கு "நாயகனே செல்லையே" லென்பதுமுத லுதாரணம். இங்ஙனஞ் செலவா மென்னு முடன்பாடு வெளிப்பட்டுஞ் செல்லவேண்டா மென்ற மறுத்தல், நீ செல்லுமிடத்தில் யான்பிறப்பே னென்ற சொல்லில அடங்கிய தன் மரணம் தோற்றுதலான் மறைந்தும் இருக்கிறது.

செய்யுள்.

தலைவா நின் செலவையானந் தந்நால மேமகே
யிலைநாம முண்டுபறு வைநாயா—செலவேண்டு
மேற்செலயிர்ப் பும்போது மே.

இங்ஙனம் உனது செல்கை எனக்கு அதிககாலந் தாமுண்டுபண்ணு தென்றமையால் நீ செல்வாயாகில் நான் மாண்டுவிடுவேன். நீ செல்லேலென்ற மறுத்தல் மறைந்திருக்கின்றது.

---

## ருரு-வது முரண்மேல் விளைவணி.

(விரோதாபாசாலங்காரம்)

செய்யுள்.

மேலா கமட்டும் விரோத முறன்முரண் மேல்விளைவு
வேலாம் விழியண் முலைமுத்த மேவில வேனுமுத்தரு
சாலாக மேவின னென்ன வுதாரணந் தண்டலையின்
பாலாரும் தேனதி போற்சூழு மெட்ட பதிமன்னனே.

எங்ஙனம் விரோதமுன்பு விளங்கிப் பின்பு உண்மைப்பொருள் விளங்குகின்றதோ அங்ஙனம் முரண்மேல விளைவணி. இதை வடநூலார் விரோதாபாசாலங்கார மென்ப. இதற்கு "வேலாம விழி" யென்பது முதலுதாரணம். இங்ஙனம் முலைமுத்த மேவாமலிருந்தாலும் முத்த மேவியிருக்கிறதென்று முன்புவிரோதமுஞ் சிலேடையாக நாயகனது கொஞ்சுதல மேவியிருக்கின்றதென்ற உண்மையும விளங்குகின்றது.

செய்யுள்.

என்னிமித் தத்தா லின்னள வேந்தன்
மின்னு மமித்திர வெற்றிய னுகியும்
பற்றுரு பிரதா பத்தினன் மித்திர
வெற்றிய னுக மேவுஞ் சார
விழியின னுகியும் விசார விழியின்
அழிவில னுகவு மமாந்திருந் தானே
அந்நிமித் தத்தா லவனிக லோரும்
பன்னுறு பேதம் பரியவிட் டநுபோல
விரவும் பலவாம் விரோத
தருமமும் விட்டவோ தங்குமோ தத்தையோ.

இங்ஙனம் மித்திரனை வெல்லாதவனாக விருந்தும் மித்திரனை வெல்லுகிறவனாக விருக்கின்றான் என்ற விரோதமுஞ் சாரனென்ற ஒற்றனை விழியாகக்கொண்டும் சாரனென்ற ஒற்றனை விழியாகக்கொள்ளாமலும் இருக்கிறானென்ற விரோத முன்பாகவும், பின்பு சூரியனை வெல்லுகிறான் விசாரமென்ற விசாரணையை விழியாகக்கொண்டிருக்கிறானென்ற உண்மைப்பொருள் சிலேஷையாகவும் விளங்குகின்றது. முந்திய வுதாரணத்திலும் இதில் விரோதத்தை ஸமாதானஞ்செய்யும் உத்பிரேக்ஷையலங்கார மேலாக விளங்குகிறதென்ற பிரிவுகாண்க.

---

## ௩௪-வது பிறிதாராய்ச்சியணி.

(விபாவனாலங்காரம்)

செய்யுள்.

நேராது காரணங் காரியந் தோன்றி னிகழ்த்துபிறி
தாராய்ச் சியணி யலத்தக மின்றி யமைந்திடினுஞ்
சீரா ரிவளிரு பாதஞ் செவந்தவென் றேயுரைத்தல்
பாரா யுதாரண நல்லெட் டயபுர பாண்டியனே.

காரணமின்றிக் காரியமுண்டாவது பிறிதாராய்ச்சியணி. இதை வடநூலார் விபாவனாலங்கார மென்பர் இதற்கு "அலத்தகமின்றி" யென்பதுமுத லுதாரணம். இங்ஙனம் தாளிற் செவப்புக்குக் காரணமாகிய செம்பஞ்சுக குழம்பு இடுதலில்லாமலிருந்தும் அக்காரியமுண்டாயிருககின்றது.

செய்யுள்.

உண்ணா திருந்து மதத்தவன்ன முடைய
தாயெங் கணுந்துடைப்பே
யண்ணா திருந்துங் களங்கமில்விண்
ணதனை யுடைய தாய்த்தெளிவு

பண்ணு திருந்துந் தெளிவமையும் பனிநீ
 ருடைய தாய்விளக்க
நண்ணு விருநகு மூலகமெல்லா
 நயச்சுந் தரமா யினமாதோ.

இங்ஙனம் அன்னத்தின் மதத்ததுகுகும், ஆகாசத்தின் அமலத்துக்கும், தண்ணீரின் தெளிவிற்கும் கழுவு ணல், துடைத்தல், தெளிவித்தலென்ற காரணங்களில் லாமலிருந்தும் அககாரியங்க ளுண்டாயிருக்கின்றன.

செய்யுள்.

வனிதை யோதி முடித்ததி னுன்மண
மினிது லாநகத் தேந்தல்கை யான்மலர்
தனையெ டுத்திருந் தாலுங்கொ டிகளின்
முனைய டுத்த சிலீமுக முள்ளவே.

இங்ஙனம் வண்டினங்களின் இருப்புக்குக் காரண மாகிய மலர்களில்லாமலிருந்தும் மடந்தையின் கோதை யை முடித்ததினால் வாசம்பொருந்திய அரசனது நகங்க ளுடைய ஸம்பந்தமாகிய ஹேதுவால் அக்காரியமுண்டா கின்றது.

செய்யுள்.

ஏதுவின் றங்குணந் தாங்குறைந் துங்கா ரியமெழுந
லோதிரண் டாமவ் வணிமதன் கூர்மை யொடுவளமை
யாதுமி லாக்கணை யாலே யுலக மடங்கியிட
மோதுவ னென்ப திலக்கிய மெட்டம முன்னவனே.

ஏதுக்களில் தத்தம் குணங்கள் குறைந்திருந்தும் காரி யமுண்டாவது இரண்டாம் பிறிதாராய்ச்சியணி. இதற்கு "தன் கூர்மை" யென்பதுமுத லுதாரணம். வெற்றிபெறுவ தற்குக் காரணமாகிய பகழிகளில் அவற்றின் முக்கிய

குணங்களாகிய வன்மையுங் கூர்மையும் இல்லாமலிருந் தும் உலகவெற்றி யெனுங்காரிய முண்டாகின்றது.

செய்யுள்.

தென்றலினால் வாளுலவு தேமாவின் சண்பகத்தின்
மன்றமுறு தாது வழிப்போக்க—நின்றிருக்கில்
ஒட்டாதே நீர்வரச்செய் யும்.

இங்ஙனம் கண்களில் தண்ணீருண்டாவதற்குக் காரணமாகிய மா, செண்பகம் இவைகளின் பூந்தா துகளின் கூம்பந்தமாகிய குணத்தின் குறைவிருந்தும் அக்காரிய முண்டாயிருக்கின்றது. இங்ஙனம் முதலா வது உதாரணத்தில் மன்மதனுக்கு அதிக மகிமை தோற் றுவதாலும், இரண்டாவது உதாரணத்தில் மா செண்ப கம் இவைகளின் தாதுகளுக்கு ரோதனஞ் செய்யத்தக்க மையலே உண்டாகுதலாகிற மகிமைச் சிறப்புத்தோற்றுத லாலும் இவ்வணியை விசேஷோக்தி யலங்காரமென்றார் தண்டியாசிரியர். சித்தாந்தத்தில் கூர்மை முதலிய கருவி யின் குணங்கள் குறைந்திருப்பமையால இது காரண மில்லாம லக்காரிய முண்டாகும் பிரிதாராய்ச்சி யணியின் பாலே கூறலாயிற்று.

செய்யுள்.

இகலே யிருககினுங் காரியந் தோன்றி யிடுதலையும்
புகலுவ மேலது மூன்றா மவணியின் புட்கரப்பன்
னகம்பணி யோரைத் தெறுமென் றுதாரண நன்குரைப்பார்
செகவீர ராம குமாரொட்ட பாண்டிய சேகரனே.

இடையூறிருக்கினுங் காரியமுண்டாவது மூன்றும் பிறிதாராய்ச்சியணி. இதற்கு "நின்புட்கரப்பன்னகம்" என்பது முதலுதாரணம். இங்ஙனங் கத்திப் பன்னகத் தின் தீண்டுதலாகிய காரியத்திற்கு விஷத்தை யடக்கு

கின்றவேர் மந்திரம் முதலியவைகளைக் கொண்டிருக்கின்ற பணியோர்களாக இருத்தலாகிய விரோதமிருந்தும் அக் காரியம் பணியோர்களிடம உண்டாயிருக்கின்றது.

செய்யுள்.

அரச நின்பிர தாப வருக்கனும்
பரவி யேகுடை பற்பலி லாணைவிட்
டிரவு றுங்குடை யோடு மமைந்திடு
மருவ லார்குழு வாட்டு மதிசயம்.

இங்ஙனம் பிரதாபமாகிய சூரியனின் ஆதபத்தால வெப்பங் கொள்வதாகிய காரியத்துக்கு விரோதமாகிய குடையைக் கொண்டிருந்த விருந்தும் அக்காரிய முண்டா யிருக்கின்றது.

செய்யுள்.

காரண மில்லதிற் காரியம் வேறுறக் காணிலதைத்
தாரணி யோரொரு நான்கா மவணியென் றோதழங்கும்
வாரண மானதில் யாழொலி யென்ன வரலதற்கு
தாரண மெட்ட புரமக ராசவு தாரமனே.

தனக்குக் காரணமில்லாமல இருக்கும் ஒரு கருவியில் மற்றொரு காரியமுண்டாவது நாலாவதாகிய அவ்வணி. இதற்கு "வாரணமானது" என்பது முதல உதாரணம். இங்ஙனம் வாரணமாகிய சங்கம போன்ற நாயகியின் கண்டத்து நின்றும் யாழொலி போன்ற நாதமுண்டா கின்றது என்று தனக்குக் காரணமில்லாமையினின்றும் யாழொலியாகிய காரியமுண்டா கின்றது.

செய்யுள்.

பகையாகு மேதுவிற் காரிய மேயுற் பவிப்பதைந்நாம்
வகைமேவு மவ்வணி சீத மதியின் வளர்கிரணந்
தகையாரிப் பெண்ணினை வாட்டிடு மென்ன லுதாரணமாந்
திசைதோறும் வல்விச யஞ்செய் குமாரெட்ட திண்புயனே.

பகையான கருவியினின்றும் காரியமுண்டாவது ஐந் தாவதாகிய அவ்வணி. இதற்கு "சீதமதியி" னென்பது முத லுதாரணம். இங்ஙனம் சீதத்திற்கும் வாட்டத்திற் கும் நேர்விரோதமாதலால் சீதத்தன்மையுள்ள மதியின து கிரணங்களாகிய பகைக்கருவியினின்றும் வாட்டுதல் லென்ற காரியம் உண்டாயிருக்கின்றது.

செய்யுள்.

மகவெனு மார்த்தாண்ட னுதிபோது குவலயத்
தகவிளங் கிடமன் குலத்தாரை யுற்றமைய
இகலரச புத்திர மொழிற்கரக கமலமவை
மிகவுங் குவிந்தவிவை மிக்கநல வதிசயமே.

இங்ஙனம் குவலயத்தின் விளக்க முதலிய காரியங் களை விலக்கத்தக்க பகலவனுதயமாகிய பகைக்காரணத்தி னின்று அக்காரியங்க ளுண்டாயிருக்கின்றன.

செய்யுள்.

மூட மாமுலை மூவுல கத்தையும்
பீடை செய்யப் பெருஞ்சுரு திக்கணே
கூடு நாட்டம் புருடரைக் கொல்வது
நீடு மாசசரி யங்களி நேரிழாய்.

இங்ஙனம் புருடரின் கொல்லலாகிய காரியத்தை விலக்கத்தக்கச் சுருதியில் கூடுதலென்ற தன்மையைக் கொண்ட நாட்டமாகிய பகைக்காரணத்தினின்று அக் காரிய முண்டாயிருக்கின்றது. முந்திய உதாரணங்களில் காரியகாரணங்களுக்கு கிருக்கும் பகை இயல்பாக வுள்ள தென்றும், இவ்வுதாரணத்திற் சுருதியிற் பற்றுதலெனும் இடையிலவந்த குணத்தாற் சம்பவித்ததென்றும், பிரிவு காண்க.

செய்யுள்.

காரியத் தேநின்றுங் காரணந் தோன்றிடக் காணிலதை
யாரு மவணியி லாருவ தென்ப ரதிபநின்னைத்
தாருவிற் சீர்த்தி யெனும்பாற் புணரி தழைத்ததென்றல
தேரு முதாரண மெட்ட புரத்துதித் திட்டமன்னே.

காரியத்தினின்றும் காரணமுண்டாவது ஆரும் பிறி
தாராய்ச்சியணி. இதற்கு அதிப நின்னை யென்பது முத
லுதாரணம். இங்ஙனம் காரியமாகிய கற்பகத்தருவினின்
றுங் காரணமாகிய பாற்கடலுண்டா யிருக்கின்றது.

செய்யுள்.

மாதிரத்தி லேகொடியும் வந்துதிக்கு மாதிரமோர்
போதுங் கொடியினிடைப் போயுதியா—தோதுமிநற்
கொன்றுவிப ரீதமுற வேகனகத் தோர்கொடியி
லின்றிருவெற் புண்டா யின.

இங்ஙனம் காரியமாகிய பொற்கொடியில் காரணமா
கிய இரண்டு வெற்புகள் உண்டாயின காண்க.

---

## கரு-வது காரணவாராய்ச்சியணி.

(விசேஷோக்தியலங்காரம்.)

செய்யுள்.

குறைவறு காரண மேவியுங் காரியங் கொண்டிலதை
யறைவது காரண வாராய்ச்சி யாம விளக்கவிரிந்தும்
நிறைபெறு நேயங் குறைவிலை யென்ன நிகழ்த்துதல்காட்
டிறைவரும் போற்று குமாரெட்ட பாண்டிய னென்னுமன்னே.

எங்ஙனம் போதுமான காரணமிருந்தும் காரியமுண்
டாகாம லிருக்கின்றதோ அது காரணவாராய்ச்சியணி.
இதை வடநூலார் விசேஷோக்தி யலங்காரமென்பார்.

இதற்கு "காமவிளக்கவிரந்து" மென்பதுமுத லுதாரணம். இங்ஙனங் காமவிளக்கின் பிரகாசமாகிய போதுமான காரணமிருந்தும் நேயத்துக்குக் குறைவாகிற காரியமுண்டாகவில்லை.

செய்யுள்.

சந்தி யிராகியெனச் சாரந்துந் திவாவதற்கு
முந்தி யிருந்திடுதல் மூண்டுமவை—யந்தவித
மேனும் புணர்ப்பையுற விலலைதெய்வத் தின்செயலே
யானதுமிக் காமதிசயம்.

இங்ஙன்று சந்தியென்ற பெண் இராகியா யிருத்தல் திவாவென்ற புருஷன் அப்பெண்ணுக்கு முன்னிருத்தலாகிய போதுமான காரணங்க ளிருந்தும் அவ்விருவருக்கும் சேர்க்கை யென்றகாரியம் உண்டாகாமற் போய் விட்டது.

---

## ௬௯-வது கூடாமையணி.

(அஸம்பவாலங்காரம்.)

செய்யுள்.

அரிதாகுங் காரியத் துற்பவ மென்னலகூ டாமையணி
கிரியாயச் சேயெடுப் பானென் றெவனறி கின்றவனென்
றுரைபே சிடுத லுதாரண மாமய ரேடுவெந்து
திருமால் பணிகமு காசலன் பாதத் தியானத்தனே.

காரியத்தின் ஸம்பவிக்கக் கூடாமையை வருணித்தல் கூடாமையணி. இதை வடநூலார் அஸம்பவாலங்காரமென்பர். இதற்குக் "கிரியாயச் சேயெடுப்பா" னென்பதுமுத லுதாரணம். இங்ஙனம் கையினால் மலையின் எடுத்தல அரிதென்பதை வருணித்திருக்கின்றது. எவனறிகின்றவனென்பது கூடாமையை விளக்குகின்றது.

செய்யுள்.

நளிர்புனற்கொரு விருப்பிட மிரத்தினு கரமென்
றுளியளக்கரைத் தாகமுற் றடைந்தநா மடைந்தோம்
களிதிமிங்கில முதலயர் வுறகளையிற் கும்பன்
அளியடகியுண் டானிதை யென்றெவ னறிவான்.

இங்ஙனம ஒருநாளும் வற்றுதல் ஸம்பவிக்கக் கூடிய தில்லை என்றதை ஸம்பவிக்கக் கூடாததாகக் கூறியிருக்கின் றது. இங்ஙனம் எவனறிவானென்பது ஸம்பவிக்கக்கூடா மையை விளக்குகின்றது.

---

## கஎ - வது தொடர்பின்மையணி.

(அஸங்கதியலங்காரம்.)

செய்யுள்

காரியங் காரணம் வெவ்வே றிடம்பகை யாயுறலே
ஆறுந் தொடர்பின்மை யென்பர் சலதர மாலமுண்ண
ஊறும வழிப்செல்லு வோர்மட வாருய வுருரெனவிங்
கோரு மிலககியந் தேரெட் டயபுர வுத்தமனே.

காரிய காரணங்கள் விரோதந் தோன்றும்படி வெவ் வேறிடத்தில் இருப்பது தொடர்பின்மையணி. இதை வடநூலார் அஸங்கதியலங்கார மென்பர். இதற்கு "ஜலதர மாலமுண்ண" வென்பதுமுத லுதாரணம். இங்ஙனம் ஆல முண்டவன் மூர்ச்சை யடைவது உசிதம். அவ்வாறின்றி ஜலதரங்கள் ஆலத்தையுண்ண வழிசெல்வோர் மட வார் மூர்ச்சையடைந்தார்க ளென்று காரியகாரணங் களுக்கு விரோதமாக வெவ்வேறு இடத்திலிருத்தல் விள ங்குகின்றது.

செய்யுள்.

கோளனெனும் வல்லுரகங் கொலலுமுறை யெவ்வாறு
மூளுநிற நோரரசன் முன்னனுறுகி—நீளுமவன்

காதத்னே யேநீண்டக் காசினியில் மற்றொருவன்
சாதலடை வானிச் சயம்.

இங்ஙனம் கோளனுகிய உரகம் அரசன் செவியில் நீண்ட மற்றொருவன் மாண்டு போகின்றான் உரகத்தின் நீண்டலென்னுங் காரணமும் மாண்டு போகிறதாகிய காரியமும் விரோதமாக வெவ்வேறிடத்திலுண்டாகியிருக்கின்றன.

சில இடத்தில் தொடர்பின்மைக்கு ஸமாதானமிருந்தாலுங் கற்றோரை மகிழ்வித்தலிருப்பமையா லிவ்வணி வருகின்றது.

செய்யுள்.

உயர்ந்த கன்ற உயாநள னெண்ணமா
மியன்ற பற்படி யென்றுமுற் றேறநீ
இயங்கு னெண்ணம தாலுநீ யாயவன்
றியங்கி மிக்குயிர்ப் பாற்றுவன் றேங்குமாய்.

இங்ஙனம் தமயந்தி உயர்ந்தகன்ற படிகளில் ஏற நளன் பெருமூச்சிடுகின்றா னென்ற தொடர்பின்மைக்கு நீயா யென்ற ஸமாதான மிருந்தாலுங் காரியகாரணங்கள் வெவ்வேறு இடத்திலிருப்பதையே பற்றி இவ்வணி யென்றே தீர்மானிக்கலாயிற்று.

இலக்கணத்தில் பகையாயுறுதலென்ற அடை கொடுத்திருப்பமையால் காரிய காரணங்கள் வெவ்வேறிடத்திலிருந்தபோதிலும் விரோதமின்றி யிருக்குமாகில் இவ்வணி யல்ல.

செய்யுள்.

எழின்மு கத்தியெப் போது நுதல்விலேக
கழிய வாங்கின ளோவப் பொழுதுகட்
செழிய பாணத்தி னூற்சிறி யேன்மனம்
அழிய வேபிளப் பாயின தேயந்தோ.

இங்ஙனம் நுதலாகிய வில்லைக் கழியவாங்குதலாகிய காரணம் நாயகியின் முகத்திலும், மனதின் பிளப்பாகிய காரியம் நாயகனிடத்திலும் இருப்பதால் காரிய காரணங்கள் வெவ்வேறிடத்தி லிருந்தாலும் விரோதமில்லாமலிருப்பதைப்பற்றி இவ்வணி யல்லவென்பது நிர்மாணிக்கலாயிற்று.

செய்யுள்.

ஓரிடத் தேசெய்ய வேண்டி யதனைமற் றோரிடத்து
நேரிடச் செய்தலு மொன்று புரிய நிகழ்ந்ததற்குக்
கூறிய மாறு புரிதலு மவ்வணிக் கூறுகளாம்
பாரில் மருவலர் சந்தான மின்மை பணிநினைந்தே.

விண்ணின் மருவலர் சந்தான மின்மை மிகப்புரிந்தாய்
கண்ணவென் றோது வதுங்கோத் திரம்விளக் கற்குவந்தே
பண்ணினை கோத்திரந் தூளாக வென்று பகருவதும்
நண்ணு மிலக்கியந் தேர்வா யிளசை நரேந்திரனே.

ஓரிடத்திற் செய்யவேண்டியதை மற்றோரிடத்திற் செய்வதும் ஒன்றைச் செய்யத்தொடங்கி அதற்கு விரோதத்தைச் செய்வதும் அவ்வணியே. இவற்றுள் முந்தியதற்குப் "பாரில் மருவலர் சந்தானமின்மை பணிநினைந்தே" யென்பதுமுதல் "கண்ணவென்றோதுவதும்" என்பது வரையும், இரண்டாவதற்குக் "கோத்திரம் விளக்கற்" கென்பதுமுதல் "கோத்திரம் தூளாக" வென்பது வரையும் நிரலே யுதாரணங்கள். அவற்றுள் முந்தியதில் பூமியில் மருவலர் சந்தானமின்மையைச் செய்வதற்கு விண்ணில் அதைச் செய்ததாகவும் பிந்தியதில் கோத்திரம் விளக்கத் தொடங்கி அதற்கு விரோதமாக அதைத் தூளாக்கினதாகவும் கூறியிருக்கின்றது. இங்ஙனம் மருவலர்கள் என்ற பகைஞருடைய சந்தானம் மக்களென்ற பொருளுள்ள மருவலர்சந்தானமென்றபதத்திற்கு மருவுள்ள அலர்கொண்ட

சந்தான தருவென்ற பொருளாலும் கோத்ர மென்ப பதத்திற்குப் பூமியென்றும் பருவதமென்றும் இருபொருளாலும் ஸமாதானங் காண்க.

செய்யுள்.

வளர்வுறுவெண் கதிருமிழுன் வாள்தமைப்
போழுண்டோர் மடவா ரெல்லாந்
தெளிவுறவே திருககதனிற கங்கணமுங்
கவானதிறபத் திரமு மத்தங்
களிலினிய திலகமுமா கியகதிசெ
யாபரணங் களையே கொண்டார்
நளமதிப ரேறெனசசொல் வளவநரே
திரவிசய தாப்பூ மானே.

இங்ஙனம் கைகளிலிட வேண்டிய கங்கணத்தை நேத்திரங்களிலும் கொங்கைகளி லிடவேண்டிய பத்திரங்களைத் தொடைகளிலும நெற்றியி லிடவேண்டிய திலகத்தைக் கைகளிலு மிட்டதாகக் கூறியிருக்கின்றது. இதில் கங்கண முதலியவைகளைக் கை முதலியவைகளி லிடுதல் பிரசித்தமானதால் அவைகளைச சொலலாகக் கூறவில்லை.

செய்யுள்.

உலக நாதா மூவுலகத் துளமா னிடரா னவர்மயலை
விலகும் படியாற் றிடற்கிந்த வடிவம விளைநி யளந்திடுதற்
கிலதாம் வனப்பின் புணரியென லிசையில் வடிவங் கொண்டேதான்
பலமா மடவி யருக்குமயற பாா மியற்று கின்றுயால்.

இங்ஙனம் மூவுலகத்திலுள்ளவர்களின் மையலை விலக்கும்படியாய் அவதரித்த கண்ணன் அதற்கு விரோதமாகப்பலமாமடவார்களுக்கு மையலை யுண்டுபண்ணியதாகக் கூறியிருக்கின்றது.

---

வேதநிறப்புக முண்டாக்கு மென்ன விளம்பிடுதல்
ஈதினி லக்கியங் காணெட் டயபுரத் திந்திரனே.

காரணத்தினின்று வேறு குணமுள்ளகாரிய முண்டாவதும் அவ்வணி இதற்கு "மன்னநின்கா" ரென்பது முதலுதாரணம். இங்ஙனம் கறுப்புநிறமுள்ள கத்தியாகிய காரணத்தினின்றும் வெண்மையான கீர்த்தியாகிய காரியமுண்டாயிருக்கின்றது காரியகாரணங்களில் ஒன்றையொன்று விலக்குந் தன்மையிருப்பது ஐந்தாவது பிறிதாராய்ச்சியணி யென்றும் பகையான குணமுள்ள காரணத்தினின்றும் பகையான குணமுள்ள காரியமுண்டாவது தகுதியின்மையணி யென்றும் பிரிவுகொண்க.

செய்யுள்.

அநுகூலங் கொள்ளத் தொடங்கி யதுமுடி யாமலுந்தீங்
கினையே யடைவது மவ்வணி பண்டம்வை கின்றதென்று
முனிநாகப் பெட்டியி னைக்கடித் தாகு முனைந்தவர
வினதினை யாமென் றிலக்கியம் விள்வ ரிளசைமன்னே.

அநுகூலத்தைப் பெறத்தொடங்கி அதைப் பெறாமலிருப்பது மன்றிப் பிரதிகூலத்தையும் பெறுவதும் அவ்வணி. இதற்கு "பண்டம்வை கின்றதென்ற" தென்பது முதலுதாரணம். இங்ஙனம் பண்டமிருக்கின்ற எண்ணங்கொண்டு பாம்புப் பெட்டியைக் கடித்த எலி தன்கோரிக்கையைப்பெறாமல் போனதுமன்றி அப்பாம்புக்கு இரையாகவு முடிந்தது.

செய்யுள்.

பண்ணவனே நானதிகப் பாலாசை யோடுநின்னை
எண்ணறுகோ பாலனென்ன வேநினைந்து—நண்ணினனீ
மாதாவின் பாலேனு மாந்தவொட்டா மற்புரிந்தாய்
நாதாநின் னருளென் னாம்.

இங்ஙனம் அதிகப்பாலாகிய பயனின் விருப்பத்தால் கண்ணனை அணுகி அதைப்பெறுமற் போனதுமன்றி இயல்பாகக் கிடைக்கத்தக்க தாய்முலைப்பால் கிடையாமையாகிற பிரதிகூலமுங் கிடைத்திருக்கின்றது.

செய்யுள்.

மண்ணதனிற் கோளரிக்கு மன்னுபயங் கொண்டுமுயல்
விண்ணதனிற் சந்திரனை மேவினது—நண்ணவனுந்
தான்சேர் பொருளினுக்குஞ் சாற்றுமதற் கூற்பயமே
தான்சேர லானதுநித் தம்.

இஃது கெடுதியை நீக்கிக்கொள்வதாகிற பயனைக் கருதி யத்தனித்து அவ்வாறு முடியாமல் அதிககெடுதியாக முடிவதற்கு உதாரணம். இங்ஙனம் முயல், கோளரியாகிற சிங்கத்திற்குப பயந்து அக்கெடுதியை நீக்கிக் கொள்ளும் பொருட்டாய் விண்ணில் விளங்கும் மதியினிடத்திற் சென்றும் அவ்விடத்திலுங் கோளரியாகிய அரியினிடத்தில் மிகுதியான பயத்தையடைந்தது.

செய்யுள்.

மாருதி வாலை யெரிக்கு மவாவாய்ச்
சேருமி ராவண னூரதி லேதீச்
சாருற மூளுவித் தாரத னூற்றம
மூருல வுந்தக னூதினை யுறுமே.

இஃது பிறருக்குப் பிரதிகூலத்தைச் செய்கிறதாகிய இஷ்டத்தைச் செய்யத்தொடங்கி அவ்வாறு முடியாமல் தனக்குப் பிரதிகூலமாவதற்கு உதாரணம். இங்ஙனம் மாருதியின் வாலை யெரிப்பதாகிற இஷ்டத்தைச் செய்யத்தொடங்கியது, அவ்வாறு முடியாமல் தன் னகரந்துக்கே கெடுதியாக முடிந்தது. பிரதிகூலமட்டிலும் கிடைப்பதும் அநுகூலமட்டிலும் கிடையாம லிருப்பதுமெனப் பின்னும் இவ்வணி யிருவகைப படும்.

செய்யுள்.

மரையின் பூங்குடை விருப்புறு பேதையே மரையின்
விரையை வாவியில் வித்திட விரும்புகின் றனையோ
உரைசெய் காலமோ கலியுல கோகல மறப்ப
வரைவி லிம்மரை யுன்முக வாவியே யிகலும்.

இஃது பிரதிகூலத்தை மட்டிலும் பெறுவதற்கு உதாரணம். இங்ஙனம் மரைப்பூங் குடையின் விருப்பத்தால மரையின் விரையை விரைக்கின்ற பெண்ணுக்கு மரையின் பெறுதலிருக்கின்றது. ஆனால் முககாந்தியை யிகழுதலாகிய பெரிதான பிரதிகூல மிருக்கின்ற தென்று காண்க.

செய்யுள்.

சிறுவனீ சிரம மருவினை யெம்பாற்
சேரவை தாங்குகின் றனமென்
றறையெது குலத்தோர பொறையது பரதரா
லயர்ந்துகை வளைந்தலாந் திடத்தன்
னுறுகரஞ் சிறிது கழுவிட விடுத்தே
யுடனகைக கின்றவ முரன
இறைவனே யெவாககு மேன்மையுந் றவனு
விருந்ததை யறிந்தன மம்மா.

இஃது அநுகூலங் கிடையாமைக்கு உதாரணம். ஆயினிங்ஙனம் வெற்புமேல் விழுகிறதாகிய பிரதிகூலத்தின் பெறுதல் இருக்கின்றது. அவ்வாறிருக்கிறுங் கண்ணனின் கரகமல ஸம்பந்தத்தின் மகத்துவத்தால் அது உண்டாகவில்லை என்றும் வெற்பைத் தாங்கள் தாங்க வேண்டுமென்ற இஷ்டமட்டிலும் சித்திககவில்லை என்றுங் காண்க.

செய்யுள்.

இந்தமதி மறுவொருவ விவ்வுலகத் துன்முகமா
வந்துபிறந் தனனவனுந் திலகமெனுங் கைதவத்தால்

தந்திடுவை மறுவையடுத் தவர்மறுவும் றவராக
எந்தமடந் தையும்புரிவ ளவர்பொனெழிற் சொண்டொடியே.

இங்ஙனம் சந்திரன் தன்னிடத்திலிருக்கும் களங்கமாகிற பிரதிகூலத்தை நீக்குதலாகிய இஷ்டத்தின் பெருமை யிருக்கின்றது.

செய்யுள்.

அருந்தவபுத் திரவெதனும் புயமறிதர் கலேந்துகிரிந்
திருந்தவெனக நிசசாபங் கருணையொடு மேயிசைந்தி
பருந்தருவி னரிலுறுநீப் பாரதனை சுடினுமுழ
வரும்தொழிற்கு வளர்ந்தெழுப யிருந்தேது வாமன்றே.

இங்ஙனம் ஸ்வபாவத்தில் அநிஷ்டமாக விருக்கும் முனியினது சாபம் வீணாகாமலிருக்கும் பொருட்டுப் புத்திரனில்லாமலிருக்கும் தசரதனுக்குப் புத்திரனுண்டாகித் திருவது நிச்சயமாகையால அவ்வரசனுக்கு இஷ்டமாகவே ஆச்சுது. ஆதலால அன்னியனுக்கு அநிஷ்டத்தை யுண்டுபண்ணுகிறதாகிய இஷ்டத்தின் சித்தித்தல் உண்டாகவில்லை. ஒருவன் தன்னுடைய இஷ்டம் சித்தித்தலின் பொருட்டு ஓரிடத்திற் கொருத்தனை அனுப்ப அவன் தன்னை அனுப்பியவன் இஷ்டத்தை முடியாமல் தனக்கு இஷ்டத்தை முடித்துக்கொள்ளு மிடத்திலும் இஷ்டம் பெருமையில்லை லுண்டா மிவ்வணி.

செய்யுள்.

பாங்கி காளென் பதியிடத் தேவவே
நீங்கு தூதி யவன்வசம் நேர்ந்தனள்
ஏங்கு மென்னறி வின்மையோ வீதுதான்
ஓங்கு தெய்வக குறையோ வுணருவீர்.

இங்ஙனம் நாயகனிடத்துக்கு நாயகியா லனுப்பப் பட்ட தூதி நாயகியின் இஷ்டத்தை முடியாது தன்னு

டைய இஷ்டத்தை முடிக்கின்றுளென்பது தூதி அவன் வசம் சேர்ந்தனள் என்றமையால் விளங்குகிறது.

செய்யுள்.

நெஞ்சை யஃறிணையா நேர்ந்தேனு னம்பி
வஞ்சியவள் பாலே வவுமஃது—தஞ்சமென
அங்கே கலந்துவச மானதுதொல் காப்பியரால்
இங்கேமோ சம்போ யினேன்.

இங்ஙனம் நாயகியிடம் மனதின் பற்றுதலாலுண்டாகிய சுகத்தைத் தானநுபவிக்கிறதாக இருந்தாலும் நெஞ்சத்தையும் தன்னையும் வேறுகவைத்து தனக்கு இஷ்டஞ் சித்திக்கவில்லை யென்பது விளக்கி இருக்கின்றது. இவை இஷ்டமே சித்தியாமைக்கு உதாரணங்களாக இருக்கின்றன. ஒருக்கால் இஷ்டம் கிடைத்தும் பின்பு அது கிடையாமற் போவதற்கு உதாரணம் எவ்வாறெனின்.

செய்யுள்.

மாதவநின் பதகிரணத் தழகினையா
தவன் விரும்பி வருமற்றேறு
மேதனவைக் கிரணமதை விடியுவளை
யனற்காய்ச்சி விடிந்த போதொப்
பாதலுறு மென்றெடுத்து க்கடிகைசெலச்
செலவுமச்சே யகல்வ நோக்கி
ஏதுமிலைத் தன்பணியிற் பயனெனசரு
டிசைவதலா தியற்கை யன்றே.

இங்ஙனம் சூரியனது கிரணங்கள் இரவில் அக்கினியிற் பிரவேசிப்பது வேதத்திற் பிரசித்தமா யிருக்கின்றது. அவன் தனது கிரணங்களுக்கு மாதவனின் பாத

திரணங்களோடு ஒப்புமைக்கிடைக்கவேண்டுமென அவை களை அக்கினியில் இரவு முழுமையும் காயவைத்து, காய வைத்த நாராசப்பகழிகள்போல் அக்கிரணங்கள் காய்ந்து செம்மை கொண்டதாக நினைத்தெடுத்தும் அவ்விதம் பெரிதான யத்தினத்தினாலும் அவனுக்கு அக்காலத்தில் மட்டிலுமிருக்கின்ற இஷ்டம் சித்தித்ததே யல்லது எப்பொழுது மிருக்கக்கூடியதான இஷ்டம் சித்திக்கவில்லை.

செய்யுள்.

திருமலிரி னகைமுடிப்பை யவிழ்த்தழகாம்
 பொருளகவர்மித் திரனே யானேன்
கரபலனு மெம்மதியு வாவதனி
 லுன்றிருமு கஸ்ரீ யெனபபு
மருவியது முதனிரலே தேயந்ததனி
 யாயமதில் வாய்ந்த செல்வம
விரைவிலழிந் திடுமெனலே யார்க்குமறி
 வித்திடுங்கோ விந்த தேவே.

இங்ஙனம் பகவானது முககாந்தியை விரும்புகின்ற சந்திரனுக்குச் சிலேஷையாக விருக்கும் மித்திரன் என்ற சொல்லினாற் கிடைத்த சூரியனிடத்தில அமாவாசையிற் பிரவேசித்தலும் இஷ்டனிடத்தி னின்றும் பகவானுடைய முககாந்திக்கு இருப்பிடமாகிய தாமரை மொட்டென்ற முடிப்பை அவிழ்த்ததினாற் கிடைத்த அழகாகிய பொருளைப் பெறுதலுமாகிய அதிகமான முயற்சியைச செய்தும் பூர்ணிமையில் மட்டிலும் அவ்விதமான காந்தியைப் பெறுதலாகிய இஷ்டம் சித்தித்ததே யல்லது எககாலமு மிருக்கத்தக்க இஷ்டம் சித்திக்கவில்லை. சில இடத்தில் இஷ்டம் கிடையாமற் போனபோதிலும் கிடைத்ததாக ஐயமுண்டாவதும் அவ்வணியே. அஃதாவது.

செய்யுள்.

பல்லாள மன்னவநின் பகைஞ ரூரிற்
பழகுறுவேட் டுவமடந்தை யௌணுமுந் திந்தி
எல்லாரு மிரத்தினத்தைக் கருங்கா லிதீ
யெனவெடுத்தன் னதிலேசந் தனத்தின் காட்டம்
நல்லாளைத் தடுக்கியிரு விழியு மூடி
னமையுடனூற் றூதியிடும் போதே மூசின்
மல்லாரும் பரிமளத்தால் வந்து லாவு
மறுகாத்தைப் புகையெனச்சங் கையும்வாய்ந் தாளே.

இங்ஙனம் அக்கினியைப் பெறவேண்டுமென்ற முய
ற்சியில அது கிடையாவிட்டாலும் அது கிடைக்கு மெ
ன்ற ஐயம் புகை யுண்டாகின்றதென்ற ஸந்தேகத்தால்
விளங்குகின்றது.

---

## ருகூ-வது தகுதியணி.

(ஸமாலங்காரம்.)

செய்யுள்

இசையு மிரண்டு பொருளின் வருணித் தலேதகுதி
அசைவுறு மார முலேயைத் தனக்கிசை வாமெனவே
நசையோ டுருபபிட மாகின தென்னனன் காட்டதுவாம்
விசையனை நேருங் குமாரெட்ட பாண்டிய மேன்மையனே.

பொருத்தமான இரு பொருள்களைச் சேர்த்து வரு
ணிப்பது தகுதியணி. இதை வடநூலார் ஸமாலங்கார
மென்பர். இதற்கு "அசைவுறுமாரமுலேயை" யென்பது
முதலுதாரணம். இங்ஙனம் அசைவுற்ற ஆரம் முலே என்ற
பொருந்திய இரு பொருளுக்குச் சேர்க்கையை வருணித்
திருக்கின்றது. இஃது முதலாவது தகுதியின்மையணி
க்கு மாறுக இருக்கும் தகுதியணி.

செய்யுள்

நரசிங்க பூமன் னவநிலவு நற்சங்
திரனைப்போற் கங்கைபிறைச் செஞ்சே—கரனைப்போற்
சாற்றுபுகழ் நின்னைச் சரியா மிருப்பிடமென்
றேற்றகலா துற்றிலங்கு மே.

இங்ஙனம் நரசிங்க அரசனுக்கும் புரமூர்க்கும் சரியான பொருத்தங் கூறியிருக்கின்றது.

செய்யுள்

ஆச்சரிய மாச்சரிய மற்புதமிக் கற்புதம்வே
தாசசெழுவேம் பின்கனியைச் சாருமுண—வாசசெய்து
அங்கவையுண் ணக்காகத் தைப்படைத்தான் றெய்வவரு
ளுங்கொள்ளலா லாக்கவின்மே லோன்.

இங்ஙனம் காக்கைக்கும் வேப்பங்கனியின் உணவிற்கும் பொருத்தங் கூறியிருக்கின்றது முந்திய இரண்டுதாரணங்களிலேயுந் தகுதியான பொருத்தம் என்றும் இதில் நிந்தையான பொருத்தம் என்றும் பிரிவுகாண்க.

செய்யுள்

காரிய மானதைக் காரணத் தோடொப்புக் காண்புகழ்ச்சி
நேரினு மவ்வணி தெண்ணீ ருதித்த நினக்கெய்துங்கீ
ழாரிட மேயிருப் பானது சீத மிங்கமைந்த
பாரியென் றேத விலக்கிய மெட்டம பார்த்திபனே.

காரணத்தோடு காரியத்திற்கு ஒப்புமைகூறுவதும் அவ்வணி. இதற்கு "தெண்ணீருதித்த நினக்" கென்பது முதலுதாரணம். கீழாரிடமே யிருக்குந் தன்மையுள்ள தண்ணீராகிய காரணத்தினின்றும் உதித்த இலக்ஷ்மியாகிற காரியத்திற்கு அத்தன்மையாகிய ஒப்புமை யிருப்பதைக் கூறியிருக்கின்றது. இஃது இரண்டாந் தகுதியின்மை யணிக்கு மாறான தகுதியணி.

செய்யுள்.

காட்டழலிற் றோன்றுபுகை காராகித் தாரையினாற்
காட்டினந்தீ யைககெடுக்கக காண்பதுமே—நாடடுசிதந்
தானதனுக கத்தீயுஞ் சாரவுறுகாட் டைத்தகன
மானதுசெய் கின்றதல வா.

இங்ஙனம தான் உற்பத்தியாகிற காட்டையழிக்கின்ற காட்டுத்தீ யெனும் காரணத்தாலாகும் புகையாகிய காரியதநிற்கும்அது உற்பத்தியாகு மிடத்தைந அழிக்குந் தன்மையாகிற ஒப்புமை யிருககின்றது.

செய்யுள்.

ஆதியா லால மெனுங்கனற் கைலா
கவிதத்திடப பெறறுவா லிபச்திற்
போதிமுக கண்ணுறா நுதலனை னேயங்
தோன்றியெள வனத்திலே ராகு
காதுறு வதனத தோடுமங் தரங்கங்
காணுமிச சந்திரன் கரத்தான்
மோதியிவ் விதமே யெனவருந் துவது
முற்றிலு முசிதமா னதுவே.

முந்திய வுதாரணங்களிற் காரணத்தின் இயல்பான செய்கையின் ஒற்றுமை காரியத்திற்கு இருக்கிறதென்றும் இதில் ஆலாலமுதலியவற்றின் தீய சேர்க்கையா லுண்டான ஒற்றுமை யிருக்கிறதென்பும் பிரிவு காண்க.

செய்யுள்.

இசைகொண் டேமுயற் சித்த பயன்குறை வின்றிமுடி
வைசசொல வதுமவ் வணியே துடியடி வாரணத்தை
நச்சிய நிற்குத் துடியடி வாரணம் நண்ணிற்றம்மான்
மெய்ச்சுத வென்ன வுதாரண மெட்டம விற்பனனே.

இந்து மூன்றாவது தகுதியின்மையணிக்கு மாறாக விருக்குந் தகுதியணி. இங்ஙனம் அநிஷ்டத்தைப் பெறாமல் இஷ்டத்தைப பெறுதன் மட்டிலும் இருக்கின்றது. தந்தாவளம் வேண்டுமென்று அரண்மனைக்குட் பிரவேசித்து அவ்விடத்தில் வாயில காக்கின்றவர்களால் தடைபட்டு நிற்கின்றவனைக் குறித்துப் பரிஹாஸமாகப் பேசிய வசனம் அரசனது வாசலில் கணப்பொழுது தடைப்பட்டிருத்தல் ஸம்பவிக்குமென்று நினைத்தே முயற்சித்திருப்பமையால் நினையாமற்கிடைக்கின்ற அதிகமான அநிஷ்டத்தைக் கொண்டிருக்குந் தகுதியின்மையணியைப்போல் இங்ஙனமுந் தடைபடுதலாகிய அநிஷ்டமிருக்கின்றதென நினைத்து அவ்வணி யென்று கூறலாகாது எங்ஙனம் நினையாமல் கிடைத்த அநிஷ்டமானது சிலேஷையினால் இஷ்டமாகவே வருணிக்கப்படுகின்றதோ அங்ஙனம் இவ்வணியே. வாரணம்-தடுத்தல்

செய்யுள்

உச்ச வும்பலி னடனம்வேட் டுனையடுந் தறுகேன்
இச்சை யின்படி மன்னவுச் சாடனந் தந்தாய
விச்சை சோபெரி யோரிட மேவியே யடுந்தல்
நச்ச லாம்பய னண்ணுவ திலதுமு தன்றே.

ஆனாலிங்ஙனம் துதியினால் நிந்தை தோன்றுகின்ற வஞ்சப்புகழ்ச்சியாக வொப்புக்கொள்ளும் விஷயத்தில் தகுதியின்மையணி இருக்கின்ற தெனின் அவ்வாறிருக்கினும் உச்சமான அடனத்தை விரும்பியவனுக்கு அவ்வண்ணமே உச்சாடனத்தைக கொடுத்தீர் என்ற முதலாவது தோன்றுந்துதியை முக்கியமாகக்கொண்டு தகுதியணிக்குக் குறைவில்லை என்று இவ்விடத்திலுணாககலாயிற்று. அடனம்-திரிதல்

இஷ்டத்தின் பெறுதலிருக்கினும் இருபொருள்படுஞ் சொல் சாதுரியத்தால் அநிஷ்டமான பொருளின் தோற்ற மிருக்கின்ற விடத்திலும் இவ்வணிக்குத் தடையில்லை. அஃதெப்படியெனின்.

செய்யுள்.

காண்டம் படைப்புரியா யென்று கழறிடவும்
காண்டம் படப்புரிந்து காதலனும்—வேண்டிபிதா
ஆணைகடந் தானே யல.

இங்ஙனம் ஆணை கடந்தானே யல என்றதினால் விரோதாலங்காரந்தோன்றும் பொருட்டுக் காண்டம் படைப்புரியாயென்றதற்குப் பகழியைப் படையாமலிருப்பாய் என்ற பொருள் கொள்ளுதலிருந்தபோதிலும் பகழியைப் படைப்பா யென்ற பொருளைக்கொண்டே தருதியணியும் இருக்கிறதென்றறிக. இருபொருள்படுஞ்சொல் சாதுரியத்தினால் கிடைத்த அநிஷ்டத்தின் தோற்றுதலாலேயே முன் கூறியபடிக்கு உதாரணமாகிவிட்டது.

செய்யுள்.

பதும நீரிற் பரிதிக கெதிருற
புதிய நற்கதி சேர்பொருட் டுத்தவ
மதுபு ரிந்தமை யாலுன் பதமெனப
பதிபி றப்பிலஃ துற்றது பாவையே.

இங்ஙனம் நற்கதியடையத் தவஞ்செய்த தாமரைகளுக்கு நற்கதியே கிடைத்தது என்னுமிடத்து சிலேஷையாக நன்னடையென்ற பொருள் கொள்வதாயிருந்தாலுந் தான் கோரிய நற்கதியாகிய இஷ்டங் கிடைத்திருப்பதா லிஃது மவ்வணியே.

## ௪0-வது வியப்பணி.

(விசித்திராலங்காரம்.)

செய்யுள்.

கருதும் பயனுக் கெதிரா முயற்சியைக் கைக்கொடுதான்
புரிதல் வியப்பணி நல்லோர் திரிபுவ னத்தினுமே
பிருமுயா வாக வணங்குவ ரென்ப திலக்கியந்தேர்
அரிதிரு மாலெனுஞ் சாத்தார ராஜனைகொ ளன்புளனே.

தான் கருதிய பயனுக்கு மாறாகவிருக்கும் முயற்சியைச் செய்வது வியப்பணி. இதை வடநூலார் விசித்திராலங்கார மென்பர். இதற்கு "நல்லோர் திரிபுவனத்தி" லென்பதுமுதல் உதாரணம். இங்ஙனம் உயர்ச்சியடைதலாகிற பயனைப் பெறுதற்குத் தேகத்தை உயர்த்தவேண்டியது உசிதமாகவிருக்க அவ்வாறின்றி அப்பயனுக்கு விரோதமாகத் தேகத்தின் வணக்கமாகிய யத்தனங்கொண்டதைக் கூறியிருக்கின்றது.

செய்யுள்.

உன்புகழ்பொல் லார்முகத்தி லேகறுப்புண் டாக்கமன்று
மன்புவன மானதில்வெண் மைபுரிவை—நின்பிர
தாபமுமே மித்திரசந் தோடமியற் றற்கியற்றுங்
கோபமது மித்திரனுக் கு.

பொல்லார் முகத்திற் கறுப்பை யுண்டுபண்ணுதலாகிய பயனைக் கருதி அதற்கு அநுகூலமாக எவ்விடத்திலுங் கறுப்பை யுண்டுபண்ணுதலாகிய யத்தனத்தைச் செய்யாமல் அதற்கு விரோதமாக வெளுப்பை யுண்டு பண்ணுகிறசெய்கையைச் செய்ததாகக் கூறியிருக்கின்றது.

---

## சஉ-வது சிறுமையணி.

(அற்பாலங்காரம்.)

செய்யுள்.

நுண்ணிய தாகிய வாதேயந் தன்னினுட் பம்முறவே
நண்ணிய தாமொரு வாதாரத் தைப்பன லுஞ்சிறுமை
அண்ணமு தேநின் மணிமாலை யாம்விர லாழிசெபம்
எண்ணுதற் காம்வட மென்னலி லக்கிய மெட்டமனே.

அற்பமான ஆதேயத்தைப் பார்க்கினும் ஆதாரத்தை அற்பமாகக் கூறுவது சிறுமையணி. இதை வடநூலார் அற்பாலங்கார மென்பர். இதற்கு "அண்ணமுதே நின்மணிமாலையாம்" என்பதுமுத லுதாரணம். இங்ஙனம் விரலாழி விரலளவை மட்டுங் கொண்டிருப்பமையால் நுண்ணியதெனக் கிடைத்தது. அதுவுந் தவிர விரகமாதின் கையில் "செபமெண்ணு தற்காம்வட" மென்றதால் ஆதேயமான அச்சூத்திரத்தைப் பார்க்கினும் ஆதாரமாகிய கைகரு விரகத்தினுலிளைத்து நுட்பமாக இருக்குந் தன்மை விளங்குகின்றது.

செய்யுள்.

மருங்கி னுஞ்சிறு மையுற
வருங்கு சேசயம் வைகுநூல்
நெருங்குன் மாமுலை நேர்நடுப்
பொருந்து கின்றில பூவையே.

இங்ஙனம் மருங்கினுஞ் சிறுமையாக இருக்கும் தாமரை நூலாகிய ஆதேயம் முலைநடுவில் பொருந்தவில்லை என்றமையால் அவ்வாதாரம் ஆதேயத்தினும் நுண்ணியதென்பது நன்குய் விளங்குகின்றது.

## ௪௩-வது ஒன்றுக்கொன் றுதவியணி.

(அந்யோந்யாலங்காரம்.)

செய்யுள்.

உதவியொன் றுக்கொன் றுறலைச்சொல் லொன்றினுக் கொன்றுதவி
விதுவி னிராவும் விளங்கு மிராவின் விதுவுவிளங்
குதலுறு மென்ப துதாரண மாந்திறை கொண்டுவந்து
சதமுறு மன்னர் தொழுமென் குமாரெட்ட சற்குணனே.

இருபொருள் ஒன்றுக்கொன் றுதவியாக இருப்பது ஒன்றுக்கொன் றுதவியணி. இதை வடநூலார் அந்யோந் யாலங்கார மென்பர். இதற்கு" விதுவினிராவும் விளங்கு" மென்பதுமுத லுதாரணம். இங்ஙனஞ் சசியி னாலிரவின் விளக்கமு மிரவினால் சசியின்விளக்கமு மிருப்பதால் அவ்விரு பொருளும் ஒன்றுக்கொன்று உதவியைச் செய்கின்றன.

செய்யுள்.

நோக்க மேனுற நோக்கி யிடைவெளி
யாக்க ரங்கொடுண் பான்புன லன்னதாய்
வார்க்குந் தாரைநுண் மையுறப் பெய்குவான்
ஆசகு நீர்ப்பந்த ரார்ந்திடு மன்னமே.

இங்ஙனம் தன்னிடத்தில ஆசையால் தண்ணீரைக் கொடுக்கிறதென்ற கைதவங்கொண்டு வெகுநேரந் தன் முகத்தைப்பார்க்க விரும்புகின்ற தண்ணீர்ப் பந்தலிலுள்ள பெண்ணுக்கு வழிப்போக்கன் விரலகளின் அகறறுத லால் வெகுநேரம் தண்ணீரை வார்த்துக கொண்டே பார்க்கும்படிக்கு உபகாரத்தைச் செய்தான். அவ்வாறே அப்பெண்ணும் தண்ணீரைக்குடிக்கிற தென்ற கைதவங் கொண்டு வெகுநேரம் தன் முகத்தைப்பார்க்க விரும்பிய

வழிப்போக்கனுக்கு நுடபமாகத் தண்ணீர்த் தாரையை விடுப்பதால் வெகுநேரம் தண்ணீரைக குடித்துக்கொண்டே தன்முகம் பார்க்கும்படிக்கு உபகாரஞ் செய்தாள். இங்ஙனம் இவ்விருவரின் முயற்சியால் அவரவர்களுக்கு உபகார மிருக்கினும் ஒருவருக்கொருவர் செய்யுமுபகாரம் நீங்கவில்லை என்பதினும் இவ்வணிக்குக குறைவில்லை. கைதவம் - வியாஜம்.

---

## சச-வது சிறப்புநிலையணி.

(விசேஷாலங்காரம்.)

செய்யுள்

ஆயும் பிரசித்தத் தாதார மின்றி யதிலுறுமா
தேய மதைவரு ணிக்கு மதன்பேர் சிறப்புநிலை
சேயவேல் வாரி புகுந்துந் தினகரன் தீபமுற்றக்
காயுமென் றோத விலகிய மெட்ட நகர்க்கரசே.

எந்த ஆதேயத்துக்கு எந்த ஆதாரம் பிரசித்தமாய் விளங்குகின்றதோ அந்தப்பிரசித்த ஆதாரமின்றி ஆதேய மிருப்பது சிறப்புநிலையணி. இதை வடநூலார் விசேஷாலங்கார மென்பர். இதற்கு "சேயவேல்வாரி புகுந்து" மென்பதுமுத லுதாரணம். சூரிய கிரணங்களுக்கு அச சூரியன் பிரசித்த ஆதாரமாக இருக்க அதை நீங்கி அவை தீபமாகிய ஆதாரத்திலிருந்து கொண்டு இருளை நீக்குகின்றன வென்று வருணித்திருக்கின்றது.

செய்யுள்.

அம்பிலிடத் தம்புயமு மம்புயத்தி லுற்பலமும்
பம்பிவைபொற் பைங்கொடியிற் பற்றுமது—வம்பொறியின்
மேலாகு மீதெவ் விதமாமுற் பாதத்தின்
பாலாம் பரம்பரையைப் பா.

இங்ஙனம் கமலத்துக்குங் குவளைக்கும் தண்ணீர் பிரசித்த ஆதாரமாக இருகக அவ்விதங்கூறுமல் தண்ணீரில்லாதவிடத்தில் அம்புயமும் அம்புயத்திற்குவளைமலரும் அவ்விரண்டும் பொற்கொடியினு மிருக்கின்றனவாக வருணித்திருக்கின்றது.

சில இடத்தில் பிரசித்த ஆதாரங்களை விட்ட பொருள்களுக்கு வேறே ஆதாரம் கூறுமலே வருணிப்பதும் அவ்வணியாம். அதற்குதாரணம்.

செய்யுள்.

பொன்னுலகிற் புக்காராய்ப் போயுமெவர் நற்குணமே
மன்னுசொற்க ளெக்களிப்பு வந்துதவும்—அன்னவர்கள்
எவ்விதங்காண் போற்ற விலார்.

இங்ஙனம் பொன்னுலகைசசென்ற வித்வான்களின் மேன்மையானவாக்குகள் தங்களுக்குப்பிரசித்த ஆதாரமாகிய அப்புலவர்களில்லாமலிருந்தும் வேறே யாதாரத்தை அணுகாமலே ஊழிகாலம்வரை விளங்குகிறனவென்று வருணித்திருக்கிறது.

செய்யுள்.

பலவிடத் தோர்பொரு டன்னை வருணிப் பதுமவணி
புல்லி யகம்புற முன்பினெத் திக்கும் பொலிவுறவின்
சொல்லியை யேகண்ட னென்றுமு தாரணஞ் சொல்வர்மணப்
பல்லிய மென்று மதிரெட்ட மாநகர்ப் பாண்டியனே.

ஒரு பொருளை அனேக இடங்களில் வருணிப்பதும் அவ்வணி. இதற்கு "புல்லியகம்புறமுன்பி"னென்பதுமுத லுதாரணம். இங்ஙனம் ஒரே பெண்ணை அகத்தும் புறத்தும் முன்னிலும் பின்னிலும் எத்திக்கிலும் இருக்கின்றவளாக வருணித்திருக்கின்றது.

செய்யுள்.

மதலே ராசவ நீயென் மனத்துநீங்
குதலு றுமெய்கு மங்குரங் கோடியில்
விதமி ருந்தும்வி பினமுற் றுயெனு
மதனை யெயனு மானத்தி னோர்வனல்.

இங்ஙனம் ஒரே இராகவனை இருதயத்திலும் எத்திக்கிலும் காணுகிறதாகக் கூறியிருக்கின்றது.

செய்யுள்.

சிறுகா ரியத்து முயற்சியி னும்பெரி தேயெனச்சொல்
மறுகா ரியங்கிடைக் கின்றது மவ்வணி மன்னநிற்பாரக
கிறயான் றருக்கண்ட னென்ன விலக்கியங் கேட்டவர்க்கு
அறநாலெட் டுங்கினஞ் சேரொட்ட மாகக ராஎபவனே.

அற்பவிஷயத்தி னாரம்பத்தால் அரிதான வேறு பொருளின் கிடைத்தலைக் கூறுவதும் அவ்வணி. இதற்கு "மன்னநிற்பார்க்கிற யா"னென்பதுமுத லுதாரணம். இங்ஙனம் அரசனைக்காண்கிறதாகிய அற்பமாகிய ஆரம்பத்தைச செய்தவனுககுக கற்பகவிருக்ஷத்தின் காணுதலாகிற மேன்மையான காரியங் கிடைத்தது.

செய்யுள்.

பொற்பின் வடிவதிகம் பொங்குபிர தாபத்தி
அற்பமுறுக் கல்வியுள நாவிருகக—நிற்படைவே
தாபுகிய வேளினைமார்த் தாண்டனைவி யாழனைமன்
றுபடைத்தல் செய்தானிந் நாள்.

இங்ஙனம் நல்ல வடிவமும் அதிகப் பிரதாபமுங் குறைவில்லாக் கல்வியும் உள்ள அரசனின் படைத்தலாகிய அல்பகாரியத்தின் ஆரம்பத்தினால் மன்மதன் சூரியன் வியாழன் இவர்களின் படைப்பாகிய மேன்மையான காரியம் உண்டாயிற்று.

---

## சுரு-வது மற்றதற்காக்கலணி.

(வியாகாதாலங்காரம்.)

செய்யுள்.

எதையெதற் கேது வெனப்பூ மியுங்கொண் டிருந்ததனை
அதின்பகைக் காரியக் கேதுவு மாகக்கலு மாரொருவன்
விதிகா ரியமொன்றிற் குச்சா தனமென வேபொருத்தி
னதைவே றொருவ னதின்பகைக் காரிய மானதற்கே.

சாதன மாக்கலு மற்றதற் காக்க லுதாரணம்பார்
யாது மகிழ்மல ரான்வே ளவைக்கயர் வாற்றுமென்றும்
மாதிருக் காலெரி வேளினை மாதிருக காலவரச்செய்
கோதையர் மேலரென் றுந்தே ரிளசைக் குமாரெட்டனே.

எந்தப் பொருளை எதின் அநுகூலகாரியத்திற்கு உலகம் ஸாதனமாகக் கொண்டிருக்கிறதோ அப்பொருளை அதின் விரோதகாரியத்திற்கு ஒருவன் ஸாதனமாகக் கொள்வதும் ஒன்றுக்கு ஸாதனமாக ஒருவன் கொண்டதை அவனுக்கு விரோதியாயிருக்கும் மற்றொருவன் அதின் விரோதத்திற்கு ஸாதனமாகக் கொள்வது மற்றதற்காக்கலணி. இதை வடநூலார் வியாகாதாலங்கார மென்பர். அவற்றுள் "யாது மகிழ்" என்பது முதல் முந்திய இலக்கணத்துக்கும் "மாதிருக்காலெரிவேளினை" யென்பது முதல் பிந்திய இலக்கணத்துக்கும் நிரலேயுதாரணங்கள். அவற்றுள் முந்திய உதாரணத்தில் உலகமகிழ்ச்சிக்கு ஸாதனமாகக் கொண்ட மலரென்ற பொருளை மதனன் அதற்கு விரோதமாகிய காரியத்திற்கு ஸாதனமாகக்கொண்டிருக்கிறான் இரண்டாவது உதாரணத்தில் சிவபெருமான் மதனனை எரித்தலாகிய காரியத்திற்கு ஸாதனமாகக் கொண்ட கண்ணென்ற பொருளை பெண்கள் அக்காரியத்திற்கு

விரோதமாக மதனனைப் பிழைப்பித்தலென்ற காரியத்திற்கு ஸாதனமாகக் கொண்டிருக்கிறார்கள்.

செய்யுள்.

ஒருகா ரியத்தை யெளிதா முடிக்கவுட் கொண்டதந்த
வருகா ரியத்தி னிகலுக் குமுட்கொள் வதுமவணி
பெருமான் சிறுவனென் றென்பா லருளப் பெறில்விலக்கற்
குரியனன் றென்ப துதாரண மெட்டம வுத்தமனே.

ஒரு காரியத்தை யெளிதாக முடிக்க ஒருவ னியந்தனை செய்ததை மற்றொருவன் அக்காரியத்திற்கு விரோதமாக முடிப்பிப்பதும் அவ்வணியே. இதற்குப் "பெருமான் சிறுவ" னென்பது முதலுதாரணம். இங்ஙனம் அரசன் போர்க்களத்துக்கு மகனை அழைத்துக்கொண்டு போகக் கூடாமைக்குக் காரணமாக நீ பாலனென்றுரைக்க அவன் அந்தப்பாலனாகை யிருக்குந் தன்மையே காரணமாகக் கொண்டுதான் தனிமையாக இருக்கக்கூடாதென்றும் கூடவே வரவேண்டுமென்றுங் கூறினான்.

செய்யுள்.

மிடியி னால்வெரு விப்பொருள்
கடியி லுத்தர்கள் கைவிடார்
முடிவி லப்பய முண்டுமே
படியி லீகுவன் பாரியே.

இங்ஙனம் உலோபி செலவு செய்யாமைக்குக் காரணமாகக் கொண்ட தாரித்திரியபயத்தையே தாதாக்களும் செலவு செய்வதற்குக் காரணமாகக் கொண்டிருக்கின்றார்கள்.

## சகூ-வது காரணமாலையணி.

(காரணமாலாலங்காரம்.)

செய்யுள்.

நேரமுன் முன்னு வெனினும்பின் பின்னு வெனினுந்திகழ்
காரண மேதொடர் பாக வருவது காணிலதன்
பேரது காரண மாலை யறத்திற் பெறும்பொன்னினால்
ஏருறு மீகையவ் வீகையிற் சீருறு மென்பதுமே.

அள்ளளும் பாவத்தி னற்பா வமுமிடி யான்மிடியும்
வள்ளன்மை யின்மையி னாலே யடைய வருமென்பதும்
விள்ளு முதாரணந் தேர்மும் முரசெமு வேலையையும்
எள்ளியிட் டார்க்க வளரெட் டமாநகர்க் கிந்திரனே.

பின்பின்னாக வருவனவற்றிற்குக் காரணமாக முன்முன்னாக வருவனவும் முன்முன்னாக வருவனவற்றிற்குக்காரணமாகப் பின்பின்னாக வருவனவுமாக இருக்கின்ற காரணங்களின் தொடர்ச்சி காரணமாலையணி. இதை வடநூலாரும் இப்பேராகவே கூறுவர். இவற்றுள் முந்திய இலககணத்துக்கு "அறத்திற் பெறும்பொன்" னென்பது முதலும், பிந்திய இலக்கணத்துக்கு "அள்ளளும்பாவத்தினு"லென்பது முதலும் நிரலே யுதாரணங்கள். இங்ஙனம் முந்தியஉதாரணத்தில் அற முதலிய காரணம் முன்முன்னாக விளங்குகின்றது. பிந்திய வுதாரணத்திற் பாவமுதலிய காரணம் பின்பின்னாக விளங்குகின்றது.

---

## சஎ-வது ஒற்றைமணிமாலையணி.

(ஏகாவளியலங்காரம்.)

செய்யுள்.

பின்பி னுறுவன வற்றிற்கு முன்முன் பிறங்குவரு
மென்ப விசேடிய மென்றும் விசேடண மென்றும்வர
வின்பெய ரொற்றை மணிமாலை கண்செவி யையதுதோண்
மன்னுமத் தோள்முழந் தாளுறு மாடியவ் வாறெனலே.

கன்றலில் யாதொன் றிடைக்கலப் பாற்றிசை காலமுமிர்
என்றவைக் கொப்ப ததிலென் மின்னி யிடுவனவன்
பொன்றிகழ் காந்தி யெவன்பா லமுதம் பொலியுமவன்
அன்றெதின் சங்கத் துதித்தா னெதுவு மவைகளிலே.

பித்தமென் றுகு மெவர்க ளதற்கவிப் பேறருள்வார்
நித்த மெதுவவர் கட்குயி ராகும் நிகழெதின்கு
ணத்தை யதுகொண்ட தோவது முன்ன நகுசிவமூர்த்
தத்தை நினையென் றுதாரண மெட்ட தலைத்துமன்னே.

பின்பின்னாக வருவது முன்முன்னாக வருவதற்கு விசேஷணமாவதும் முன்முன்னாகவருவது பின்பின்னாக வருவதற்கு விசேஷணமாவதும் ஒற்றைமணிமாலையணி. இதை வடநூலார் ஏகாவளியலங்காரமென்பர் இவற்றுள் முந்திய இலக்கணத்துக்குக் "கண்செவியை" யென்பது முதலும் பிந்திய இலககணத்துக்குக் "கன்றலில்" என்றும் "பித்தமென்றுகு" மென்றும் குளகமான இரண்டுபாடல்களும் நிரலே யுதாரணங்கள். அவற்றுள் முந்திய உதாரணத்தில் பின்பின்னாக விளங்கும் செவிமுதலியவைகள் முன்முன்னாக விளங்கும் கண் முதலியவைகளுக்கு விசேஷணமாக விளங்குகின்றன. பிந்திய வுதாரணத்தில் பின்பின்னாக

விளங்கும் சூரியன் முதலியவைகளுக்கு முன்முன்னாக விளங்கும் ஆகாய முதலியவைகள் விசேஷணங்களாக விளங்குகின்றன. "எதுவும் அவைகளிலே பித்தம்" என்பதில் அவைகளில் என்பதற்கு ஜலங்களில் எனவும், பித்தம் என்பதற்கு அச்சலங்களின் பித்தமாகிய அக்னியெனவும், பொருள்கொள்க. அப்பித்தம் என்று தீக்கொரு பெயர் என்பது வடநூல் வழக்கு.

---

## சஅ-வது மாலைவிளக்கணி.

(மாலாதீபகாலங்காரம்.)

செய்யுள்.

காட்டிய வொற்றை மணிமாலையைவிளக் கைப்பொருத்தி
நாட்டுதன் மாலை விளக்கா மதன னவள்மனத்துந்
தீட்டுறு மந்த மனத்தினுன் பாலினுஞ் சேரிருப்புப்
பூட்டிய தென்ப துதாரண மெட்ட புரமன்னனே.

முன்காட்டிய விளக்கணியையும் ஒற்றைமணிமாலையணியையுங் கலந்து கூறுவது மாலை விளக்கணி. இதை வடநூலார் மாலாதீபகாலங்கார மென்பர். இதற்கு "மதன னவள்மனத்துந் தீட்டுறு" மென்பதுமுத லுதாரணம். இங்ஙனம் மதனன் அவள் மனதிலென்ற வாக்கியத்திற்கும் அது உன் மனதில் என்ற வாக்கியத்திற்கும் இருப்புப் பூட்டுதலாகிய தருமத்தின் ஒற்றுமை யிருப்பமையால் விளக்கணியும், பின்னாக வருகின்ற அந்த மனத்தின் என்பதற்கு முன்னாகவிருக்கும் அவள் மனம் என்பது விசேஷணமாக இருப்பதால் ஒற்றைமணிமாலையணியும் விளங்குகின்றது.

செய்யுள்.

சதுரங்க தளநீபோர்க் களமருவி
சிலையிடைநாண் டானே பூட்ட

எதுவெதுதா னெதையெதைச்சேர் வுற்றதவை
கேள்சிலையோ டேவு மேவோ
டதிர்பகைவர் சிரமுமவை யொடுபுவியு
மஃதுடனே யருளார் நீயும்
பதிவுறுநின் னொடுபுகழு மஃதொடுமு
வுலகமுஞ்சம் பந்தந் தானே.'

இங்ஙனம் ஸம்பந்தமென்ற தரும ஒற்றுமை சிலையொ டுபகழி பகழியொடு பகைவர்சிரம் என்பது முதலிய வா க்கியங்களில் தனித்தனியாக ஸம்பந்தப்படுவதால் விளக் கணியும் அப்பகழி முதலியவைகள் பின்பின்னாக வருவன வற்றுக்கு விசேஷணங்களாக ஆவதால் ஒற்றைமணிமாலை யணியும் இருக்கின்றதெனக் காண்க.

---

## சஅ-வது மேன்மேலுயர்ச்சியணி.

(ஸாராலங்காரம்.)

செய்யுள்.

ஒன்றினுக் கேயொன்று மேன்மே லுயர்த லுரைத்திடவே
நின்றது மேன்மே லுயர்ச்சி பிரசம் நிறைமதுரம்
மன்ற வதினுஞ் சுதையதி னுங்கவி வாய்மொழியே
என்ற லுதாரணஞ் செங்கோற் குமாரெட் டிறையவனே.

பலபொருள்களுக்குள் ஒன்றைப்பார்க்கினு மொன் றுக்குக் குணத்தினுன் மேன்மையைக் கூறுவது மேன்மே லுயர்ச்சியணி. இதனை வடநூலார் ஸாராலங்கார மென் பர். இதற்குப் "பிரசம்நிறை மதுர" மென்பதுமுத லுதார ணம். இங்ஙனம் பிரசம் சுதை கவிவாய்மொழி இவை களுக்குள் மதுரமாகிய குணத்தால் ஒன்றைப்பார்க்கிலும் ஒன்றுக்கு மேன்மை கூறலாயிற்று.

செய்யுள்.

நரசிங்க மன்னவநம் மாலுதரத்
துலகுளவன் னவனுஞ் சேடன்
புரமிசைத்தூங் குவனவனு மொருபால்வா
ரிதியுறுவன் புகலு மத்தைக்
கரகுகர ரடக்கினரன் னவருமொரு
மின்மினிப்போற் காயந் தோன்று
வரதுவுன்சீர்ப் பெண்செவிக்கு வளைமலரோ
வெனப்பார்க்க வயங்கு மம்மா.

இங்ஙனம் மாலுதர முதலியவைகளுக்கு ளொன்றி னுமொன்றிற்குப் பெருக்கமாகிய குணத்தினுன் மேன்மை கூறலாயிற்று. இவ்விரண் டுதாரணங்களிலுங் கொண்டாடத்தக்க குணங்களின் மேன்மை கூறப்பட் டிருக்கின்றது. கொண்டாடத் தகாத குணங்களின் மேன்மையைக் கூறுவதற் குதாரண மியாதெனில்,

செய்யுள்.

சருகி னும்பஞ்சி லேசமப் பஞ்சினு
மிரவு ளோனுமி லேசம வன்றனை
யருகு காலுற் றெடாமையெ தாயினுந்
தருக வென்ப னெனும்பயத் தாலன்றே.

இங்ஙனம் சருகு, பஞ்சு, இரப்போன் இவைகளு ளொன்றிற்கொன்று இலேசமென்ற புன்குணத்தினுல் மேன்மை கூறலாயிற்று. இருமைக்குணத்தினு லொன்றி லொன்றுக்கு மேன்மைகூறுவ தெவ்வாறென்றால்,

செய்யுள்.

குன்றுபெரி தாமந்தக் குன்றினுஞ்ச முத்திரமே
நன்றுபெரி தச்சமுத்தி ரத்தினும்விண் — ணென்றும்
பெரிதுவிண்ணி னும்பிரம மேபெரித வாவே
யரிதெவற்றி னும்பெரிதம் மா.

இங்ஙனம் பிரமம்வரையினு மொன்றினு மொன்று கருப் பெருக்கமாகிய குணத்தினுன் மேன்மையும் ஆசை யாகிய வருணிப்புப் பொருளுக்குப் பிரமம்வரை கூறப் பட்ட பொருளைப்பார்க்கினும் பெருக்கம் வருணித்தமை யால் குறைவுங் கூறலாயிற்று.

---

## ருo-வது நிரல்நிரையணி.

(யதாஸங்கியாலங்காரம்.)

செய்யுள்.

வரிசையிற் கூறும் பொருள்கட்குச் சம்பந்த மாவமுறை
தெரிவுறச் சொல்லல் நிரல்நிரை தெவ்வைச் சிநேகனைத்து
யரைவெற்றி செய்யிர சஞ்செய்பங் கஞ்செய் யரசவென்ப
துரைசெ யுதாரணஞ் சீர்த்திக் குமாரெட்ட வுத்தமனே.

வரிசையாகக் கூறியிருக்கும் பலபொருள்களுக்கு முறை வழுவாது ஸம்பந்தத்தைக் கூறுவது நிரல்நிரை யணி. இதை வடநூலார் யதாஸங்கியாலங்கார மென் பர். இதற்குத்"தெவ்வைச்சிநேகனை" யென்பதுமுதலுதா ரணம். இங்ஙனந் தெவ்வை, சிநேகனை, துயரை என்ற மூன்று பொருள்களுக்கும் வெற்றிசெய், இரசஞ்செய், பங்கஞ்செய் யென்ற மூன்று பொருள்களுடன் நிரலே ஸம்பந்தங் கூறியிருக்கின்றது.

செய்யுள்

உலோப னைப்பொரு ளுஞ்சர ணுற்றதோ
வலாது கொல்கின்ற தோவவ னன்னதை
யிலாது தள்ளியி டாமலு மாநிலத்
திலேபு சித்திட லின்றியுங் காப்பனால்.

இங்ஙனம் பொருள் சரணமடைதலும் கொல்லுதலு மாகிய இரு பொருள்களும், தள்ளாமை புசியாமை

யென்ற இரு பொருள்களோடு நிரலே ஸம்பந்தப்படுத்திக் கூறப்பட்டிருக்கின்றன. இவ்வணியை வாமனாசாரியர் முதலியவர்கள் கிரமாலங்காரமென்று கூறுகிறார்கள்.

---

## ருக-வது முறையிற்படர்ச்சியணி.

(பரியாயாலங்காரம்.)

செய்யுள்.

ஒருபொரு ளுக்கு முறையாப் பலவா யுறுதலைச்சொல்
வருதன் முறையிற் படர்ச்சியிம் மாது வதனவொளி
மருமலர் தன்னை விடுத்து முழுமதி யையடுத்து
மருவிய தென்ப திலக்கிய மெட்ட மகாமன்னனே.

ஒரு பொருளை முறையாகப் பல ஆதாரங்களில் ஸம்பந்தப்படுத்திக் கூறுவது முறையிற் படர்ச்சியணி. இதனை வடநூலார் பரியாயாலங்கார மென்பர். இதற்கு "இம்மாது வதனவொளி" யென்றதுமுதத லுதாரணம். இங்ஙனம் மாதுவதனவொளி யென்ற வோர் பொருள் முறையாகத் தாமரைமலர் மதியென்ற பல ஆதாரங்களில் ஸம்பந்தத்தை அடைந்திருக்கின்றது. ஆயிற் பதும மலரில் ஸம்பந்த மடைந்ததைச் சொல்லாற் கூறவில்லை. அவ்வாறிருந்தாலும் மருமலர் தன்னை விடுத்தென்றுரைப்பது முதலில் அதில் ஸம்பந்தப்படாவிடில் பொருந்தாமையால் அவ்விதம் சொல்வது உசிதமில்லையாதலால் அதிற் ஸம்பந்தமுள்ள இவ்வணிக்குக் குறைவில்லை. இவ்வாறு தாற்பரியத்தினால் கிடைத்த ஸம்பந்தத்தின் விளககமுள்ள இடத்தில் இவ்வணி யென்றே காவியப்பிரகாசகிருத்தென்றவரும் உதாரணித்தார். அஃதாவது,

செய்யுள்.

சகனம்விடு மெலிவையிடை சார்ந்ததுகால் விடுசலன
நகுநடையை விழியடைந்த நறுமருமம் விடுவேறு

தகுபொருளி னிரண்டின்மை தனேமுகமுற் றதுஙினுறுப்
பகவியலின் வேற்றுமையை யேளனஞ்செய் ததுமாதே.

இங்ஙனம் சகனம் விடுமெலிவைவயிடை சார்ந்தது என்பது முதலிய இடஙகளில் மெலிம்வன்னும் பொருளைச் சகனம் விட்டதென்றமையால் 'அதற்குச சகனத்தின் முதலாவது ஸம்பந்தமும் இரண்டாவது இடையிற் ஸம்பந்தமுமாகிய முறையான பல பொருள் ஸம்பந்தமிருப்பதினுல் இவ்வணியே. ஒவ்வொரு பொருளிலுமிருக்கின்ற ஸம்பந்தத்தைச சொல்லாற் கூறியிருக்கின்ற இவ்வணி யெவ்வாறென்ருல்,

செய்யுள்

கான கூட மேகீமுன் கடலுற் றிருந்தாய் பின்னரன்றன்
கான மாதி குறுகியதிற் கலந்தா யிதுநாட் கோளமவங்
கான முதலாங் தேயமுறு கடிய கொடியார் வாக்கினிலெக
கான மொடுவாழ் வாய்மேன்மேற் கனமா யிருப்போ தினர்யாரே.

இங்ஙனம் காளகூடமென்ற ஓர் பொருளுக்குக் கடல் பரமசிவனின் கண்டம் கொடியோர்வாக்கு என்ற பல இடங்களிலிருக்கும் ஸம்பந்தத்தைச் சொல்லாகவே கூறியிருக்கின்றது. ஒரு பொருளுக்கு ஆதாரமாக இருக்கும் பல பொருள்களுக்குள் மேன்மேற் குறைவு தோன்றக் கூறுவதும் இவ்வணி. இதனை வடநூலார் ஸங்கோசபரியாய மென்பர். அஃதாவது,

செய்யுள்.

முதலி லேகுளிர் மூண்டு புவிபர
வுதலை மேவிப்பின் னுந்தருச் சாயையுற்
றதுவெ யோனுமுச் சந்தில் வரப்புன
லத்து ளேகரந் துற்றத நிவையால்;

இங்ஙனம் குளிரென்ற ஓர் பொருளுக்கு ஆதாரங்களாக இருக்கும் புவி தருச்சாயை புனலின் மத்தியம் என்ற பொருள்களுக்குமேன் மேலாகக் குறைவு விளங்குகின்றது.

ஓர் பொருளுக்கு முந்திய ஆதார ஸம்பந்தத்துடனே மற்றொரு ஆதாரத்திலும் ஸம்பந்தத்தைக கூறுவதும் இவ்வணி. இதனை வடநூலார் விகாஸபரியாயாலங்காரமென்பர். அஃதாவது

செய்யுள்.

கனக மேனிக் கரும்பிணைக் கண்ணினாய்
நினது விம்பக கனித்துடி மட்டிலும்
வனவி ராகத்தை வாய்ந்தத நிந்தனம்
மனதி டத்துமிப் போதறி வாமரோ.

இங்ஙனம் இராகமென்ற ஓர் பொருள் அதரமாகிய ஆதாரத்தில் ஸம்பந்தமுள்ளதாகவே மனதாகிய மற்றொரு ஆதாரத்திலும் ஸம்பந்தத்தைக் கொண்டிருக்கிறது.

செய்யுள்.

ஓரிடத் தேபல் பொருண்முறை யாக வுறுமதனைத்
தேரிடச் சொல்வது மவ்வணி யெங்குமுன் றீம்புனன்மீ
தூரிட வுற்றதங் கிந்நாட் புளின முறுமெனுமு
தாரணந் தேர்புக ழோங்கு மிளசைத் தயாபரனே.

ஒரு ஆதாரத்தின் முறையாக அனேகம் பொருள்களுக்கு ஸம்பந்தத்தைக் கூறுவதும் இவ்வணி. இதற்கு "எங்குமுன்றீம் புனன்மீ" யென்பதுமுத லுதாரணம். இங்ஙனம் நதியாகிற ஓர் ஆதாரத்தில் புனலின்பெருக்கு புளினமென்ற பல பொருளுக்கு முறையாக ஸம்பந்தமுறுதலைக் கூறியிருக்கின்றது.

செய்யுள்.

முன்னமுட லம்பிரியா திருந்தனம்பின் மூள்பிரியன்
மன்னியிடு பிரியையென்று யினமிதுநாண் மன்னவனே
இன்னதலை வன்றலைவி யாயினம்வே றிதினுமெது
பன்னுதல்வச் சிரவலிய கடுமெனுயிர்ப் பயனிதுவே.

இங்ஙனம் உடல்பிரியாமை பிரியன் பிரியையாக இருத்தல் தலைவன் தலைவியாக இருத்தல் என்ற பல பொருள்களுக்குத் தம்பதிகளாகிய ஓர் ஆதாரத்தின் முறையாக ஸம்பந்தத்தைக் கூறியிருக்கின்றது.

---

## ருஉ-வது மாற்றுநிலையணி.

(பரிவிர்த்தியலங்காரம்.)

செய்யுள்.

குறைவாம் பொருளைக் கொடுத்ததி கப்பொரு ளைக்கொளலுக்
கறைபே ருமாற்று நிலையணி மன்னொரு வம்புதவித்
தெறுநரின் செல்வமொண் டானென் றுதாரணஞ் செப்புவரான்
மறையொலி வாழ்த்தொலி சூழெட்ட மாநகர் மாமன்னனே.

குறைவான பொருளைச் செலவிட்டு அதிகப் பொருளைக் கொள்வது மாற்றுநிலையணி. இதை வடநூலார் பரிவிர்த்தியலங்கார மென்பர். இதற்கு மன்னொருவம் பென்பதுமுத லுதாரணம். இங்ஙனம் ஒரு அம்பைச் செலவிட்டுச் சத்துருவின் செல்வத்தை முழுமையும்பெற்றானென்று அற்பச் செலவினால் அதிகலாபத்தின் பெறுதலைக் கூறியிருக்கின்றது.

செய்யுள்.

அதிக வாண்டுள ளுகிமே லுலகடை சடாயு
முதிய னைக்குறித் தின்னும்வெந் துயரிடை மூழ்கிர்

பொதிபு மாசரை யாற்றள ருடலினைப் போக்கி
மதியின் காந்திகொள் புகழுடல் விலைகொடு வதிவான்.

இங்ஙனம் மூப்பென்னும் ஜரையி னுற்றளர்ந்த அற்ப சரீரத்தின் செலவால்மதிபோல் விளக்கமுற்ற அதிகப்புகழின் பெறுகலைக் கூறியிருக்கின்றது.

---

## ருக-வது ஒழித்துக்காட்டணி.

(பரிஸங்கியாலங்காரம்.)

செய்யுள்.

பொருளொன்றை யோர்கணகற்றிமற் றோர்கட் பொலியுமதென்
றுரைசெய்த லேயொழித் துக்காட்டு நேயத் துறுகுறைவு
தெரிதல் விளக்கிடை யல்லாது நன்னுதற் றேவியர்தம்
இருதயத் தின்றென் றிலக்கியந் தேர்வை யிளசைமன்னே.

ஓர் பொருளை ஓர் இடத்திலில்லை யென்று தள்ளி மற்றோரிடத்தி லிருக்கிறதாகக் கூறுவது ஒழித்துக்காட்டணி. இதை வடநூலார் பரிஸங்கியாலங்கார மென்பர். இதற்கு "நேயத்துறுகுறை" வென்பதுமுத லுதாரணம். இங்ஙனம் நேயக்குறைவென்ற ஓர் பொருளைத் தேவியரிருதயத்தி லில்லை யென்று தள்ளி அது விளக்கின்பாலிருக்கின்றதென்று கூறியிருக்கின்றது.

செய்யுள்.

உச்சயினி பட்டணத்தி லுற்பவமின் னார்விழியே
அச்சுருதி மார்க்க மதைக்கடக்கும்—மெச்சுமகா
காள னதுசிரத்திற் காண்பிறையொன் றேகோணல்
ஆளுகையை மேவினதம் மா.

இங்ஙனம் சுருதி மார்க்கத்தைக் கடத்தலாகிய ஓர் பொருள் மின்னார்விழியிலே யிருக்கிறதென்றும் கோணலென்ற ஒரு பொருள் மகாகாளனது முடியில் விளங்

கும் பிறையிலிருக்கிறதென்றும் கூறியிருக்கின்றது. முந்திய வுதாரணத்தில் ஓர் பொருளிலகற்றுதல் சொல்லால விளங்குகிறதென்றும் இவ்வுதாரணத்தில் தாற்பரியத்தினால் கிடைத்திருக்கின்றதென்றும் பிரிவு காண்க.

---

## ருசு-வது உறழ்ச்சியணி.

(விகல்பாலங்காரம்.)

செய்யுள்.

ஒத்திடு வல்ல விருபொருட் குத்தெவ் வுதிக்கவிகற்
பித்த லுறழ்ச்சி யணியா மெதிர்த்த பெரும்பகையீர்
மத்தக மேனுங் கொடுமர மேனு வணக்குமென்றி
சைத்த லுதாரண மெட்ட புரத்தைந் தருமன்னனே.

ஸம பலமுள்ள இரு பொருள்களுக்கு விரோதம் விளங்கக் கூறுவது உறழ்ச்சியணி. இதனை வடநூலார் விகல்பாலங்கார மென்பர். இதற்கு "எதிர்த்த பெரும் பகையீ"ரென்பதுமுத லுதாரணம். இங்ஙனம் ஸமாதானம் போர் என்ற இரு பொருள்களுக்கு ஓரே வேளையில் இருப்பு நேராதாகையால் அவ்விரு பொருள்களை மத்தக மேனும் கொடுமரமேனும் வணக்கு மென்று விகற்பப் படுத்திக் கூறியிருக்கின்றது.

செய்யுள்.

எப்பொழுதும் புயல்பொழியுஞ் சிகண்டிநட மேயியற்று
மிப்பொழுதென் மணவாள ரேனுங்கூற் றுவரேனுந்
தப்பிவிடா தென்றனதா குலமுடிவைத் தந்திடுவார்
துப்பினிதழ்ச் சகிமடவீர் கடந்திடுவீர் துயர்க்கடலே.

இங்ஙனம் நாயகனின் வரவிருக்குமாகில் மரணம் நேராது மரணம் நேருமாகில் நாயகனின் சேர்க்கை

யிராது என்று ஒன்றுக்கொன்று விரோதமுற்ற இவ்விரு பொருள்களையும் மணவாளரோனும் கூற்றுவரோனும் ஆகுல முடிவைத் தந்திடுவா ரென்று விகற்பப்படுத்திக் கூறி யிருக்கின்றது.

---

## ருரு-வது கூட்டவணி.

(ஸமுச்சயாலங்காரம்.)

செய்யுள்.

ஒருகாலத் தேகுழுக கொள்ளுந் தொழில்க ளுடன்படவே
தருமாறு கூட்ட வணிவேந்த னேநின் றரியலர்கள்
பொருவர் நசிவர் புரங்காட் டுவர்பயம் பூண்பரென
வருமா றுதாரண மெட்ட புரத்துவ ரோதயனே.

ஒரே வேளையிலுண்டாகும் பல தொழில்களின் கூட்டத்தைக் கூறுவது கூட்டவணி. இதை வடநூலார் ஸமுச்சயாலங்கார மென்பர். இதற்கு வேந்தனே நின்றரியலர்க ளென்பதுமுத லுதாரணம். இங்ஙனம் நசிதல் புரங்காட்டுதல் பயமடைதல் என்ற ஒரேவேளையினுண்டாகுஞ் சத்துருக்களின் றொழில்களின் சேர்க்கையைக் கூறியிருக்கின்றது.

செய்யுள்.

சற்குணநீ யுதவியபே ரன்பாகும்புத்
தம்பையிரு தயங்கொளும்பெண் செயலைக்கேளா
யற்பகலுஞ் சயனிகின் றுள்வறகூழி
யடைகின்றாள் வாடுகின்றாள் புலம்புகின்றாள்
பொற்பழிகின் றாள்சலனிக் கின்றுண்மத்தம்
பொருந்துகின்றாள் புரளுகின்றாள் துவளுகின்றாள்
வற்பழிகின் றுணொளிகின் றாள்மூர்ச்சை
வாய்கின்றாள் தாபமிகத் தேய்கின்றாளே.

இங்ஙனம் சயனித்தல் முதலிய ஒரே வேளையிலுண்டான பலதொழில்களின் கூட்டத்தைச் சேர்த்துக்கூறி யிருக்கின்றது. இவற்றுள் சிலதொழில்கள் *அற்பகாலபேதத்தினால் உண்டான போதிலும் அனேக தாமரையிதழ்களைச்சேர்த்து வைத்து ஊசியாற்குத்தினால் ஒவ்வொரு இதழிலும் கொஞ்சங் கொஞ்சங் காலபேதத்தாற் குத்தப்பட்டிருந்தாலும் ஒரேவேளையிற் குத்தப்பட்டதாகவே கொள்வதுபோல் காலபேதத்தைக் கொள்ளாமல் விரகத்தின் பெருக்கத்தை விளக்குகின்றன.

செய்யுள்.

பலகா ரணங்கள் தனித்தனி முக்கியம் பற்றியொரு
வலகா ரணத்தை முடித்தலு மவ்வணி மாகுலமு
நலகா மரும்வய துங்கல்வி யுஞ்செல் வமுமிவனுக்
கிலகா மகிழ்விக்கு மென்ப துதாரண மெட்டமனே.

ஓர் காரியத்தைப் பலகாரணஙகள் தாந்தாம் முக்கியமாகவிருந்து முடிப்பதுமவ்வணி. இதற்கு "மாகுலமு நலகாமரு" மென்பதுமுத லுதாரணம். இஙஙனம் மகிழ்விப்பாகிய காரியத்தைக் குலம் காமர் வயது கல்வி செல்வம் என்ற பலகாரணங்கள் தாந்தாம் முக்கியமாகக் களத்தில் கபோதப் பறவைகள் போல் சேர்ந்து முடிகின்றன. நலகாமர்-நல்ல அழகு.

செய்யுள்.

தனதுகொடைத் தொழிலையுரை யாமைதன்னிற்
சாரதிதிக் கியற்றிமென் பிகன்றிடாமை
கனகமதாற் கருவமரு வாமைமற்றோர்
காசைநிகழ்த் தாமையவை யிடையேதான்செய்
வனவுதவி களைவெளியி டாமைதன்பான்
மற்றவர்செய் யுதவியினை மறைப்பிலாமை
பனுவலிற்பற் றுடைமைநன்மா னுடர்தம்மேன்மைப்
பாட்டைநனி விளக்குவவாம் பார்க்குங்காலே.

